தஞ்சை சரசுவதி மகால் வெளியீடு - 152

வைத்தியநாத தேசிகர் இயற்றிய

# இலக்கண விளக்கம்

## பொருளதிகாரம் - செய்யுளியல்

*பதிப்பாசிரியர் :*
பண்டித வித்துவான்,
தி. வே. கோபாலையர், எம். ஏ., பி. ஓ. எல்.
திருவையாறு.



தஞ்சை சரசுவதி மகால் நிருவாகக் கமிட்டியினருக்காகக்
கௌரவ காரியதரிசி,
*வித்துவான்* அ. வடிவேலன்
அவர்களால் வெளியிடப்பட்டது.

கி. பி. 1974 ] [ விலை ரூ. 16-00

# வெளியிடுவோர் உரை

இலக்கண விளக்கம் என்னும் இவ்வுயரிய தமிழ் இலக்கண நூல் இயற்றமிழ் இலக்கணங்களை மூன்று பகுதிகளாக முறையாக உரைப்பதாகும். தொல்காப்பிய நெறியை வகைப் படுத்தித் தந்த பெருமை இந்நூலுக்குண்டு. நூலகம் இதுவரை எழுத்ததிகாரம், சொல்லதிகாரம் ஆகிய இரு பகுதிகளையும், மூன்றும் பகுதியாகிய பொருளதிகாரத்தில் புறத்திணையியலையும், அணியியலையும் வெளியிட்டுள்ளது. இப்பகுதியின் அகத்திணை யியலை இரண்டு தொகுதிகளாக அச்சிட்டுள்ளோம். அவைகள் விரைவில் வெளிவரவிருக்கின்றன. தற்போது வாசக அன்பர்களுக்கு செய்யுளியல் பிரிவை அளித்து மகிழ்கிறோம். இப்பகுதியின் தொடர்ச்சியான பாட்டியல் அச்சகத்திற்கு அனுப்பப்பட்டுள்ளது.

இந்நூலாசிரியர் வைத்தியநாத தேசிகர் அவர்கள் பதினேழாம் நூற்றாண்டில் வாழ்ந்த முப்பெரும் இலக்கணப் புலவர்களுள் தலையாயவர். தருமை ஆதீனத்தைச் சார்ந்த தமிழ்ப் புலவர் பரம்பரையில் தோன்றிய இவர் தென்னாட்டை ஆண்ட நாயக்க மன்னர்களின் கவர்னர் ஒருவரின் மக்களுக்கு சிலகாலம் கல்வி புகட்டி வந்திருக்கிறார். இவர் இலக்கணமேதை, கவிஞர், அறிஞர், ஆசிரியர், இத்தகு பெருமை சான்ற இவருடைய புலமையாலும் விடாமுயற்சியாலும் விளைந்த இந்நூல் இன்று நமக்கு உறுதுணையாயுள்ளது.

இந்நூலக வாயிலாக இலக்கண நூல்களை வெளியிட விளைந்தபோது, பல்வேறு ஒப்பு நூல்களை ஆதாரம் காட்டியும்,

விரிவான முன்னுரையும், போதிய விளக்கமும், அரும்பத விளக்கமும், பல பிற்சேர்க்கைகளும் தந்து பதிப்பித்தால் மொழி நூல் ஆய்வாளருக்கும், தமிழ் விரும்பி கற்கும் சான்றோர்களுக்கும், மாணவ அன்பர்களுக்கும் உதவியாய் இருக்குமென முன்னாள் மதிப்பியற் செயலாளர் அவர்கள் வெளியிட ஆவன செய்தவாறே இப்பதிப்பு வெளிவருகிறது.

இந்நூற் வெளியிட ஆதாரமாக அமைந்தது புகழ்மிகு தொழிலதிபரும், தமிழ்க் காவலருமான உயர்திரு பொள்ளாச்சி **ந. மகாலிங்கம்,** பி.எஸ்ஸி., எம்.ஐ.இ., அவர்கள் நூலகத்திற்கு மனமுவந்து அளித்த கையெழுத்துப் படியேயாகும். இப்படிப் பலநாட்களுக்குமுன் அச்சிட்ட பழைய நூல் ஒன்றிலிருந்து எழுதப்பட்டுள்ளது. அன்னாருக்குப் பெரிதும் நன்றிக் கடப்பாடுடையோம்.

இதனை மிகச் சிறப்பாக வகுத்தெழுதிப் பதிப்பித்துதவிய பண்டித வித்துவான் திரு. **தி. வே. கோபாலய்யர்,** எம். ஏ., பி. ஓ. எல்., அவர்கட்கும், செம்மையோடு வெளிவரத் தக்க முறையில் செயலாற்றிய இந்நிலைய பாதுகாவலர் டாக்டர் **சி. எஸ். வேங்கடேஸ்வரன்,** எம்.ஏ., பி.எச்.டி., அவர்கட்கும், துணைநூலகர் திரு. **எம். சீராளன்,** பி. ஏ., அவர்கட்கும், காலத்தோடு கவினுற அச்சிட்டுத் தந்த **குடந்தை ஜெமினி அச்சக உரிமையாளர்** அவர்களுக்கும் கனிந்த உள்ளத்தோடு நன்றிகூறிப் பாராட்டுகின்றோம்.

இத்தகைய பணிகளுக்கு ஆக்கமளித்துப் பேணிவரும் நமது தமிழக அரசை நன்றியோடு போற்றி மகிழ்கின்றோம்.

தஞ்சாவூர்
*24—2—1974*

**அ. வடிவேலன்**
கௌரவ காரியதரிசி
சரசுவதிமகால் நூல் நிலையம்

# பதிப்பாசிரியர் முகவுரை

பதினேழாம் நூற்றாண்டில் வாழ்ந்த இலக்கணப் பெரும்புலவர் மூவருள் முதலாமவராகிய திருவாரூர் **வைத்தியநாத தேசிகர்** இயற்றிய இலக்கண விளக்கத்தின் முப்படலங்களுள் முதலிரண்டு படலங்களும், பொருட் படலத்தின் முதல் மூன்று இயல்களும் பதிப்பிக்கப்பெற்ற முறையை ஒட்டியே, முன்னையவற்றிற்குப் பயன்படுத்தப் பெற்றன போன்ற நூல்களின் துணையைக்கொண்டே அப்படலத்தின் நான்காம் இயலாகிய செய்யுளியல் பதிப்பிக்கப்பெற்று உள்ளது. எடுத்துக்காட்டுப் பாடல்களின் போந்த பொருள் தேவையின்மையின் எழுதப்பட்டிலது. யாப்புப்பற்றிய அருஞ்செய்திகள், ஒத்த கருத்துடைய பிற யாப்பு நூல்களின் நூற்பா மேற்கோள், சிதம்பரச் செய்யுட் கோவைச் செய்யுட்கள், தேவையான அகர வரிசைகள் இவற்றோடு, இடைக்கால யாப்பு நூல்களின் நூற்பாக்களைத் திரட்டி இச்செய்யுளியல் முறையில் அமைத்த பிற்சேர்க்கையையும் இணைத்துப் பதிப்பித்தல் வேண்டும் என்று தஞ்சை சரசுவதிமகாலில் கௌரவ காரியதரிசியாயிருந்த முதுபெரும்புலவர் திருவாளர் **நீ. கந்தசாமிப் பிள்ளை** அவர்கள் இட்ட ஆணையை ஒட்டியே இவ்வியலும் பதிப்பிக்கப்பட்டுள்ளது.

இச்செய்யுளியல் விரைவில் செம்மையாக வெளிவருவதற்குத் தேவைப்பட்டவற்றை எல்லாம் அகமகிழ்வோடு செய்துவரும் தஞ்சை சரசுவதிமகாலின் இந்நாள் மதிப்பியற் செயலர் திருவாளர் வித்துவான் **அ. வடிவேலனார்** அவர்களுக்கும், அந்நூல்நிலையத் துணைக்காப்பாளர் திரு. **சீராளன்,** B. A. அவர்களுக்கும் என் உளங்கனிந்த நன்றியைத் தெரிவிக்கும் கடப்பாட்டினேன்.

இப்பதிப்பிற்கு வழக்கம்போல் பல்லாற்றானும் உதவியுள்ள என் உடன்பிறந்தோர்களும் பழுத்த தமிழ்ப்புலமை வாய்ந்தவர்களுமாகிய திரு. வித்துவான் **கங்காதரன்,** M. A. உள்ளிட்ட நால்வருக்கும் என் கனிவான ஆசிகள்.

இந்நூலை விரைவில் செம்மையாகப் பதிப்பித்து அளித்துள்ள **குடந்தை ஜெமினி அச்சகத்தின்** உரிமையாளருக்கும், அந்நிறுவனத்தில் பணிபுரியும் அலுவலர் அனைவருக்கும் என் நன்றி.

என் அயர்வான் இப்பதிப்பில் ஏற்பட்டிருக்கக் கூடிய பிழைகளைப் பொறுத்தருளுமாறு தமிழ் கூறு நல்லுலகத்துக்கு என் பணிவான வேண்டுகோள்.

தோன்றாத் துணையாய் என்னை இந்நற்பணிக்கண் உய்க்கும் ஐயாறன் அடியிணை இறைஞ்சி என் தமிழ்ப் பணியினைத் தொடர்கிறேன்.

46, மேலமடவளாகம்,
திருவையாறு.

தி. வே. கோபாலையர்.

# உள்ளுறை

★

# இலக்கண விளக்கம்

## பொருளதிகாரம் - செய்யுளியல்



### தோற்றுவாய்

தமிழின் இயல் இசை நாடகம் என்ற முக்கூறுகளையும் பற்றிய விரிவான முதல் நூல் ஒன்று அகத்தியனாரால் இயற்றப் பட்டது என்பது பேராசிரியர் நச்சினார்க்கினியர் முதலிய சான்றோர்களின் கருத்தாகும். தொல்காப்பியனார் முதலாயினார் இயற்றமிழைத் தனியே கொண்டு இலக்கண நூல் யாத்தமை போலவே சான்றோருள் ஏனையோர் இசைத்தமிழுக்கும் நாடகத் தமிழுக்கும் தனித்தனி நூல் யாத்தனர் என்பதும் சான்றோர் கருத்தாகும்.

அகத்தியத்துள் செய்யுள் இலக்கணம் மிக விரிவாகக் கூறப்பட்டமையின் அதனை மிகச் சுருக்கி வழிநூல் இயற்றுதல் இயலாது போயினமையின், தொல்காப்பியனார் செய்யுள் இலக்கணத்தைச் சற்று விரிவாகவே இயற்றியுள்ளார் என்பது பேராசிரியர் கருத்தாகும். (தொல். பொ. 650) அச் செய்யுள் இலக்கணத்தைப் பல்காப்பியனார் வகுத்துரைத்தார் என்பதும், அதனைக் காக்கைபாடினியார் தொகுத்து உரைத்தார் என்பதும்,

> 'தொல்காப் பியப்புலவர் தோன்ற விரித்துரைத்தார்
> பல்காய னார்வகுத்துப் பன்னினார் - நல்யாப்புக்
> கற்றார் மதிக்கும் கலைக்காக்கை பாடினியார்
> சொற்றார்தம் நூலில் தொகுத்து'

என்ற வீரசோழியவுரை எடுத்துக்காட்டுப்பாடலால் (152) போதருகின்றன.

இக்காலத்தில் யாப்பருங்கலம், யாப்பருங்கலக்காரிகை என்ற யாப்பு நூல்களே பெரிதும் பயிலப்பட்டு வருகின்றன. தொல்காப்பியத்துக்கும் இந்நூல்களுக்கும் இடைப்பட்ட காலத்தில் தமிழில் தோன்றிய யாப்பு நூல்கள் பலவாகும். அந்நூல்களிலிருந்து மிகப்பல நூற்பாக்கள் உரையாசிரியர்களால் மேற்கோளாக எடுத்துக்காட்டப்பட்டுள்ளன. இம்மேற்கோள் நூற்பாக்களில் நூற்றுக்கணக்கானவை நூற்பெயர் அறியப்படா நிலையினவாய் உள்ளன. இன்ன இன்ன நூல்களைச் சார்ந்தவை என்ற குறிப்புடன் எடுத்துக் காட்டப்பட்டுள்ள நூற்பாக்களை நோக்க அவிநயம், காக்கைபாடினியம், சிறுகாக்கைபாடினியம், நத்தத்தம், பல்காயம், மயேச்சுரம், கடிய நன்னியம், சங்க யாப்பு, நக்கீரர் அடிநூல், நல்லாதம், நல்லாறம், நாலடி நாற்பது, பரிமாணம், பனம்பாரம், பன்னிரு படலம், பாட்டியல் மரபு, வாய்ப்பியம் முதலிய பல நூல்கள் தொல்காப்பியத்துக்கும் யாப்பருங்கலத்துக்கும் இடைப்பட்ட காலத்தில் தமிழகத்தில் தோன்றியிருக்கக் கூடும் என்பதனை உணர்கிறோம்.

தொல்காப்பியம் மாத்திரை எழுத்தியல் அசைவகை முதலாகச் செய்யுள் உறுப்பு முப்பத்து நான்கு என்றும், ஐவகை அடிகளின்விரி அறுநூற்று இருபத்தைந்து என்றும், தொடை வகைகள் ஐஈராயிரத்து ஆறைஞ் ஞூற்றொடு தொண்டு தலையிட்ட பத்துக் குறை எழுநூற்று ஒன்பஃது என்றும் குறிப்பிடுகிறது.

ஆசிரியம், அதன் நடைத்தாய வஞ்சி, வெண்பா, அதன் நடைத்தாய கலி, கலப்புப் பாடல்களாகிய மருட்பா, பரிபாடல் என்ற அறுவகைப்பட்ட பாக்களே தொல்காப்பியத்தில் விளக்கப்பட்டுள்ளன. வெண்பாவில் நெடுவெண்பாட்டு குறுவெண்பாட்டு என்ற பகுப்புக்களே பெயர் சுட்டப்பட்டுள்ளன. ஆசிரியப்பாவின் சீர்தனை பற்றிப் பேசுமிடத்து நேரிசை ஆசிரியப்பா, இணைக்குறள் ஆசிரியப்பா என்ற பகுப்புக்கள் சுட்டப்படினும் அவற்றுக்குத் தனியே பெயர் குறிப்பிடப்படவில்லை. கலிப்பா – ஒத்தாழிசைக் கலி, கலிவெண்பாட்டு, கொச்சகம், உறழ்கலி என்ற நான்கு

பகுப்புக்களை உடையதாக விளக்கப்பட்டுள்ளது. வஞ்சிப்பாவின் பகுப்பு எதுவும் கூறப்படவில்லை. தாழிசை, துறை, விருத்தம் என்ற பாவினங்களின் பெயர்களையே தொல்காப்பியத்தில் காண முடியவில்லை. பாஇனங்கள் போல்வன பண்ணத்தி என்ற பெயராலேயே உணர்த்தப்படுகின்றன.

பிற்பட்ட யாப்பிலக்கண நூல்களாகிய அவிநயம் முதலியன பாஇனங்களாகிய தாழிசை, துறை, விருத்தம் என்பன பற்றிப் பேசுகின்றன. இந்தப் பாகுபாடுகள் யாவும் நிரம்பா இலக்கணத்தன என்று கொள்ளும் நச்சினார்க்கினியர் இவற்றை எல்லாம் யாப்பினும் பொருளினும் வேறுபட்ட கொச்சக ஒருபோகு என்றே குறிப்பிடுகிறார்.

பிற்காலத்தெழுந்த அவிநயம் முதலிய நூல்களின் பாப்பாவினப் பகுப்பை அடியொற்றியே யாப்பருங்கலமும் யாப்பருங்கலக் காரிகையும் இயற்றப்படவே, அவற்றிற்குச் சிறந்த உரையும் வரையப்பட்டது. நூலும் உரையும் சிறந்து தோன்றிய இவ்விரு நூல்களுள்ளும் யாப்பருங்கலக்காரிகையே நன்மக்களால் பெரிதும் பயிலப்படுவதாயிற்று. இவற்றைத் தவிர அவிநயம் முதலியன வழக்கிறந்துவிட்டன.

தொல்காப்பியம் தனக்குரிய தனித் தன்மையோடு இன்றும் நிலைபெற்றிருப்பினும் அதன் செய்யுளியலைப் பின்பற்றிப் பாடல் வரைவார் இன்றிலர். விருத்தங்களும் தாழிசைகளும் வீறு பெற்றெழுந்தபின் பன்னூறு பிரபந்தங்கள் அவற்றின் யாப்பில் இயற்றப்படவே, தொல்காப்பியம் கூறும் பாவகைகள் அருகியே பின்பற்றப்படுவவாயின.

வீரசோழியம் – யாப்பருங்கலக்காரிகை குறிப்பிடும் செய்திகளோடு வடமொழி மரபை ஒட்டிச் சில செய்யுள் வகைகளைக் குறிப்பிடுகின்றது. அவற்றில் இலக்கணங்கள் நன்கு உணரப் படுமாறில்லை. அவற்றைப் பின்பற்றிச் செய்யுள்பாடுவாரும் இலர். நூலுள் தேவைப்படும்போது அவை எடுத்துக் காட்டப்படும்.

பிற்பட்டெழுந்த இலக்கண விளக்கம், தொன்னூல் விளக்கம், முத்துவீரியம் என்பன யாப்பருங்கலக் காரிகை கூறும் கருத்துக்களை நூற்பா யாப்பில் சிற்சில மாற்றங்களோடு நுவல்வனவாம்.

பிற்காலத்து எழுந்த பலவகைச் சந்தவிருத்தங்கள், சிந்து, வண்ணங்கள், கும்மி முதலிய இசைப் பாடல்கள், நாடோடிப் பாடல்கள் இவற்றிற்குத் தனியே இலக்கணம் வகுக்கும் நூல் எதுவும் பழக்கத்தில் இருப்பதாகத் தெரியவில்லை. வீரசோழியம் குறிப்பிடும் சந்தம் பற்றிய செய்திகளும் தெளிவாக இல்லை.

இக்காலக் கவியரங்கங்களில் பலவகைப்பட்ட செய்யுள்கள் பாடப்படுகின்றன. இவற்றை எல்லாம் இலக்கியமாகக் கொண்டு வரையப்படவேண்டிய யாப்பிலக்கண நூல் ஒன்றும் தமிழ் மக்களுக்குத் தேவையாக உள்ளது. இந்நிலையில் இவ்விலக்கண விளக்கப் பொருளதிகாரத்தின் நான்காம் இயலாகிய செய்யுளியலை நோக்குவோம். பெயர் உணரப்பட்ட இடைக்கால யாப்பிலக்கண நூற்பாக்கள் பிற்சேர்க்கையாக அமைக்கப் பெற்றுள்ளன.

—(✻)—

# செய்யுளியல் - அமைப்பு



பொருளதிகாரத்தை அகத்திணையியல் புறத்திணையியல் அணியியல் செய்யுளியல் பாட்டியல் என்ற ஐந்து இயல்களைக் கொண்டதாக அமைத்துள்ள ஆசிரியர், செய்யுளியலில் யாப்பருங்கல விருத்தி நூற்பாக்கள் பலவற்றை உருமாற்றமலும் சிறிது திரித்தும் கொண்டுள்ளார் எனினும், செய்யுளியல் அமைப்பைப் பெரும்பான்மையும் யாப்பருங்கலக்காரிகையை ஒட்டியே கொண்டுள்ளார். எடுத்துக்காட்டுப்பாடல்களில் பெரும்பான்மையன யாப்பருங்கலக்காரிகையின் எடுத்துக்காட்டுப் பாடல்களே.

செய்யுள் உறுப்புக்கள் எழுத்து அசை சீர் தளை அடி தொடை என்ற ஆறும் என்பதும், அவற்றான் ஆய செய்யுட்கள் பா எனவும் இனம் எனவும் இரு வகைப்படும் என்பதும் தொடக்கத்தில் கூறப்பட்டுள்ளன. பின் செய்யுள் உறுப்புக்களாகிய எழுத்து முதலியவற்றின் இலக்கணம் பழைய நூற்பா ஒன்றனைக்கொண்டு நவிலப்படுகிறது. எழுத்தின் இலக்கணம் எழுத்ததிகாரத்தில் கூறப்பட்டது என்று மாட்டேற்றான் நூற்பாவில் ஓதிய ஆசிரியர் எழுத்திலக்கணம் பற்றிய செய்திகளை இவ்யாப்பிற்கு ஏற்ப உரையில் விரிவாக விளக்குகிறார்.

அடுத்த நூற்பாவில் அசை, நேர் நிரை என இருவகைப்படும் என்று கூறிப் பின் அடுத்த நூற்பாவில் நேரசை நான்கும் நிரையசை நான்கும் இவை என்பதனை விளக்குகிறார்.

சீர் இயற்சீர் உரிச்சீர் பொதுச்சீர் என மூவகைப்படும் என்று கூறி அடுத்த நூற்பாவில் சீர்கள் ஆமாற்றையும் அவற்றின்

எண்ணிணையும் அவை செய்யுட்கு உரியவாமாற்றையும் விளக்கி, உரையில் எடுத்துக்காட்டுக்களும் தருகிறார். பின் தளைவகை இத்துணைய என்று தெரிவிக்கும் ஆசிரியர் அடுத்த நூற்பாவில் எழுவகைத் தளைகளையும் விளக்கி உரையில் எடுத்துக்காட்டுக்கள் தந்து சிறப்புறச் செய்கிறார்.

அடுத்து ஐவகை அடிகளின் பெயர்களும் குறிக்கப் படுகின்றன. பின் அவ்வடிகள் அமையுமாறு விளக்கப்படுகிறது. அந்நூற்பா உரையுள் தேவையான எடுத்துக்காட்டுக்கள் தரப் பெற்றுள்ளன.

அடுத்த நூற்பாவில் அடிகள் பாக்களுக்கும் பா இனங்க ளுக்கும் உரியவாமாற்றை விளக்கி உரையில் எடுத்துக்காட்டுக் களும் தருகிறார்.

பின் மோனை முதலிய ஐவகைத் தொடையும் இணை முதலிய முப்பத்தைந்து தொடை விகற்பங்களும் விளக்கிக் கூறப் பட்டுள்ளன. அடுத்த நூற்பாவில் மோனை முதலிய ஐவகைத் தொடை இலக்கணமும், இணை முதலிய தொடை விகற்பங்களின் இலக்கணமும் கூறும் ஆசிரியர் உரையில் வேண்டிய எடுத்துக் காட்டுக்களைக் குறிப்பிட்டுள்ளார்.

அடுத்த நூற்பாவில் அருகி வழங்குவனவும் விகற்பம் இல்லனவும் ஆகிய செந்தொடை இரட்டைத் தொடை அந்தாதித் தொடை என்பனவற்றைக் குறிப்பிடும் ஆசிரியர், அதற்கு அடுத்த நூற்பாவில் அவற்றின் இலக்கணங்களை விளக்கிக்கூறி எடுத்துக் காட்டும் தந்துள்ளார்.

வெண்பா முதலிய பாக்கள் நான்கு என்று குறிப்பிடும் ஆசிரியர், அடுத்த நூற்பாவில் பாவினம், தாழிசை துறை விருத்தம் என்ற மூன்று பகுப்பு உடைமையை விளக்கியுள்ளார்.

அடுத்து வெண்பாவின் ஓசையும் அமைப்பும் கூறப்படுகின்றன. உரையில் நேர்அசை நிரைஅசை நேர்பசை நிரைபசை முற்றுகர

ஈற்று நிரை நேர் அசைகள் பற்றிய எடுத்துக்காட்டுக்களும், ஏந்திசை தூங்கிசை ஒழுகிசை இலக்கணங்களும் அவற்றின் எடுத்துக்காட்டுக்களும் தரப்பட்டுள்ளன.

வெண்பாவகை பொதுவகையான் ஐந்து என்பது அடுத்த நூற்பாவில் கூறப்படுகிறது. அடுத்த நூற்பா வெண்பாவின் வகைகள் பற்றிய இலக்கணம் நுவல்கிறது. உரையில் எடுத்துக் காட்டுக்கள் பலவும் தரப்பட்டுள்ளன. அடுத்த நூற்பாவில் வெள்ளொத்தாழிசை, வெண்டுறை, வெளிவிருத்தம் என்பன கூறும் ஆசிரியர் உரையில் எடுத்துக்காட்டுக்கள் தந்துள்ளார்.

பின் ஆசிரியப்பா ஆமாறு சுட்டப்படுகிறது. அதன் ஈற்றெழுத்தாம் ஆற்றலுடையன இவை இவை என்பதும் நவிலப்படுகிறது. உரையில் அவற்றிற்குரிய எடுத்துக்காட்டுக் களையும் காணலாம்.

அடுத்த நூற்பாவில் ஆசிரியப்பாவின் வகைகள் நான்கு என்று சுட்டிய ஆசிரியர், அடுத்து அவற்றின் இலக்கணத்தை விளக்கி உரையில் எடுத்துக்காட்டுக்களும் தருகிறார்.

அடுத்த நூற்பாவில் ஆசிரியத்தாழிசை, துறை, விருத்தம் என்பனவற்றை விளக்கி உரையில் அவற்றிற்கு எடுத்துக்காட்டுக் களும் தருகிறார்.

பின் கலிப்பா இலக்கணம் கூறும் ஆசிரியர், அடுத்து, அது மூன்று வகைப்படுமாற்றை விளக்கி, அடுத்த நூற்பாவில் அவற்றின் இலக்கணத்தைத் தெரிவிக்கிறார். உரையில் கலிப்பா வகைகளுக்கு எடுத்துக்காட்டுக்கள் தரப்பட்டுள்ளன.

பின் கலித்தாழிசை கலித்துறை கலிவிருத்தம் என்பனவற்றின் இலக்கணம் கூறும் ஆசிரியர் உரையில் எடுத்துக்காட்டுக்களும் தருகிறார்.

வஞ்சிப்பாவின் இலக்கணம் கூறி எடுத்துக்காட்டுக்கள் தரும் ஆசிரியர், அடுத்த நூற்பாவில் வஞ்சிப்பா இனங்களின் இலக்கணம் கூறி உரையில் எடுத்துக்காட்டும் தந்துள்ளார்.

தளை சீர் வண்ணம் என்பன கெடவரின் குற்றியலிகரமும் குற்றியலுகரமும் அளபெடையின் குற்றுயிரும் அலகு பெறு எனவும், ஐகாரக் குறுக்கம் குற்றெழுத்தியல்பிற்றாய் நிற்கும் எனவும், ஆய்தமும் ஒற்றும் அளபெடுப்புழி அலகு பெறும் எனவும், ஈரொற்று மூவொற்றாயினும் அளபு எழாவழி அலகு பெறா எனவும், குறிப்பிடும் ஆசிரியர். உரையில் எடுத்துக் காட்டுக்கள் தந்துள்ளார்.

அடுத்து விட்டிசைக்குமிடத்தே தனிக்குறில் நேர்அசை ஆகும் என்பதும், குறில் நெடில் அளபெடுப்பின் நிரைநேர் ஆகும் என்பதும், உரையில் காட்டப்படும் எடுத்துக்காட்டுக்களோடு விளக்கப்படுகின்றன.

நிரைநடுவாகிய வஞ்சி உரிச்சீர் கலிப்பா அகவற்பா என்பன வற்றில் வாரா ; கலிப்பாவில் நேர் ஈற்று இயற்சீர் வாரா ; ஏனைய எல்லாம் எவ்வகைச் சீரொடும் மயங்கும்; எவ்வகைத் தளையும் மயங்கப்பெறும்; வெண்பாவில் நிரை ஈற்று உரிச்சீரோ பிற தளைகளோ வாரா – என்ற சீர்தளைகட்கு ஆவதோர் இலக்கணம் கூறப்படுகிறது.

இயற்சீர் வெள்ளடியும் வஞ்சி அடியும் அகவலில் பெரும்பாலும் மயங்குதலும், வெண்சீர் வெள்ளடியும் கலியடியும் ஒரோவழி அகவலில் கலத்தலும், வெண்பா அடியும் ஆசிரிய அடியும் கலியுள்ளும், அகவலும் கலியும் வெண்பாவும் ஒரோவழி வஞ்சியுள்ளும் கலத்தலும், ஐஞ்சீர் அடி கலிப்பாவினுள் அருகி வந்து சேருதலும், ஆகிய செய்தி நீக்கும் நிலைமை இன்று – என்று அடி மயக்கம் கூறப்படுகிறது. ஏற்ற எடுத்துக்காட்டுக்களும் உரையில் உள்ளன.

வெண்பாவிற்குச் சிறுமை ஈரடி, ஆசிரியத்திற்கும் வஞ்சிக்கும் சிறுமை மூன்றடி, கலிப்பாவிற்குச் சிறுமை நான்கடி, வெண்பாவிற்குச் பெருமை பன்னிரண்டடி, ஆசிரியப்பாவிற்கும் வஞ்சிப்பாவிற்கும் பெருமை ஆயிரம் அடி, கலிப்பாவிற்குப் பெருமைக்கு அடி வரையறை இன்று - என்ற அடி வரையறை அடுத்துக் கூறப்பட்டுள்ளது. இந்நூற்பாவில் கூறப்பட்ட செய்தி தொல்காப்பிய நூற்பாவான் உரையில் வலியுறுத்தப்படுகிறது. சிறுமையின் எல்லைக்கு எடுத்துக்காட்டுக்கள் தரப்பட்டுள்ளன.

வண்ணக ஒத்தாழிசைக்கும் அம்போதரங்க ஒத்தாழிசைக்கும் தரவு அடி ஆறே; நேரிசை ஒத்தாழிசையின் தரவிற்குச் சிறுமைக்கு எல்லை மூன்றடி; பெருமைக்கு அளவு உரைப்போர் கருத்தே; தாழிசைக்குச் சிறுமை இரண்டடி; பெருமை ஆறடி; தாழிசை தரவிற் சுருங்கிவருவது; வண்ணகம் அளவடி முதலிய பல அடியானும் வருவது; அதன் சிறுமை நான்கடி; பெருமை எட்டடி - என்று கலி உறுப்புக்களின் வரையறை கூறப்பட்டுள்ளது.

பின், வருக்கம், நெடில், இனம், உயிர், யரலழ ஆசு, இடையிட்டது, இரண்டடி, மூன்றும் எழுத்து ஒன்றி வருவது - ஆகிய தொடை விகற்பங்களும், கடை, கடையிணை, பின், கடைக்கூழை, இடைப்புணர் என்ற தொடை விகற்பங்களும் போல்வன எடுத்துக்காட்டோடு சுட்டப்பட்டுள்ளன.

அடுத்துப் புறநிலை வாழ்த்து, கைக்கிளை, வாயுறை வாழ்த்து, செவியறிவுறூஉ ஆகிய நால்வகைப் பொருள்களின்மேல் வெண்பா முதலாகத் தொடங்கி ஆசிரியத்தான் இறுவது மருட்பா என்பது எடுத்துக்காட்டுடன் குறிக்கப்பட்டுள்ளது.

பின் குறட்பாவின் இனமாகிய வெண் செந்துறையும் குறள் தாழிசையும் எடுத்துக்காட்டுடன் விளக்கப்பட்டுள்ளன.

அடிமுதல் பொருளோடு வரும் கூன், வஞ்சிப்பாவின்கண் இறுதிக்கண்ணும் வருமாறு, அடுத்துக் கூறப்பட்டுள்ளது. உரிய எடுத்துக்காட்டுக்களும் தரப்பட்டுள்ளன.

பொருள் நோக்காது ஓசையே நோக்கிக்கொள்ளப்படும் வகையுளி பின் குறிப்பிடப்பட்டுள்ளது. உரையில் எடுத்துக் காட்டுக்கள் தந்து விளக்கப்பட்டுள்ளன.

பின் மெய்வாழ்த்தும் இருபுறவாழ்த்தும் எடுத்துக் காட்டுக்களுடன் விளக்கப்பட்டுள்ளன; வசையின் வகைகளும் அங்ஙனமே விளக்கப்பட்டுள்ளன.

பின் அம்மை முதலிய எண்வகை வனப்புக்களும் எடுத்துக் காட்டுக்களுடன் விளக்கப்பட்டுள்ளன.

அடுத்து எழுத்து அல் இசையும் அசையாகவும், சீராகவும் ஆமாறு குறிப்பிசை என்பது எடுத்துக்காட்டுடன் விளக்கப் பட்டுள்ளது.

ஒப்பு எனப்படும் பாக்களின் போலி உதாரணங்காட்டி விளக்கப்பட்டுள்ளது. பின் புனைந்துரையின் வகையாகிய சுருக்க பெருக்கங்கள் விளக்கப்பட்டுள்ளன.

அடுத்து, வண்ணங்கள் இருபதும் விளக்கப்பட்டுள்ளன. இறுதியில் ஆனந்தம் என்ற குற்றங்களின் பகுதியின் விளக்கங் களோடும், அடிவரையறையில்லாத உரை, நூல், மந்திரம், பிசி, முதுசொல், அங்கதம், வாழ்த்து என்பனவற்றின் குறிப்போடும் செய்யுளியல் முடிக்கப் பெற்றுள்ளது.

—O—

# செய்யுளியல் - நூற்பாச் செய்திகள்



தொடர் எண் — இயல் எண்

710 செய்யுள் உறுப்புக்களும் செய்யுளின் பெரும்பகுதியும் இவை இவை என்பது. 1

711 எழுத்து அசை சீர் தளை அடி தொடை பா இனம் – இவற்றின் பெயர்க்காரணங்கள் இவை என்பது. 2

712 எழுத்து எழுத்ததிகாரத்தில் கூறப்பட்ட இயல்பிற்று என்பது.

713 நேர் நிரை என அசை இரண்டாகும் என்பது. 4

714 நேர் அசை நான்கும் நிரை அசை நான்கும் இவை என்பது. 5

715 இயற்சீர் உரிச்சீர் பொதுச்சீர் எனச் சீர் மூன்றாகும் என்பது. 6

716 ஈரசை கூடுதலால் உண்டாகும் நான்கு இயற்சீர்கள் ஆசிரியப் பாவிற்கும், மூவசை கூடுவதால் உண்டாகும் உரிச்சீர் எட்டனுள் நேர்ஈற்று உரிச்சீர் நான்கும் வெண்பாவிற்கும், நிரை ஈற்று உரிச்சீர் நான்கும் வஞ்சிப்பாவிற்கும், நாலசைச்சீர் பதினாறும் ஓரசைச்சீர் இரண்டும் ஒரோவழி எல்லாப்பாவிற்கும் உரியவாய் வரும் என்பது. 7

| தொடர் எண் | | இயல் எண் |
|---|---|---|
| 717 | தன்சீர் தன்சீரோடு ஒன்றலும், வேற்றுச் சீரோடு உறழ்தலும், எனத் தளை பொதுவாக இருவகைப்படும் என்பது. | 8 |
| 718 | மா முன் நேரும் விளம் முன் நிரையும் ஒன்றும் சீர்கள் ஆசிரியப்பாவிற்கும்,மாமுன் நிரையும்விளம் முன் நேரும் ஒன்றும் இயற்சீரும், காய் முன் நேர் ஒன்றும் வெண் சீரும் வெண்பாவிற்கும், கனிமுன் நிரையும் நேரும் ஒன்றும் இருசீர்களும் வஞ்சிப்பாவிற்கும், காய் முன் நிரை ஒன்றும் சீர் கலிப்பாவிற்கும் சிறப்பாக உரிய என்பது. | 9 |
| 719 | குறள் சிந்து அளவு நெடில் கழிநெடில் என அடி ஐந்து வகைப்படும் என்பது. | 10 |
| 720 | குறள்அடி ஒருதளை, சிந்தடி இருதளை, அளவடி மூன்று தளை, நெடிலடி நான்குதளை, கழிநெடிலடி ஐந்து முதல் ஏழு அளவும் தளை பெறும் என்பது. | 11 |
| 721 | வெண்பா ஆசிரியம் கலி என்ற மூன்று பாக்களும் நேர் அடியும் வஞ்சிப்பாக் குறள் அடியும் சிந்து அடியும், பா இனங்கள் எல்லா அடிகளும் பெறும் என்பது. | 12 |
| 722 | மோனை எதுகை முரண் இயைபு அளபெடை எனத் தொடைகள் ஐந்து ; இவற்றோடு உறழ்ந்து வரும் இணை பொழிப்பு ஒரூஉ கூழை மேற்கதுவாய் கீழ்க்கதுவாய் முற்று எனத் தொடை விகற்பம் முப்பத்தைந்து என்பது. | 13 |
| 723 | முதல் எழுத்து ஒன்றுவது மோனை ; முதல் எழுத்து அளவு ஒத்திருக்க இரண்டாம் எழுத்து ஒன்றுவது எதுகை ; கடை எழுத்து ஒத்திருப்பது இயைபு ; | |

தொடர் எண் | இயல் எண்

அளபெடை எழுத்து ஒன்றுவது அளபெடை; இருசீர் மிசை வரத் தொடுப்பது இணை, முதற்சீரும் மூன்றும் சீரும் ஒன்றத் தொடுப்பது பொழிப்பு, முதற்சீரும் நான்காம் சீரும் ஒன்றத் தொடுப்பது ஒரூஉ, முதல் மூன்று சீர்கள் ஒன்றத் தொடுப்பது கூழை, முதல் அயல் சீர் ஒழித்து அல்லன ஒன்றத்தொடுப்பது மேற் கதுவாய், கடைஅயல் சீர் ஒழித்து அல்லன ஒன்றத் தொடுப்பது கீழ்க்கதுவாய், நான்கு சீர்களும் ஒன்றத் தொடுப்பது முற்று ஆகும் என்பது. 14

724 செந்தொடை, இரட்டைத்தொடை அந்தாதித்தொடை என்ற தொடைகளும் உண்டு என்பது. 15

725 தொடையும் தொடை விகற்பமும் இன்றி வருவது செந்தொடை; நாற்சீர் அடி முழுவதும் ஒரு சொல் அடுக்கி வருவது இரட்டை; செய்யுளுள் அடியும் சீரும் அசையும் எழுத்தும் முடிந்துவருவன அடுத்து முதலாக வருவது அந்தாதி ஆகும் என்பது. 16

726 வெண்பா அகவல் கலி வஞ்சி என்று பா நான்கு வகைப்படும் என்பது. 17

727 பா இனங்கள் தாழிசை துறை விருத்தம் என்று மூவகைப்படும் என்பது. 18

728 வெண்பா செப்பல் ஓசை உடையது; அஃது ஈற்றடி முச்சீர் அடியாய் வரும்; இறுதிச்சீர் அசைச்சீர் ஆகவும் வரும் என்பது. 19

729 குறள் நேரிசை இன்னிசை பஃறொடை சிந்தியல் என வெண்பா ஐந்து வகைப்படும் என்பது. 20

தொடர் எண் இயல் எண்

730 ஈரடியான் வருவது குறள் வெண்பா; இரண்டு வெண்பாக்கள் இடையே தனிச்சொல் பெற்று இயைந்து இருவிகற்பமாகவும் ஒருவிகற்பமாகவும் செப்பல் ஓசை சிதையாமலும் வரின் நேரிசை வெண்பா; நான்கு அடிகள் ஒரு விகற்பமோ பல விகற்பமோ உடையவாகித் தனிச்சொல் இன்றி வரின் இன்னிசை வெண்பா; பல அடிகளாக வரும் வெண்பா பஃறொடை வெண்பா; நேரிசை இன்னிசைபோல மூன்று அடியான் வரும் வெண்பா சிந்தியல் வெண்பா என்பது. 21

731 நாற்சீர் அடிகள் இரண்டோடு ஈற்று அடி முச்சீராய் வருவது வெள்ளொத்தாழிசை; மூன்றடிச்சிறுமையும் ஏழடிப்பெருமையும் பெற்று ஈற்றடி சில சீர் குன்றி வருதலும், ஓர் ஒலியும் வேற்று ஒலியும் விரவி வருதலும் பொருந்துவது வெண்டுறை; அடிதோறும் நாற்சீரும் ஐந்தாஞ்சீர் ஒரே தனிச்சொல்லுமாய் மூன்று அடியானும் நான்கு அடியானும் அமைவது வெளி விருத்தம் – என்பது. 22

732 அகவல் ஓசையை உடையன ஆசிரியப்பாக்களாம்; அவை ஏ ஓ ஈ ஆய் என ஐ – என்பனவற்றான் முடியும் என்பது. 23

733 நேரிசை, இணைக்குறள், நிலைமண்டிலம், அடிமறி மண்டிலம் – என ஆசிரியப்பா நான்கு வகைப்படும் என்பது. 24

734 கடை அயலடி முச்சீரடியாக வருவது நேரிசை ஆசிரியம்; முதலடியும் ஈற்றடியும் அளவடியாய் இடையே இருசீர் அடியும் முச்சீரடியும் விரவிவர

தொடர் எண் | இயல் எண்

அமைவது இணைக்குறள் ஆசிரியம்; எல்லா அடிகளும் சமமான நாற்சீர் அடிகளாய் வருவது நிலைமண்டில ஆசிரியம்; நாற்சீர் அடிப் பாடலின் எந்த அடியை முதலாகவும் இடையாகவும் கடையாகவும் மாற்றினும் ஓசையும் பொருளும் மாறாதன அடிமறிமண்டில ஆசிரியம் – என்பது. 25

735 மூன்றடி ஒத்து முடிவன ஆசிரியத்தாழிசை; கடை அடி குன்றியும் இடை இடையே குன்றியும் இவற்றோடு இடை மடக்கியும் மடக்காமலும் நான்கு அடிகளாய் எனைத்துச் சீரானும் வருவன ஆசிரியத்துறை; கழி நெடில் அடிகள் நான்கு ஒத்து முடிய அமைவன ஆசிரிய விருத்தம் என்பது. 26

736 துள்ளல் ஓசையை உடையன கலிப்பாக்களாம். அவை வெள்ளைச் சுரிதகத்தான் ஆவது, ஆசிரியச் சுரிதகத்தான் ஆவது முடியும் என்பது. 27

737 கலிப்பா–ஒத்தாழிசைக்கலி, வெண்கலிப்பா, கொச்சகக் கலி என மூவகைப்படும் என்பது. 28

738 தரவு ஒன்று தாழிசை மூன்று தனிச்சொல் ஒன்று சுரிதகம் ஒன்று என இவை அமைந்து நிகழ்வது நேரிசை ஒத்தாழிசைக்கலி; தாழிசைக்கும் தனிச் சொல்லிற்கும் இடையே அளவடி, சிந்தடி, குறளடி களான் ஆகிய அம்போதரங்கம் வர அமைவது அம்போதரங்க ஒத்தாழிசைக்கலி; தரவு தாழிசை அராகம் அம்போதரங்கம் தனிச்சொல் சுரிதகம் என்ற உறுப்புக்களை உடையது வண்ணக ஒத்தாழிசைக்கலி; வேற்றுத்தளை தட்ட நாற்சீர் அடிகளான் இயன்று ஈற்றடி முச்சீராய் அமைவது வெண்கலிப்பா; நாற்சீரடிகளான் இயன்று வெண்டளையே தட்டு

தொடர் எண் இயல் எண்

ஈற்றடி முச்சீராய் அமைவது கலிவெண்பா ; ஒரே தரவு மட்டும் சுரிதகம் பெற்றும் பெறுமலும் வருவது தரவுக் கொச்சகக்கலிப்பா ; இரு தரவு இணைந்து வருவது தரவிணைக் கொச்சகக்கலிப்பா ; இடை இடையே தனிச் சொல் பெற்றுத் தரவு தாழிசை தனிச்சொல் சுரிதகம் என்ற உறுப்புக்களோடு வருவது சிஃறாழிசைக் கொச்சகக் கலிப்பா ; இடையிடையே தனிச்சொல் பெற்றுத் தரவு ஒன்று, மூன்றுக்குமேல் ஆறுவரை அமைந்த தாழிசை, தனிச்சொல், சுரிதகம் இவற்றை உறுப்புக்களாகப் பெற்றுவருவது பஃறாழிசைச் கொச்சகக்கலிப்பா ; தரவு தாழிசை அராகம் தனிச் சொல் முதலிய உறுப்புக்கள் பிறழ்ந்தும் மயங்கியும் வர அமைவது மயங்கிசைக் கொச்சகக் கலிப்பா ஆகும் – என்பது. 29

739 சீர்ஒத்த இரண்டு முதலிய பல அடிகளை உடைய தாய்க் கடைஅடி நீண்டு வருவது கலித்தாழிசை ; நெடிலடி நான்காய் அளவு ஒத்துமுடிவது கலித்துறை ; அளவடி நான்காய் அளவு ஒத்துமுடிவது கலி விருத்தம் ஆகும் – என்பது. 30

740 வஞ்சிப்பா தூங்கல் ஓசையை உடையது ; அது குறளடியானும் சிந்தடியானும் அமைந்து தனிச் சொல் பெற்று ஆசிரியச் சுரிதத்தான் முடியும் என்பது. 31

741 குறளடிகள் நான்கு ஒரு பொருள்மேல் மூன்று அடுக்கி வருவன வஞ்சித்தாழிசை ; குறளடிகள் நான்கு தனித்து வருவது வஞ்சித்துறை. சிந்தடி நான்காய் ஒத்து நடப்பது வஞ்சிவிருத்தம் ஆகும் – என்பது. 32

| தொடர் எண் | | இயல் எண் |
|---|---|---|
| 742 | தளையும் சீரும் வண்ணமும் கெடும் நிலையினைத் தவிர்க்கக் குற்றியலிகரம், குற்றியலுகரம் அளபெடையில் உள்ள குற்றுயிர் என்பனவற்றை அலகு பெறாதனவாய்ச் செய்தல் வேண்டும்; ஐகாரக் குறுக்கம் குற்றெழுத்துப்போலக் கணக்கிடப்படும்; ஆய்தமும் ஒற்றும் அளபு எடுக்குங்கால் அலகுபெறும்; அளபெடை ஆகாத ஒற்றுக்கள் ஈரொற்றுக் களாகவும் மூவொற்றுக்களாகவும் தொடர்ந்துவரினும், அலகு பெறா – என்பது. | 33 |
| 743 | விட்டிசைக்கும் இடங்களிலேயே தனிக்குறில் சீர் முதற்கண் நேர் அசையாகக் கொள்ளப்படும்; தனி நெடில் அளபு எடுத்தால் நேர் நேர் ஆகும்; குறில் நெடில் அளபு எடுத்தால் நிரைநேர் ஆகும் – என்பது. | 34 |
| 744 | நிரை நடுவாகிய வஞ்சி உரிச்சீர் கலிப்பாவினுள்ளும் அகவற்பாவினுள்ளும் கடியப்படும்; கலிப்பாவில் நேர் ஈற்று இயற்சீர் வருதல் கூடாது; ஏனைய பாக்கள் எல்லாச் சீர்களும் தளைகளும் மயங்கி வரப்பெறும்; வெண்பாவினுள் நிரைஈற்று உரிச்சீரோ வெண்டளையை அன்றிப் பிற தளைகளோ விரவுதல் கூடாது – என்பது. | 35 |
| 745 | இயற்சீர் வெள்ளடியும் வஞ்சியடியும் பெரும்பான் மையும், வெண்சீர் வெள்ளடியும் கலி அடியும் ஒரோ வழியும், ஆசிரியப்பாவில் மயங்கிவரும்; வெண்பா அடியும் ஆசிரிய அடியும் கலிப்பாவுள்ளும், ஆசிரிய அடியும் கலியடியும் பெரும்பான்மையும், வெண்பா அடி சிறுபான்மையும், வஞ்சிப்பாவினுள்ளும் மயங்கி வருதலும், ஐஞ்சீர் அடி கலிப்பாவினுள்ளும் ஆசிரியப்பா வினுள்ளும் அருகிவருதலும் நீக்கும் நிலைமையில – என்பது. | 36 |

| தொடர் எண் | | இயல் எண் |
|---|---|---|
| 746 | வெண்பாவின் சிறுமை மூன்றடி ; பெருமை பன்னிரண்டு அடி ; ஆசிரியப்பாவின் சிறுமை மூன்றடி ; பெருமை ஆயிரம் அடி ; வஞ்சிப்பாவின் சிறுமை மூன்றடி ; பெருமை ஆயிரம் அடி ; கலிப்பாவின் சிறுமை நான்கடி ; பெருமை முடிவிலது – என்பது. | 37 |
| 747 | வண்ணக ஒத்தாழிசைக்கலிக்கும் அம்போதரங்க ஒத்தாழிசைக்கலிக்கும் தரவு ஆறடி ; ஏனைய கலிப்பாக்களின் தரவிற்குச் சிறுமை மூன்றடி ; பெருமை பொருளின் முடிபை ஒட்டி அமைவது. தாழிசைக்குச் சிறுமை இரண்டடி ; பெருமை நான்கடி ; தாழிசை தரவை விடச் சுருங்கி வருவதாகும். அராகத்திற்குச் சிறுமை நான்கடி பெருமை எட்டடி; அஃது அளவடி முதலாக அனைத்து அடியானும் வருதல் கூடும் – என்பது. | |
| 748 | வருக்க எதுகை, நெடில் எதுகை, இன எதுகை, வருக்க மோனை, நெடில்மோனை, இன மோனை, உயிர் எதுகை, ஆசு எதுகை, இடையிட்ட எதுகை, மூன்றும் எழுத்து ஒன்று எதுகை, கடை, கடையிணை, பின், கடைக் கூழை, இடைப்புணர் என்ற தொடை விகற்பங்கள் ஆகியவை இவை – என்பது | 39 |
| 749 | வழிபடு தெய்வம் நும்மைக் காக்கப் பழிதீர் செல்வத்தொடு வழிவழி சிறந்து பொலிக என்று கூறும் புறநிலை வாழ்த்து, ஒருதலைக் காமமாகிய கைக்கிளை, வேம்பும் கடுவும் போல முன்னர்த் தோன்றிப் பின்னர் நன்மை பயக்கும் வாயுறை வாழ்த்து, சான்றோரிடம் அடங்கி நடத்தல் வேண்டும் என்று குறிப்பிடும் செவிஅறிவுறூஉ ஆகிய பொருண்மைகளில் வெண்பா முதல் பகுதியாகவும் ஆசிரியப்பா பிற்பகுதியாகவும் கொண்டு அமையும் மருட்பா இயற்றப்படும் என்பது. | |

| தொடர் எண் | | இயல் எண் |
|---|---|---|
| 750 | விழுமிய பொருளும் ஒழுகிய ஓசையும் கொண்டு அடி ஒத்து வரும் இரண்டடிப் பாடல் வெண் செந்துறை ஆகும்; இரண்டடியாய் ஈற்றடி குறைந்து வருவனவும், விழுமிய பொருளும் ஒழுகிய ஓசையும் இன்றிவரும் இரண்டடியான் ஆய செந்துறைப் பாட்டின் சிதைவும் தளை தட்டிவரும் குறள்வெண்பாச் சிதைவும் குறள் தாழிசை ஆகும் – என்பது. | 41 |
| 751 | அடிமுதற்கண் பொருளோடு வரும் தனிச்சீர் கூன் எனப்படும்; அது வஞ்சிப்பாவினுள் இறுதியிலும் வரும் – என்பது. | 42 |
| 752 | அசை சீர் அடிகள் என்பனவற்றைப் பொருள் இயைபு கொண்டு நோக்காது ஓசையையே அடிப்படையாகக் கொண்டு பிரித்து அலகிடுவது வகையுளி ஆகும் என்பது. | 43 |
| 753 | வாழ்த்தின்வகைகளாவன – மெய்வாழ்த்து இருபுற வாழ்த்து; வசையின்வகைகளாவன – மெய்வசை இருபுறவசை – என்பது. | 44 |
| 754 | அம்மை அழகு தொன்மை தோல் விருந்து இயைபு புலன் இழைபு என வனப்பு எண் வகைப்படும். அவற்றுள் அம்மையாவது, சில அடிகளாகிச் சிலவாகிய மெல்லிய சொற்களால் ஒள்ளிய பொருளைக் குறிப்பதாகும்; அழகாவது செய்யுட் சொற்களால் இன்னோசையோடு தொடுக்கப்படுவதாகும்; தொன்மை யாவது பழைய நிகழ்ச்சிகளை அடிப்படையாகக் கொண்டு பாடப்படுவது; தோலாவது மெல்லிய சொற்களால் விழுமிய கருத்துக்களை நுவலும் பல பாடல்களின் தொகுதியும், நீண்டதொரு பாடலின் அமைப்பும் என இருவகைப்படுவது; விருந்தாவது | |

தொடர் எண் | | இயல் எண்

கவிஞன் தன் காலத்தனவாகிய செய்திகளைப் புனைந்து பாடுவது; இயைபாவது ஞணநமன யரலவழள என்னும் பதினொரு புள்ளிகளுள் ஒன்றனைச் செய்யுள் இறுதி எழுத்தாக அமைத்துப் பாடுவது; புலனாவது உலக வழக்கில் உள்ள சொற்களைக் கொண்டே யாவரும் எளிதில் விளங்கிக் கொள்ளுமாறு பாடப் படுவது; இழைபாவது ஒற்றொடு புணர்ந்த வல்லெழுத்து யாதும் தீண்டாது குறளடி முதலாக எழுத்தின் எண்ணிக்கையைக் கணக்கிட்டே கடிநெடிலடிகாறும் கொண்டு ஓங்கிய சொற்களால் அமைப்பது ஆகும் – என்பது. 45

755 எழுத்து அல்லாத ஓசையும் அசையாகவும் சீராகவும் கொண்டு கணக்கிடப்படுவது குறிப்பிசை ஆகும் என்பது 46

756 ஒரோவழி அவ்வச் செய்யுள்களுக்குக் கூறப்பட்ட இலக்கணங்களில் சிறிது திரிந்து வருவனவற்றையும் பெரும்பான்மையவான இலக்கணங்களை நோக்கி அவ்வப் பாக்களின் போலியாய்க் கொள்ளவேண்டும் என்பது. 47

757 வண்ணங்கள் இருபது வகைப்படும்; அவைதாம் பாஅவண்ணம், தாஅவண்ணம், வல்லிசை வண்ணம், மெல்லிசை வண்ணம், இயைபு வண்ணம், அளபெடை வண்ணம், நெடுஞ்சீர் வண்ணம், குறுஞ்சீர் வண்ணம், சித்திர வண்ணம், நலிபு வண்ணம், அகப்பாட்டு வண்ணம், புறப்பாட்டு வண்ணம், ஒழுகு வண்ணம், ஒரூஉ வண்ணம், எண்ணு வண்ணம், அகைப்பு வண்ணம், தூங்கல் வண்ணம், ஏந்தல்வண்ணம், உருட்டு வண்ணம், முடுகு வண்ணம் எனப்படும் என்பது. 48

| தொடர் எண் | | இயல் எண் |
|---|---|---|
| 758 | புணைந்துரை ஆவது பெரிதினைச் சுருக்குதலும், சிறிதினைப் பெருக்குதலும் என இருவகைப்படும் என்பது. | 49 |
| 759 | நிலைபெற்ற பொருளுக்கு அழிவினைப் பயப்பது ஆராயத் தகாத ஆனந்தம் ஆகும்; அஃது இயற்பெயர்பால் அளபு எடுத்துக் கூறும் பொருத்தம் இல்லாத எழுத்து ஆனந்தம், அவ்வியற்பெயர்பால் மங்கலம் ஒழிந்த தொழிற் சொல்லைச் செப்பும் சொல் ஆனந்தம் என இருவகைப்படும்; இவ்விருவகை ஆனந்தமும் ஏற்படாமல் செய்யுள் இயற்றுக என்பது. | 50 |
| 760 | செய்யுள் முற்கூறிய வரையறையைக் கடந்து ஓர் அடியானும் பல அடியானும் வரையப்படும். அங்ஙனம் வரையப்படுவன பாட்டுரை, நூல், மந்திரம், பிசி, முதுசொல், அங்கதம், வாழ்த்து என்ற எழு வகையும் பிறவுமாம் என்பது. | 51 |

—(❊)—

# செய்யுளியல் நூற்பாக்கள்



இவ்வாசிரியர் மிகத் தெளிவாகவும் சுருக்கமாகவும் அமைந்துள்ள பிற யாப்பிலக்கண நூற்பாக்கள் பலவற்றைத் தம் செய்யுளியல் நூற்பாக்களாகக் கொண்டு, தாமேயும் சில நூற்பாக்களைத் தெளிவும் சிறப்பும் கருதி யாத்துள்ளார். அவற்றை ஈண்டு நோக்குவோம்.

இவ்வாசிரியர் முழுதும் கொண்டனவும் சிறிது திரித்துக் கொண்டனவும் ஆகிய **யாப்பருங்கல நூற்பாக்கள் :**

5 நெடிலும் குறிலும் தனித்தும்ஒற்று அடுத்தும்
நடைபெறும் நேர்அசை நான்கும்; நீங்காக்
குறில்இணை குறில்நெடில் தனித்தும்ஒற்று அடுத்தும்
நெறிவரு நிரைஅசை நான்கும் ஆகும். — *யாப். 6, 8*

6 இயற்சீர் உரிச்சீர் பொதுச்சீர் என்று
மயக்குஅற வகுத்த சீர்மூன்று ஆகும். — *யாப். 10*

7 ஈர்அசை கூடிய சீர்இயற் சீர்;அஃது
ஈரிரண்டு ஆம். — *யாப். 11*

மூஅசை கூடிய சீர்உரிச் சீர்;அது
நாலிரண்டு ஆகி நடைபெறும்; அவற்றுள்
நேர்இறு நான்கும் வெள்ளை; அல்லன
பாவினுள் வஞ்சியின் பாற்பட்டிடுதலும் — *யாப். 12*

— **காக்கைபாடினியம்**

10 குறள்அடி சிந்துஅடி அளவுஅடி நெடில்அடி
கழிநெடில் அடிஎன அடிஐந்து ஆகும். – யாப். 23

13 மோனை எதுகை முரண்இயைபு அளபெடை...
பாத இணையே பொழிப்போடு ஒரூஉத்தொடை
கூழை கதுவாய் மேலதூஉம் கீழதூஉம்
சீரிய முற்றொடு சிவணும்ஐ ஏழும்... - யாப். 34

14 இரண்டாம் எழுத்தோடு இயையின் எதுகையும் – யாப். 36
இறுவாய் ஒப்பின் இயைபுத் தொடையும், – யாப். 40
இருசீர் மிசைவரத் தொடுப்பின் இணையும், – யாப். 42
முதலொடு மூன்றும் சீர்த்தொடை பொழிப்பும், – யாப். 43
சீர் இரண்டு இடைவிடத் தொடுப்பின் ஒரூஉவும். – யாப். 44

மூஒரு சீரும் முதல்வரத் தொடுப்பின்
கூழையும், முதல்அயல் சீர்ஒழித்து அல்லன
மேல்வரத் தொடுப்பின் மேற்கது வாயும்,
ஈற்றுஅயல் சீர்ஒழித்து எல்லாம் தொடுப்பின்
கீழ்க்கது வாயும் – யாப். 45 - 47

15 செந்தொடை இரட்டையொடு அந்தாதி எனவும்
வந்த வகையான் வழங்கவும் பெறுமே. – யாப். 49

17 வெண்பா ஆசிரியம் கலியே வஞ்சிஎனப்
பண்புஆய்ந்து உரைத்த பாநான்கு ஆகும். – யாப். 55

18 தாழிசை துறையே விருத்தம் என்றிவை
பாஇனம் பாவொடு பாற்பட்டு இயலும். – யாப். 56

19 செப்பல் இசையன வெண்பா மற்றவை
அந்தடி சிந்தடி ஆகலும் அவ்வடி
அந்தம் அசைச்சீர் ஆகவும் பெறுமே. – யாப். 57

22 அடிஒரு மூன்றுவந்து அந்தடி சிந்தாய்
விடின்அது வெள்ளொத் தாழிசை ஆதலும் – யாப். 66

மூன்றுஅடி முதலா ஏழ்அடி காறும்வந்து
ஈற்றுஅடி சிலசில சீர்குன் றினும்அவை
வேற்றுஒலி விரவினும் வெண்டுறை ஆதலும் – யாப். 67

23 அகவல் இசையன அகவல் மற்றுஅவை
ஏஓ ஈஆய் எனஐஎன்று இறுமே. – யாப். 69

25 அந்த அடியின் அயல்அடி சிந்தடி
வந்திடின் நேரிசை ஆசிரியம் ஆதலும் – யாப். 71

26 மூன்றுஅடி ஒத்து முடிவன ஆய்விடின்
ஆன்ற அகவல் தாழிசை ஆதலும் – யாப். 75

27 துள்ளல் இசையன கலியே மற்றுஅவை
வெள்ளையும் அகவலும் ஆய்விளைந்து இறுமே. – யாப். 78

28 ஒத்தா ழிசைக்கலி வெண்கலிப் பாவே
கொச்சகக் கலியொடு கலிமூன்று ஆகும். – யாப். 79

30 அடிஎனைத்து ஆகியும் ஒத்துவந்து அளவினில்
கடைஅடி மிகுவது கலித்தா ழிசையும், – யாப். 87

நெடில்அடி நான்காய் நெறிப்பட நிகழ்வது
கலித்துறை ஆதலும், கலிப்பா விருத்தம்
அளவுஅடி நான்கினது ஆதலும் விதியே. – யாப். 88, 89

31 தூங்கல் இசையன வஞ்சி மற்றவை
ஆய்ந்த தனிச்சொலோடு அகவலின் இறுமே. – யாப். 90

32 குறள்அடி நான்மையின் கோவை மூன்றாய்
வருவன வஞ்சித் தாழிசை ஆதலும்
ஆங்குஅவை தனிவரின் அதன்துறை ஆதலும் – யாப். 91

33 தளைசீர் வண்ணம் தாம்கெட வரினே
குறுகிய இகரமும் குற்றியல் உகரமும்
அளபெடை ஆவியும் அலகுஇயல்பு இலாமையும். – யாப். 4

37 ஈர்அடி வெண்பாச் சிறுமை மூவடி
ஆசிரி யத்தொடு வஞ்சியும் எஞ்சியது
ஒருநான்கு ஆகும் இழிபே. – யாப். 32

41 ஒழுகிய ஓசையின் ஒத்துஅடி இரண்டாய்
விழுமிய பொருள்படும் வெண்செந் துறையும். – யாப். 63

அந்தடி குறைநவும் செந்துறைச் சிதைவும்
சந்தழி குறளுமாம் தாழிசைக் குறளும். – யாப். 64

42 அடிமுதல் பொருள்உற வருவது கூன்;அஃது
இறுதியும் வஞ்சியுள் இயலும் என்ப. – யாப். 94

மிகப் பழைய நூற்பாக்களாய் இவ்வாசிரியரால் கொள்ளப்பட்டவை பின்வருமாறு.

## பழைய நூற்பாக்கள்

2 எழுதப் படுதலின் எழுத்தே; அவ்வெழுத்து
அசைத்துஇசை கோடலின் அசையே; அசைஇயைந்து
சீர்கொள நிற்றலின் சீரே; சீர் இரண்டு
தட்டு நிற்றலின் தளையே; அத்தளை
அடுத்து நடத்தலின் அடியே; அடிஇரண்டு
தொடுத்துமன் சேறலின் தொடையே; அத்தொடை
பாவி நடத்தலின் பாவே; பாஒத்து,
இனமாய் வழங்கலின் இனம்எனப் படுமே.

16 அடியும் சீரும் அசையும் எழுத்தும்,
முடிவு முதலாச் செய்யுள் மொழியின்,
அந்தாதித் தொடையென்று அறிதல்வேண்டும். – நத்தத்தம்

22 ஒருமூன்று ஒருநான்கு அடிஅடி தோறும்
தனிச்சொல் தழுவி, நடப்பது வெள்ளை
விருத்தம் எனப்பெயர் வேண்டலும் விதியே.

– காக்கைபாடினியம்

25 அளவடி அந்தமும் ஆதியும் ஆகி,
குறளடி சிந்தடி என்று இரண்டும்
இடையடி நிற்பின் இணைக்குறள் ஆதலும்,
ஒத்த அடித்தாய் உலையா மரபொடு
நிற்பின் நிலைமண் டிலமா குதலும், – பழைய நூற்பா

33 ஆய்தமும் ஒற்றும் அளபுஎழூஉ நிற்புழி
வேறுஅலகு எய்தும் விதியின ஆதலும்,
– காக்கைபாடினியம்.

49 உரைக்கப் படுபொருட்கு ஒத்தவை எல்லாம்
புகழ்ச்சியின் மிக்க புனைந்துரை ஆகும். – பழைய நூற்பா

50 இயற்பெயர் சார்த்தி எழுத்துஅளபு எழினே ,,
இயற்பாடு இல்லா எழுத்தா னந்தம்.

## தொல்காப்பிய நூற்பாக்கள்

( சிறிது திரிந்தவை )

40 வழிபடு தெய்வம் நிற்புறம் காப்பப்
பழிதீர் செல்வமொடு வழிவழி சிறந்து
பொலிமின் என்னும் புறநிலை வாழ்த்தும், –தொல். பொ. 422

வேம்பும் கடுவும் போல்வன வெஞ்சொல்
தாங்குதல் இன்றி வழிநனி பயக்கும் என்று

ஓம்படைக் கிளவியின் வாயுறுத் திடூஉம் 424
வாயுறை வாழ்த்தும், பொங்குதல் இன்றிப்

புரையோர் நாபபண் அவிதல் கடன்எனச்
செவியறிவு உறுத்தும் செவியறி வுறூஉவும்; 426

45 அம்மை அழகு தொன்மை தோலே
விருந்தே இயைபே புலனே இழைபு எனப்
பொருந்திய எட்டும், வனப்பு; அவை எட்டனுள் 313

அம்மை தானே அடிநிமிர்பு இன்றிச்
சின்மென் மொழியால் சீர்புனைந்து யாத்தலும், -தொ.பொ.547

செய்யுள் மொழியால் சீர்புனைந்து யாப்பின்
அவ்வகை தானே அழகுஎனப் படுதலும், 548

தொன்மை தானே சொல்லுங் காலை
உரையொடு புணர்ந்த பழைமைமேற்று ஆகலும், 549

இழுமென் மொழியால் விழுமியது நுவலினும்
பரந்த மொழியால் அடிநிமிர்ந்து ஒழுகினும்
அன்னவை இரண்டும் தோல்என அறைதலும், 550

விருந்து தானே பொருந்தக் கூறின்
புதுவது புனைந்தயாப் பின்மேற்று ஆகலும், 551

ஞணநமன யரலவ ழள என்னும்
புள்ளி இறுதி இயைபுஎனப் புகறலும், 552

தெரிந்து மொழியான் செவ்விதின் கிளந்து
தேர்தல் வேண்டாது குறித்தது தோன்றின்
புலன்எனப் படுதலும், புலன்நன்கு உணர்ந்தோர் 553

ஒற்றொடு புணர்ந்த வல்லெழுத்து அடக்காது
குறள்அடி முதலா ஐந்தடி காறும்
ஓங்கிய சொல்லான் ஆங்கனம் மொழியின்
இழைபுஎனப் படுதலும் எய்தும் என்ப. 554

48 வண்ணந் தானே, நாலைந்து, அவைதாம்
பாஅ வண்ணம்[1] தாஅ வண்ணம்[2]
வல்லிசை வண்ணம்[3] மெல்லிசை வண்ணம்[4]
இயைபு வண்ணம்[5] அளபெடை வண்ணம்[6]
நெடுஞ்சீர் வண்ணம்[7] குறுஞ்சீர் வண்ணம்[8]
சித்திர வண்ணம்[9] நலிபு வண்ணம்[10]
அகப்பாட்டு வண்ணம்[11] புறப்பாட்டு வண்ணம்[12]
ஒழுகு வண்ணம்[13] ஒரூஉ வண்ணம்[14]

எண்ணு வண்ணம்[15] அகைப்பு வண்ணம்[16]
தூங்கல் வண்ணம்[17] ஏந்தல் வண்ணம்[18]
உருட்டு வண்ணம்[19] முடுகு வண்ணம்[20] என்று
ஆங்குஎன மொழிப அறிந்திசி னோரே.
–தொல். பொ. 524, 525

51 அவைதாம்,
பாட்டுரை நூலே மந்திரம் பிசியே
முதுசொல் அங்கதம் வாழ்த்தொடு பிறவும்
ஆகும் என்ப அறிந்திசி னோரே. –தொ. பொ. 391

## இவ்வாசிரியர் தமே யாத்த நூற்பாக்களும், அவற்றின் பகுதிகளும்

1 செய்யுள் என்பது தெரிவுஉறக் கிளப்பின்
முன்னர்க் கூறிய முறைமைத்து ஆகி
எழுத்துஅசை சீர்தளை அடிதொடை என்ற
மூஇரண்டு உறுப்பும் மேவரச் சிவணிப்
பாவும் இனமும் எனஇரு பாற்றே.

3 அவற்றுள்,
எழுத்துமேல் கிளந்த இயல்பிற்று ஆகும்.

4 நேர்நிரை எனஅசை ஓர்இரண்டு ஆகும்.

7 ...நாலசை யானும் ஓரசை யானும்
சீர்பெற நடப்பது பொதுச்சீர்; ஆங்குஅது
எண்ணிரண்டு இரண்டாய் இயறலும் நெறியே.

8 தன்சீர் தனதோடு ஒன்றலும் உறழ்தலும்
என்றுஇரண்டு ஆகும் இயம்பிய தளையே,

9 நேர்நேர் ஒன்றல், நிரைநேர் ஒன்றல்என்று
ஆயிரு தளையும் அகவற்கு இசைதலும்,
வெண்சீர் ஒன்றல் இயற்சீர் விகற்பம்என்று
அவ்விரு தளையும் வெள்ளைக்கு அமைதலும்,
நிரைஈற்று உரிச்சீர் ஒன்றலும் உறழ்தலும்
வரையாது வருதல் வஞ்சிக்கு வருதலும்,
வெண்சீர் விகற்பம் கலித்தளை ஆதலும்,
பண்பினின் வழாஅப் பாங்கின என்ப.

11 குறள்ஒரு பந்தம், இருதளை சிந்தாம்,
முத்தளை அளவடி நால்தளை நெடிலடி,
ஐந்தளை முதலா எழுதளை காறும்
வந்தவும் பிறவும் கழிநெடில் என்ப.

12 வெண்பா அகவல் கலிநேர் அடியும்,
ஒண்பா வஞ்சி குறள்சிந்து அடியும்,
பா இனம் எல்லாப் பாதமும் பெறுமே.

16 சொல்லிய தொடையொடு வேறுபட்டு இயலின்,
சொல்லி நிறுத்தசெந் தொடையும், நேர்அடியின்
முழுவதும் ஒருசொல் வரின்அஃது இரட்டையும்......

20 குறளே, நேரிசை, இன்னிசை, பஃறொடை,
சிந்தியல், என அஃது ஐந்துஎன மொழிப.

21 ஈரடி யான்வரின் குறள்;அஃது இரண்டாய்ச்
சீரிய வான்தனிச் சொல்இடை சிவணி,
இருவிகற் பானும் ஒருவிகற் பானும்,
செப்பல் ஓசையின் சிதையா தாகி,
அத்திறம் வரின்நே ரிசை ;அடி நான்காய்,
ஒன்றும் பலவும் விகற்பாய், தனிச்சொல்
இன்றி நடப்பின், இன்னிசை ; அடிபல
துன்னின் பஃறொடை, நேரிசை இன்னிசை
அன்னவாய், மூன்றடி யான்வரின் சிந்தியல்
வெண்பா ஆதலும், விதிஎனப் படுமே.

24 நேரிசை, இணைக்குறள், நிலைமண் டிலமே,
அடிமறி மண்டிலம் எனநான்கு அகவல்.

25 மனப்படும் அடி,முதல் இடைஈறு ஆயின்
அடிமறி மண்டில ஆசிரியம் ஆதலும்,
நடைதெரி புலவர் நாடினர் கொளலே.

26 எருத்தடி குன்றியும், இடைஇடை குன்றியும்,
இவற்றோடு இடைமடக்கு ஆகியும், நான்கடி
அவற்றான் நடப்பின் அதன்துறை ஆதலும்,
கழிநெடில் அடிநான்கு ஒத்துஇறின் அகவல்
விருத்தம் ஆதலும், விதிஎனப் படுமே.

29 தரவுஒன் றாகித் தாழிசை மூன்றாய்த்
தனிச்சொல் இடைநடந்து சுரிதகம் தழுவி
நிகழ்வது நேரிசை ஒத்தா ழிசையும்,
ஆங்கதன் இடையே அளவடி சிந்தடி
பாங்குஅமை குறள்அடி படுநீர்த் திரைபோல்
ஓய்ந்து ஓய்ந்து உற்றிடு மாயின்அன்ன
அப்போ தரங்க ஒத்தா ழிசையும்,
அசையடி மிசைத்தாய் அராகம் அவற்றொடும்
இசைவுறின் வண்ணக ஒத்தாழி சையும்,
வேற்றுத்தளை தட்டும் வெண்பா இயைந்தும்
ஈற்றடி முச்சீ ராய்இறின் முறையே
வெண்கலிப் பாவும், கலிவெண் பாவும்,
தரவே தரவிணை தாழிசை சிலபல
மரபான் இயன்றவும் மயங்கிவந் தனவும்
அவ்வப் பெயரான் அமைந்தகொச் சகமும்,
ஆகும் என்ப அறிந்திசி னோரே.

32 பாங்குஅமை சிந்தடி நான்காய் நடப்பது
வஞ்சி விருத்தம் ஆதலும் மரபே.

33 ஐகான் குறுகின் குறில்இயல்பு எய்தலும்,
ஒற்றுஅளபு எழாவழிப் பெற்றஅலகு இன்மையும்,
பெற்றிஎன்று உரைப்பர் கற்றறிந் தோரே.

34 விட்டிசைத் தன்றி, முதற்கண் தனிக்குறில்
நேர்ஆ காமையும், நெட்டெழுத்து அளபுஎழின்
நேர்நேர் ஆதலும், குறில்நெடில் அளபுஎழின்
நிரைநேர் ஆதலும், நெறிஎனப் படுமே.

35 நிரைநடு ஆகிய வஞ்சி உரிச்சீர்
கலியினொடு அகவலின் கடிதலும், கலிவயின்
நேர்ஈற்று இயற்சீர் நிலவுதல் இன்மையும்,
ஏனைய எல்லாம் எவ்வகைச் சீரொடும்
தாம்மயங் குதலும், தளையொடு மயங்கலும்,
வெள்ளையுள் நிரைஈற்று உரிச்சீர் விரவா
சொல்லிய வெள்ளையுள் பிறதளை தொடரா
என்றலும், ஒன்றிய இலக்கணம் என்ப.

36 இயற்சீர் வெள்ளடி வஞ்சி அடிஇவை
மயக்கப் படுதலும், வெண்சீர் வெள்ளடி
கலிஅடி ஒரோவழி அகவலுள் கலத்தலும்,
வெள்ளடி அகவல் கலியுளும், அகவலும்
கலியும் ஒரோவழி வெண்பா அடியும்
வஞ்சியுள் மயங்கி வருதலும், ஐஞ்சீர்
அடிகலி அகவலொடு அருகிவந்து அடுத்தலும்,
கடிநிலை இன்றே; கருதுங் காலை.

37 ஆசிரி யத்தொடு ......... பெருமை
முந்நான்கு ஆயிரம் ஆயிரம் முடிவிலது
என்னு வரூஉம் இயல்பினது என்ப.

38 வண்ணகம் அம்போ தாங்கஒத் தாழிசை
நண்ணிய தரவின் அடிஇரு மூன்று,
ஏனைய தரவுஅடி இழிபுஒரு மூன்றும்,

பேணிய பெருமை பெரும்பொருள் முடிபும்,
இரண்டடி இழிவும் இரட்டிமூன்று ஆக்கமும்
ஒன்றிய தாழிசை உறுதலும், உறுங்கால்
தரவில் சுருங்கல் தகுதிஎன்று உரைத்தலும்,
அளவடி முதலா அனைத்துஅடி யானும்
வருவது வண்ணகம், வருங்கால் சிறுமை
நாலடி, பெருமை நாலிரண்டு ஆகி,
நடத்தலும் நெறியென நாட்டினர் புலவர்.

39 வருக்கமும் நெடிலும் இனமும் வரினும்,
திறப்படும் எதுகையும் மோனையும் ஆதலும்,
உயிரும் யரலழ ஆசும் இடைஇட்டும்
இரண்டடி மூன்றும் எழுத்துஒன்றி வரினும்
எதுகை ஆதலும், இரணத் தொடைக்கும்
கடையே கடையிணை பின்கடைக் கூழை
இடைப்புணர்ப்பு இசைதலும், இசையும் என்ப.

40 ......ஆகிய பொருண்மையின் அமைந்தநால் வகைமேல்
வெள்ளை முதலா ஆசிரியம் இறுதி
கொள்ளத் தொடுப்பது மருட்பா ஆகும்.

43 அசையும் சீரும் அடியும் எல்லாம்,
இசைய வருபொருள் இயைபு நோக்காது,
ஓசையே குறிக்கொண்டு, ஒடுங்கவும், விரியவும்,
அலகிடல் வகையுளி ஆகும் என்ப.

44 வாழ்த்து,மெய் வாழ்த்து இருபுற வாழ்த்துஎனப்
போற்றல் வேண்டும்; வசையும்அவ் வகைத்தே.

46 எழுத்துஅல் இசைஎன அசைசீர் ஆக
நிறைக்கப் படுதல் குறிப்பிசை என்ப.

47 ஒப்புஎனப் படுவது, ஓதிய செய்யுளுள்,
தப்பினும் ஒருபுடை சார்த்திமற்று அவற்றையும்,
செப்பிய பாவொடு, சேர்த்தனர் கொளலே.

49 அவைதாம்,
பெரிதினைச் சுருக்கலும் சிறிதினைப் பெருக்கலும்
எனஇரண்டு ஆகும் என்மனார் புலவர்.

50 நிறுவிய பொருளுக்கு இறுதியைத் தருவது
அறிய வேண்டா ஆனந்தம்; அதுதான்,
இயற்பெயர் சார்த்தி எழுத்துஅளபு எழினே
இயற்பாடு இல்லா எழுத்துஆ னந்தமும்,
அப்பெயர் மருங்கின் மங்கலம் அல்லாத்
தொழிற்சொல் புணர்ப்பின் சொல்ஆ னந்தமும்,
எனஇரண்டு ஆகும்; இவைபுணா ராமல்
நினைவதை யாப்புஎன நிகழ்த்துவர் புலவர்.

51 ஓரடி யானும், பலஅடி யானும்,
ஒரோவழி இயலும் உரைத்தஅச் செய்யுள்;
அவைதாம்,
பாட்டுரை நூலே மந்திரம் பிசியே
முதுசொல் அங்கதம் வாழ்த்தொடு பிறவும்
ஆகும் என்ப அறிந்திசி னோரே.



# செய்யுளியல் உரையில் காட்டப்படும் மேற்கோள் நூற்பாக்கள்



5 தனிநிலை ஒற்றுஇவை தாம்அலகு இலவே
அளபெடை அல்லாக் காலை ஆன. — யாப். 3

11 இரண்டு முதலா எட்டுஈ றாகத்
திரண்ட சீரான் அடிமுடிவு உடைய
இறந்தன வந்து நிறைந்துஅடி முடியினும்
சிறந்த அல்ல செய்யுள் உள்ளே. — காக்கைபாடினியம்

19 வெண்சீர் வெண்டளை யான்வரும் யாப்பை
ஏந்திசைச் செப்பல் என்மனார் புலவர். — சங்க யாப்பு

இயற்சீர் வெண்டளை யான்வரும் யாப்பைத்
தூங்கிசைச் செப்பல் என்மனார் புலவர். ,,

வெண்சீர் ஒன்றலும் இயற்சீர் விகற்பமும்
ஒன்றிய பாட்டே ஒழுகிசைச் செப்பல். ,,

23 நேர்நேர் இயற்றளை யான்வரும் அகவலும்
நிரைநிரை இயற்றளை யான்வரும் அகவலும்
ஆயிரு தளையும்ஒத்து ஆகிய அகவலும்
ஏந்தல் தூங்கல் ஒழுகல் என்றிவை
ஆய்ந்த நிரல்நிறை ஆகும் என்ப.

27 ஏந்திசைத் துள்ளல் கலித்தளை இயையின்,
வெண்டளை தன்தளை என்றிரண்டு இயையின்
ஒன்றிய அகவல் துள்ளல்என்று ஓதுப;
தன்தளை பிறதளை என்றுஇவை அனைத்தும்
பொருந்தி வரினே பிரிந்திசைத் துள்ளல்.

31 ஒன்றிய வஞ்சித் தளையே வரினும்,
ஒன்றாத வஞ்சித் தளையே வரினும்,
என்றுஇவை இரண்டும் பிறவும் மயங்கினும்,
ஏந்தல் அகவல் பிரிந்திசைத் தூங்கல்என்று,
ஆய்ந்த நிரல்நிறை ஆகும் என்ப.

33 ஈர்ஒற்று ஆயினும் மூஒற்று ஆயினும்
ஓர்ஒற்று இயல என்மனார் புலவர்.

34 தனிநிலை அளபெடை நேர்நேர் இயற்றே
இறுதிநிலை அளபெடை நிரைநேர் இயற்றே.

36 படைப்போர் குறிப்பினை நீக்கிப் பெருமை
வரைத்துஇத் துணைஎன வைத்துவரை இல்என்று,
உரைத்தனர் மாதோ உணர்ந்திசி னோரே.

ஆசிரியப் பாவின் அளவிற்கு எல்லை
ஆயிரம் ஆகும், இழிபுமூன்று அடியே. – தொல். பொ. 499

ஆசிரிய நடைத்தே வஞ்சி என்ப. „ 420

நெடுவெண் பாட்டே முந்நான்கு அடித்தே. „ 470

கலிவெண் பாட்டே கைக்கிளைச் செய்யுள்
செவியறி வாயுறை புறநிலை எனஇவை
தொகைநிலை வகையான் அளவில என்ப. „ 472

முடிபொருள் இல்லாது அடிஅளவு இலவே.

39 சீர்முழுது ஒன்றின் தலையாகு எதுகை;
ஓர் எழுத்து ஒன்றின் இடைகடை பிறவே.

அகரமோ டாகாரம் ஐகாரம் ஔகான்
இகரமொ டீகாரம் எஒ உகரமொடு
ஊகாரம் ஒஓ ருநமவ தச்சகரம்
ஆகாத அல்லா அறு.

44 குற்றிகரக் குற்றுகரம் எண்ணிரண்டும் ஆய்தமும்
ஒற்றும் எனஒரு நான்ககற்றிக் — கற்றோர்
உயிரும் உயிர்மெய்யும் ஓதினர் கொள்ளச்
செயிர்தீர்ந்த செய்யுள் அடிக்கு.

48 அவற்றுள், பாஅ வண்ணம்,
சொற்சீர்த்து ஆகி நூற்பால் பயிலும். – தொல். பொ. 526

தாஅவண்ணம், இடையிட்டு வந்த எதுகைத் தாகும். – 527

வல்லிசை வண்ணம் வல்லெழுத்துப் பயிலும். – 528

மெல்லிசை வண்ணம் மெல்லெழுத்து மிகுமே. – 529

இயைபு வண்ணம் இடைஎழுத்து மிகுமே. – 530

அளபெடை வண்ணம் அளபெடை பயிலும். – 531

நெடுஞ்சீர் வண்ணம் நெட்டெழுத்துப் பயிலும். – 532

குறுஞ்சீர் வண்ணம் குற்றெழுத்துப் பயிலும். – 533

சித்திரவண்ணம்,
நெடியவும் குறியவும் ஒத்துடன் வருமே. – 534

நலிபு வண்ணம் ஆய்தம் பயிலும். – 535

அகப்பாட்டுவண்ணம்,
முடியாத் தன்மையின் முடித்தல் மேற்றே. – 536

புறப்பாட்டுவண்ணம்,
முடிந்தது போன்று முடியா தாகும். – 537

ஒழுகு வண்ணம் ஓசையின் ஒழுகும். – 538

ஒரூஉ வண்ணம் ஒரீஇத் தொடுக்கும். – 539

எண்ணு வண்ணம் எண்ணுப் பயிலும். – 540

அகைப்பு வண்ணம் அறுத்து அறுத்து ஒழுகும். – 541

தூங்கல் வண்ணம் வஞ்சி பயிலும். – 542

ஏந்தல்வண்ணம்,
சொல்லிய சொல்லின் சொல்லியது சிறக்கும். – 543

உருட்டு வண்ணம் அராகம் தொடுக்கும். – 544

முடுகுவண்ணம், அடியிறந் தோடி அதனோ ரற்றே. – 545

★

# இலக்கண விளக்கம் – பொருளதிகாரம்

## நான்காவது செய்யுளியல்



### செய்யுளும் அதன் வகையும்

710. செய்யுள் என்பது தெரிவுஉறக் கிளப்பின்
முன்னர்க் கூறிய முறைமைத்து ஆகி
எழுத்துஅசை சீர்தளை அடிதொடை என்ற
மூஇரண்டு உறுப்பும் மேவரச் சிவணிப்
பாவும் இனமும் எனஇரு பாற்றே.

என்பது சூத்திரம். இவ்வோத்துச் செய்யுளது இயல்பு உணர்த்திற்று ஆகலான் செய்யுள் இயல் என்னும் பெயர்த்து. மேல் நிறுத்த முறையானே அகத்திணை இயலும் புறத்திணை இயலும் அணி இயலும் உணர்த்தி, அங்ஙனம் உணர்த்திய பொருண்மை எல்லாவற்றிற்கும் இஃது இடம் ஆதல் பற்றி அவற்றின் பின் கூறின மையான், மேல் ஓத்தினொடு இயைபு உடைத்து ஆயிற்று. இதனுள் இத்தலைச் சூத்திரம் செய்யுட்குப் பொது விதியும் அஃது இத்துணை உறுப்பிற்றாய் இத் துணைத்தாம் என்பதூஉம் கூறுகின்றது.

(இ - ள்) மேல் அகத்திணை ஓத்தினுள் 'செய்யுள் இடவயின் புல்லிய நெறித்தே (இ. வி. பொ. 2) எனத்

தோற்றுவாய் செய்த செய்யுள் என்று சிறப்பித்துச் சொல்லப்படுவதனை விளங்கக் கூறும் இடத்து, மேல் சொல் ஓத்தினுள்,

பல்வகைத் தாதுவின் உயிர்க்குஉடல் போல்பல
சொல்லால் பொருட்குஇடன் ஆக உணர்வினின்
வல்லோர் அணிபெறச் செய்வது செய்யுள் – இ. வி. 169

எனக் கூறிய இயல்பிற்றாகி எழுத்து முதலிய அறுவகை உறுப்பினையும் பொருத்தமுறத் தழுவிப் பாவும் பாவினமும் என இரு பகுதியை உடைத்தாம் என்றவாறு.

'மூவிரண்டு உறுப்பும் மேவரச் சிவணி'

எனவே, மேவரச் சிவணாதனவும் உள என்பதூஉம் பெற்றாம். அவை, எழுத்து ஓத்தினுள் கூறிய மாத்திரை வகையும், அகத்து ஓத்தினுள் கூறிய திணை முதலிய பன்னிரு வகையும் இவ்வோத்துள் கூறப்படும் வண்ணமும், அம்மை முதலிய வனப்பு எட்டும் அவை போல்வன பிறவுமாம் என்று உணர்க. 1

விளக்கம்

*மேல் நிறுத்த முறையானே என்றது,*

*'போக்குஅறு மரபின் பொருள்எனப் படுவது*
*நோக்குஅறு வீடு நுவற்சிசெல் லாமையின்*
*அறம்பொருள் இன்பம் ஆகும் அதுவே*
*அகனும் புறனுமென்று ஆயிரு பாற்றாய்*
*வகைபட வந்த அணிநலம் தழீஇச்*
*செய்யுள் இடவயின் புல்லிய நெறித்தே'* – இ. வி. பொ. 2

*என்ற நூற்பாவினை உட்கொண்டு சொற்றது.*

செய்யுள் பொருட்கு இடன் ஆதல்,

'பொருட்குஇடன் செய்யுள் ஆதலின் அதனைத்
தெரிப்பதும் அதனது திறம்எனல் வரையார்'
– இ. வி. அணி. 2

என்பதனானும் அறியலாம். 'அகத்தோத்து' – அகத்திணை இயல்.

மாத்திரை வகை – செய்யுளில் ஓசைகுறித்து அளபெடை, ஐகாரக் குறுக்கம் ஔகாரக்குறுக்கம் குற்றியலிகரம் குற்றியலுகரம் முதலியன அலகு பெறுங்கால் பெறும் வேறுபாடுகள்; இவை போல்வன மேவரச் சிவணுதன. திணை முதலிய பன்னிரண்டுமாவன – திணை கைகோள் கூற்று கேட்போர் இடன் காலம் பயன் முன்னம் மெய்ப்பாடு எச்சம் திணைவகை துறை என்பன. இவை அகத்திணை இயலுள் கூறப்பட்டன. (இ. வி. அக. 188) ஏனைய இவ்வோத்துள் கூறப்பட்டுள்ளன.

## ஒத்த நூற்பாக்கள்

'மாத்திரை எழுத்தியல் அசைவகை எனாஅ
யாத்த சீரே அடியாப்பு எனாஅ
மரபே தூக்கே தொடைவகை எனாஅ
நோக்கே பாவே அளவியல் எனாஅத்
திணையே கைகோள் கூற்றுவகை எனாஅக்
கேட்போர் களனே காலவகை எனாஅப்
பயனே மெய்ப்பாடு எச்சவகை எனாஅ
முன்னம் பொருளே துறைவகை எனாஅ
மாட்டே வண்ணமொடு யாப்பியல் வகையின்
ஆறு தலையிட்ட அந்நால் ஐந்தும்
அம்மை அழகு தொன்மை தோலே
விருந்தே இயைபே புலனே இழைபுஎனாஅப்
பொருந்தக் கூறிய எட்டொடும் தொகைஇ
நல்லிசைப் புலவர் செய்யுள் உறுப்பென
வல்லிதின் கூறி வகுத்துரைத் தனரே.' – தொல். பொ. 313

'தொல்காப் பியப்புலவர் தோன்ற விரித்துரைத்தார்
பல்காய னார்வகுத்துப் பன்னினார் - நல்யாப்புக்
கற்றார் மதிக்கும் கலைக்காக்கை பாடினியார்
சொற்றார்தம் நூலில் தொகுத்து.'

'நாதம் முதலாக நல்லுறுப் பேழுமியைந்து
ஏதமில் தன்மையில் ஆசாம் - தாதுக்கள்
ஏழும் புணர்ந்த தியாக்கை எழுத்தாதி
ஏழும் புணர்ந்த தியாப்பு.'

'யாப்பெனப் படுவது யாதென வினவின்
தூக்கும் தொடையும் அடியுமிம் மூன்றும்
நோக்கிற் றென்ப நுணங்கி யோரே.' — நற்றத்தனார்

இமிழ்கடல் வரைப்பின் எல்லையின் வழாஅத்
தமிழியல் வரைப்பின் தாமினிது விளங்க
யாப்பியல் தானே யாப்புற விரிப்பின்
எழுத்தசை சீர்தளை அடிதொடை தூக்கோடு
இழுக்கா மரபின் இவற்றொடு பிறவும்
ஒழுக்கல் வேண்டும் உணர்ந்திசி னோரே.' — பல்காயனார்

'எழுத்தசை சீர்தளை அடிதொடை தூக்கோடு
இழுக்கா நடையது யாப்பெனப் படுமே.' — யா. வி. 1

'கந்தம் மடிவில் கடிமலர்ப் பிண்டிக்கண் ணார்நிழற்கீழ்
எந்தம் அடிகள் இணையடி ஏத்தி எழுத்தசைசீர்
பந்தம் அடிதொடை பாஇனம் கூறுவன் பல்லவத்தின்
சந்தம் மடிய அடியான் மருட்டிய தாழ்குழலே.' — யா. கா. 1

'சிறைமுதல் யாப்புறச் சேருயிர்க்கு உடல்போல்
உரைமுதல் யாப்புற உணர்பொருட்கு உடலாச்
சிறப்பிற் செய்வன செய்யு ளாம்அவை
உறுப்பியல் மரபுமூன்று உரைப்ப விளங்கும்.'
— தொ. வி. 202

'எழுத்துஅசை சீர்தளை அடிதொடை ஆறும்
வழுத்திய செய்யுள் மருவுஉறுப்பு எனலே.' — தொ. வி. 203

## செய்யுள் உறுப்புக்களின் பெயர்க்காரணம்

711. எழுதப் படுதலின் எழுத்தே; அவ்வெழுத்து
அசைத்துஇசை கோடலின் அசையே; அசைஇயைந்து
சீர்கொள நிற்றலின் சீரே; சீர்இரண்டு
தட்டு நிற்றலின் தளையே; அத்தளை
அடுத்து நடத்தலின் அடியே; அடிஇரண்டு
தொடுத்துமன் சேறலின் தொடையே; அத்தொடை
பாவி நடத்தலின் பாவே; பாஒத்து
இனமாய் வழங்கலின் இனம்எனப் படுமே.

**இது மேற்கூறிய எழுத்து முதலிய எட்டற்கும் காரணக் குறி கூறும் முகத்தான் பொது இலக்கணமும் அவற்றின் கிடக்கை முறையும் கூறுகின்றது.**

**இதற்குப் பொருள் கூறுகின்றிலம்; பெரும்பான்மையும் சூத்திரத்தானே பொருள் விளங்கக் கிடத்தலின்.**

**மன் என்ற மிகையானே ஓரடிக் கண்ணவாகிய தொடைவிகற்பமும் கொள்க.** (2)

விளக்கம்

*மேற்கூறிய என்றது சென்ற நூற்பாவில் எழுத்து முதல் இனம் ஈறாக முறையாகக் கூறியது.*

*ஒலிஅணு வடிவு அமைக்கப்படும் வகையில் வரையறுக்கப் படுதலின் எழுத்து எனப்பட்டது. எழுத்து ஒன்றோ பலவோ ஒலித்து வரையறுத்த ஓசை கோடலின் அசை; அசை தனித்தோ இரண்டு முதலாக இணைந்தோ சீராக அமைதலின் சீர்; சீர் இரண்டு நின்ற சீரின் ஈற்றசையோடு வருஞ்சீரின் முதல் அசை தளைந்து நிற்றலின் தளை; தளைகள் தன்னிடம் பொருந்தி அடுத்து*

வருமாறு நடப்பது அடி; அடியிரண்டோ சீர்களோ தொடுத்துக் கிடக்கும் முறை தொடை; தொடை பரவி நடக்கும் இயல்பினது பா; அவ்வப்பாவிற்கு இனமாதல்தன்மையொடு பொருந்தி நடத்தலின் இனம். எழுத்தினுன் அசையும், அசையால் சீரும், சீரால் தளையும், தளையால் அடியும், அடியால் தொடையும், தொடையால் பாவும் பா இனமும், அமைதலின் அம்முறையே கூறப்பட்டன.

ஓர் அடிக்கண்ணவாகிய தொடை விகற்பம் இணைமுதல் முற்று ஈறாய ஏழும், இரட்டைத்தொடை போல்வனவும் ஆம்.

ஒத்த நூற்பாக்கள்

முழுதும் – யா. வி. யா. கா. முதல் நூற்பா மேற்கோள் 2

## எழுத்தின் இயல்

712. அவற்றுள்,
எழுத்துமேல் கிளந்த இயல்பிற்று ஆகும்.

இது நிறுத்த முறையானே, எழுத்து ஆமாறு மாட்டேற்றான் எய்துவிக்கின்றது.

இ–ள்: மேற்கூறிய செய்யுள் உறுப்பு ஆறனுள் முதல் உறுப்பாகிய எழுத்து மேல் எழுத்து ஓத்தினுள் கூறிப்போந்த இயல்பினை உடைத்தாம் என்றவாறு.

மேல் கூறிப்போந்த இயல்பு என்னை எனின், அகரம் முதல் ஒளகாரம் இறுவாய்ப் பன்னீரெழுத்தினையும் உயிர் என்றும், அவற்றுள் அ இ உ எ ஒ என்ற ஐந்தனையும் ஓரளபு இசைக்கும் குற்றெழுத்து என்றும், ஆ ஈ ஊ ஏ ஐ ஓ ஒள என்னும் ஏழனையும் ஈரளபு இசைக்கும் நெட்டெழுத்து என்றும், ககரம் முதல்

னகரம் இறுவாய்ப் பதினெண் எழுத்தினையும் அரை அளபு இசைக்கும் மெய் என்றும், அவற்றுள் கசட தபற என்னும் ஆறனையும் வல்லெழுத்து என்றும், ஙஞண நமன என்னும் ஆறனையும் மெல்லெழுத்து என்றும், யரல வழள என்னும் ஆறனையும் இடை எழுத்து என்றும், நாகியாது எஃகியாது வரகியாது கொக்கியாது குரங்கியாது தெள்கியாது என யகரம் வரக் குற்றுகரம் கெட்டு ஆண்டுத்தோன்றும் இகரமும் கேண்மியா சென்மியா என்னும் உரைஅசை இடைச் சொல் இகரமும் தன் அளவில் சுருங்கி அரை அளபு இசைக்கும் புணர்மொழிக் குற்றியலிகரமும் ஒருமொழிக் குற்றியலிகரமும் என்றும், நாகு எஃகு வரகு கொக்கு குரங்கு தெள்கு என ஈரெழுத்து ஒருமொழி இறுதிக்-கண்ணும் ஐவகைத் தொடர்மொழி இறுதிக்கண்ணும் நின்ற வல்லெழுத்தை ஊர்ந்துவரும் உகரம் தன் அளவில் சுருங்கி அரை அளபு இசைக்கும் குற்றுகரம் என்றும், எஃகு கஃசு கஃடு கஃது கஃபு கஃறு எனக் குற்றெழுத்தின் முன்னர்த்தாய் உயிரொடு கூடிய வல்லெழுத்து ஆறன் மிசைத்தாய ஆய்தம் அரை அளபு இசைத்துவரும் ஆய்த எழுத்து என்றும், அகரம் முதலிய உயிரும் ககரம் முதலிய மெய்யும் கூடி ஓரளபும் ஈரளபுமாயே ஒலிக்கும் பன்னிருபதினெட்டு இருநூற்று ஒருபத்தாறனையும் உயிர்மெய் என்றும், வாஅகை ஈஇகை ஊஉகம் பேஎகன் தைஇயல் தோஒரை மௌஉவல் எனவும்,

'இலாஅஅர்க்கு இல்லை தமர்' – நாலடி 283

எனவும் நெட்டெழுத்துக்கள் ஏழும் தமக்கு இனமாய் ஒத்த குற்றெழுத்துக்களோடும் அவற்றுள் ஐகாரமும் ஔகாரமும் இகர உகரங்களோடும் கூடி மூன்று

மாத்திரையும் ஒரோவழி நான்கு மாத்திரையுமாய் மொழி முதல் இடை கடை என்னும் மூன்றிடத்தும் பெரும்பாலும் அளபெடுக்கும் உயிர்அளபெடை ஏழ் என்றும், அராஅங்கம், முரஞ்ஞ்சு, முரண்ண்டு, பருந்ந்து, அரும்ம்பு, முரன்ன்று, குரவ்வை, அரைய்யர், குரல்ல்கள், திரள்ள்கள், வரஃஃகு எனக் குறில் இணைக்கீழும், மங்ங்கலம், மஞ்ஞ்சு, மண்ண்ணு, பந்ந்து, அம்ம்பு மின்ன்னு, தெவ்வ்வர், வெய்ய்யர், செல்ல்க, கொள்ள்க, எஃஃகு எனக்குறில் கீழும் ஙஞணநமன வயலள ஆய்தம் என்னும் பதினோரொற்றும் தம்மொடு தாம் சார்ந்து ஒரு மாத்திரையாய் மொழி இடைகடை என்னும் இரண்டு இடத்தும் அளபு எடுக்கும் ஒற்றளபெடை பதினொன்று என்றும், ஐப்பசி இடையன் திணை எனவும் ஔவை எனவும் தம்மைச் சுட்டுதற்கண்ணும் அளபு எடுத்தற் கண்ணும் அல்லாதவழி வந்த ஐகார ஔகாரங்கள் முறையே முதல் இடைகடை என்னும் மூன்று இடத்தும் மொழி முதற்கண்ணும் தம் அளவில் சுருங்கி ஓர் அளபு இசைக்கும் ஐகார ஔகாரக் குறுக்கங்கள் என்றும், போன்ம், மருண்ம், வாழும்வளவன் என லகர ளகரங்கள் திரிந்த னகர ணகரங்களின் முன்னும் வருமொழி வகரம் மிசையும் நின்ற மகரம் தன் அளவில் சுருங்கிக் கால் மாத்திரையாய் இசைக்கும் மகரக்குறுக்கமாம் என்றும் கூறியவாறும் என்க. (3)

விளக்கம்

*நிறுத்தமுறை – செய்புளியல் முதல் நூற்பா.*

எழுத்தோத்தினுள், உயிர், குறில், நெடில், மெய், வல்லினம் மெல்லினம் இடையினம், இருவகைக் குற்றியலிகரம், குற்றியலுகரம், ஆய்தம், உயிர்மெய், உயிரளபெடை, ஒற்றள

பெடை, ஐகாரக் குறுக்கம், ஔகாரக்குறுக்கம், மகரக் குறுக்கம் என்பனவற்றைப் பற்றிக் கூறப்பட்ட செய்திகள் ஈண்டுக் குறிக்கப்பட்டுள்ளன.

## ஒத்த நூற்பாக்கள்

'மாத்திரை வகையும் எழுத்தியல் வகையும்
மேற்கிளந் தன்ன என்மனர் புலவர்.' – தொ. பொ. 314

'குறிலும் நெடிலும் அளபெடையும் ஒற்றும்
அறிஞர் அசைக்குறுப்பாம் என்பர் – வறிதே
உயிர்மெய்யும் மூவினமென் றோதினர் என்று
செயிரவர்க்கு நின்றதோ சென்று.'

'கழிநெடி லடியும் காலெழுத் தசையும்
பெயரயல் புணர்ப்பினும் பெயரிடைப் புணர்ப்பினும்
வழுஎன மொழிப வாய்மொழிப் புலவர்.'

'நெடிய குறிய உயிர்மெய் உயிரும்
வலிய மெலிய இடைமை அளபெடை
மூவுயிர்க் குறுக்கமோடு ஆம்அசைக்கு எழுத்தே.'

– அவிநயம்

'குறில்நெடில் அளபெடை உயிர்உறுப்பு உயிர்மெய்
வலிய மெலிய இடைமையோடு ஆய்தம்
இஉ ஐஎன மூன்றன் குறுக்கமோடு
அப்பதின் மூன்றும் அசைக்குறுப்பு ஆகும்.'

– காக்கைபாடினியம்

'குறிய நெடிய உயிர்உறுப்பு உயிர்மெய்
வலிய மெலிய இடைமை அளபெடை
மூவுயிர்க் குறுக்கமும் ஆம்அசைக்கு எழுத்தே.'

– சிறுகாக்கை

'குறில்உயிர் வல்லெழுத்துக் குற்றுகர ஆதி
குறுகிய ஐஔமவ் வாய்தம் – நெறிமையால்
ஆய்ந்த அசைதொடைதாம் வண்ணங்கட் கெண்முறையால்
ஏய்ந்தன அந்நான் கெழுத்து.' – நாலடிநாற்பது

'குறில்நெடில் ஆய்தம் அளபெடை ஐகாரக்
குறில்குற் றிகர வுகரம் – மறுவில்
உயிர்மெய் விராய்மெய்யோ டாறு றெழுத்தும்
செயிர்வன்மை மென்மை சமன்.' – நாலடிநாற்பது

உயிர்உறுப்பு உயிர்மெய் தனிநிலை எனுஅக்
குறில்நெடில் அளபெடை மூவினம் எனுஅ
அஃகிய நல்லுயிர் மஃகான் குறுக்கமோடு
ஐந்து தலையிட்ட ஐயீர் எழுத்தும்
அசைதொடை நேரசை ஆகும் உறுப்பென
வரையறு புலவர் வகுத்துரைத் தனரே.' – பெரியபம்பம்

உயிரே மெய்யே உயிர்மெய் என்று
குறிலே நெடிலே அளபெடை என்று
வன்மை மென்மை இடைமை என்று
சார்பில் தோன்றும் தன்மைய என்று
ஐஔ மகரக் குறுக்கம் என்றுங்கு
ஐமு வெழுத்தும் ஆம்அசைக்கு உறுப்பே.' – யா. வி. 2

'குறில்நெடில் ஆவி குறுகிய மூவுயிர் ஆய்தம்மெய்யே
மறுவறு மூவினம் மைதீர் உயிர்மெய் மதிமருட்டும்
சிறுநுதல் பேரமர்க் கட்செய்ய வாயைய நுண்ணிடையாய்!
அறிஞ ருரைத்த அளபும் அசைக்குறுப் பாவனவே.'

– யா. கா. 4

3

## அசைவகை

**713.** நேர்நிரை எனஅசை ஓர்இரண்டு ஆகும்.

**இது நிறுத்த முறையானே அசைவகை இத்துணைத்து என்கின்றது.**

**இ–ள் : நேர் அசை என்றும் நிரை அசை என்றும் மேல் கூறிய அசை இரண்டு வகையினை உடைத்தாம் என்றவாறு. (4)**

## விளக்கம்

*நிறுத்த முறை – முதல் நூற்பா; அசைகளைக் கணக்கிடும் போது ஒற்றெழுத்துக்களை நீக்கியே கணக்கிடல் வேண்டும் என்ற முறைப்படி நேர் அசையில் ஒரே எழுத்தும் நிரை அசையில் இரண்டு எழுத்தும் உண்மை போதரும்.*

## ஒத்த நூற்பாக்கள்

*'நேரசை ஒன்றே நிரைஅசை இரண்டுஅலகு*
*ஆகும் என்ப அறிந்திசி னோரே.'*
*நேர்ஓர் அலகு நிரைஇரண்டு அலகு*
*நேர்பு மூன்றுஅலகு நிரைபுநான்கு அலகுஎன்று*
*ஓதினர் புலவர் உணரு மாறே.'* – அவிநயம்

*'தனிஅசை என்று இணைஅசை என்று*
*இரண்டென மொழிமனார் இயல்பு உணர்ந்தோரே.'*
– காக்கை.

*'நேரசை என்று நிரைஅசை என்று*
*ஆயிரண்டு ஆகி அடங்குமன் அசையே.'* – யா. வி. 5

*'நேர்நேர் நிரைநேராய் நேர்பு நிரைபடங்கும்*
*சீர்மேல் அசைபலவாய்ச் சேருங்கால் – ஈரியல்பில்*
*குற்றிபோல் குற்றிகரம் கொண்டியற்ற நேர்நிரையாய்*
*முற்றி முடிந்து விடும்.'*

*'நேர்நிரை நேர்பு நிரைபென நான்கும்*
*மேவ ஓடிய விடுவா ரும்முளர்*
*நேர்நிரை நேர்பு நிரைபென நான்கும்*
*ஆட்டுருப் போல ஒருவிரல் நேரே.'*

'விரல்இடை யிட்டன அசைச்சீர் நாலசை
விரல்வரை யிடையினும் மானம் இல்லை.'
'விரல்இடை யிட்டன வாடரு வெடிவரின்
நிரல்பட எழுதி அலகு பெறுமே.' – மயேச்சுவரம் 4

## நேரசை நான்கும் நிரையசை நான்கும்

714. நெடிலும் குறிலும் தனித்தும்ஒற்று அடுத்தும்
நடைபெறும் நேர்அசை நான்கும் நீங்காக்
குறில்இணை குறில்நெடில் தனித்தும்ஒற்றுஅடுத்தும்
நெறிவரு நிரைஅசை நான்கும் ஆகும்.

இது முற்கூறிய அசைகள் ஆமாறும் அவற்றின் எண்ணும் கூறுகின்றது.

இ–ள்: நெட்டெழுத்துத் தனித்தும் குற்றெழுத்துத் தனித்தும் நெட்டெழுத்து ஒற்று அடுத்தும் குற்றெழுத்து ஒற்று அடுத்தும் நடத்தலைப்பெறும் நேர் அசை நான்கும், விட்டு இசையாது குறில் இரண்டு தனித்தும், குறில் நெடில் இணைந்தும் குறில் இரண்டு ஒற்று அடுத்தும் குறில் நெடில் ஆகிய இரண்டும் ஒற்று அடுத்தும் முறையானே வரும் நிரைஅசை நான்கும்ஆம் எ–று.

வழக்கின்கண் நேர்அசை நான்கற்கும் உதாரணம்: ஆ ழி வெள் வேல் எனவும், நிரைஅசை நான்கற்கும் உதாரணம் வெறி சுறா நிறம் விளாம் எனவும், செய்யுட் கண் நேர்அசை நான்கற்கும் உதாரணம்:

'போது சாந்தம் பொற்ப ஏந்தி
ஆதி நாதற் சேர்வோர்
சோதி வானம் துன்னு வோரே' – யா. கா. 5 மே.

எனவும்,

**நிரை அசை நான்கற்கும் உதாரணம்:**

**'அணிநிழல் அசோகமர்ந் தருள்நெறி நடாத்திய**
**மணிதிகழ் அவிழ்ஒளி வரதனைப்**
**பணிபவர் பவம்நனி பரிசறுப் பவரே'** *- யா. கா. 5 மே.*

**எனவும் வரும்.**

**'தனிநிலை ஒற்றுஇவை தாம்அலகு இலவே**
**அளபெடை அல்லாக் காலை ஆன'** *- யா. வி. 3*

**என்ப ஆகலின், நேர் அசை ஓர் அலகும் நிரை அசை இரண்டு அலகும் பெறும் என்பதூஉம் பெற்றும்.** **5**

## விளக்கம்

*முற்கூறிய - சென்ற நூற்பாவில் கூறிய.*

| | | | |
|---|---|---|---|
| *நேர் அசை நான்கு — 1. நெடில்* | — | *ஆ* | — *போ* |
| *2. குறில்* | — | *ழி* | — *து* |
| *3. நெடில் + ஒற்று* | — | *வேல்* | — *சாந்* |
| *4. குறில் + ஒற்று* | — | *வெள்* | — *தம்* |
| *நிரை அசை நான்கு — 2 குறில்* | — | *வெறி* | — *அணி* |
| *குறில் + நெடில்* | — | *சுறா* | — *அசோ* |
| *2 குறில் + ஒற்று* | — | *நிறம்* | — *திகழ்* |
| *குறில் + நெடில் + ஒற்று* | — | *விளாம்* | — *நடாத்* |

*நேரசையில் ஒற்று நீங்கலாக ஓர் எழுத்தும் நிரையசையில் ஒற்று நீங்கலாக இரண்டு எழுத்தும் காணப்படுமாறு நோக்குக.*

## ஒத்த நூற்பாக்கள்

*'குறிலே நெடிலே குறில்இணை குறில்நெடில்*
*ஒற்றொடு வருதலொடு மெய்ப்பட நாடி*
*நேரும் நிரையும் என்றிசின் பெயரே.' - தொ. பொ. 315*

'தனிக்குறில் முதல்அசை மொழிசிதைத்து ஆகாது.'
– தொ. பொ. 319

'ஒற்றெழுத் தியற்றே குற்றிய லுகரம்.' – 320

'முற்றிய லுகரமும் மொழிசிதைத்துக் கொளாஅ
நிற்ற லின்றே ஈற்றடி மருங்கினும்.' – 321

'குற்றிய லுகரமும் முற்றிய லுகரமும்
ஒற்றொடு தோன்றி நிற்கவும் படுமே.' – 322

'நேர்நால் வகையும் நெறியுறக் கிளப்பின்,
நெடிலும் குறிலும் தனியே நிற்றலும்
அவற்றின் முன்னர் ஒற்றொடு நிற்றலும்
இவைதாம் நேர்அசைக்கு எழுத்தின் இயல்பே;
இணைக்குறில் குறில்நெடில் இணைந்தும்ஒற்று அடுத்தும்
நிலைக்குஉரி மரபின் நிரையசைக்கு எழுத்தே.'
– சங்கயாப்பு

'நெடிலொடு நெடிலும் நெடிலொடு குறிலும்
இணையசை ஆகுதல் இலஎன மொழிப.' – காக்கை

'தனிநெடில் தனிக்குறில் ஒற்றொடு வருதலென்று
அந்நால் வகைத்தே நேரசை என்ப;
குறில்இணை குறில்நெடில் ஒற்றொடு வருதலென்று
அந்நால் வகைத்தே நிரையசை என்ப.' – நற்றத்தம்

'குறில்நெடில் தனியாய் நின்றும்ஒற்று அடுத்தும்
குறில்இணை குறில்நெடில் தனித்தும்ஒற்று அடுத்தும்
நடைபெறும் அசைநேர் நிரைஅசை நால்இரண்டே.'
– பல்காயம்

'நெடிலும் குறிலும் ஒற்றொடு வருதலும்
கடிவரை இலவே நேரசைத் தோற்றம்;
குறிலும் நெடிலும் குறில்முன் நிற்பவும்
நெறியின்ஒற்று அடுத்தும் நிரையசை யாகும்.'
– மயேச்சுரம்

'குறில்இணை ஆகியும் குறில்நெடில் ஆகியும்
ஒற்றொடு வந்தும் நிரைஅசை ஆகும்.' – சிறுகாக்கை

'குறிலும் நெடிலும் எனுமிவை நேரிசை; குற்றெழுத்துப்
பெறின்முன் இவையே நிரையசையாம்; பிழைப்பில்லை
பின்புஒற்று, இறினும்.' – வீர. 107

'நெடில்குறில் தனியாய் நின்றும் ஒற்றடுத்தும்
நடைபெறும் நேரசை நால்வகை யானே.' – யா. வி. 6

'குறில்இணை குறில்நெடில் தனித்தும் ஒற்றடுத்தும்
நெறிமையின் நான்காய் வரும்நிரை அசையே.' – யா. வி. 8

'குறிலேநெடிலே குறிலிணை ஏனைக் குறில்நெடிலே
நெரியேவரினும் நிறைந்துஒற்று அடுப்பினும் நேர்நிரைஎன்று
அறி;வேய்புரையும்மென் தோளி! உதாரணம்ஆழி வெள்வேல்
வெறியே சுருநிறம் விண்தோய் விளாம்என்று வேண்டுவரே.'
– யா. கா. 5

'அசையே நேர்நிரை யாம்இரு வகைப;
நெடில்தனிக் குறில்மெய் நிகழ்குறி நேராம்;
இணைக்குறில் குறில்நெடில் இவைநிரை யசையே.'
– தொ. வி. 204

'நெடில்குறில் தனியாய் நின்றும்ஒற்று அடுத்தும்
நடைபெறும் நேரசை நால்வகை யானே.' – மு. வி. யா. 1

'குறில்இணை குறில்நெடில் தனித்தும்ஒற்று அடுத்தும்
நெறிமையின் நான்காய் வரும்நிரை அசையே.'
– மு. வீ. யா. 2

'நேர்நேர் தேமா நிரைநேர் புளிமா
நிரைநிரை கருவிளம் நேர்நிரை கூவிளம்
ஆகும்நாற் சீரும் அகவற்கு உரிய.' – மு. வீ. யா. 3

## சீர் வகை

**715. இயற்சீர் உரிச்சீர் பொதுச்சீர் என்று**
**மயக்குஅற வகுத்த சீர்மூன்று ஆகும்.**

**இது நிறுத்தமுறையானே சீர்வகை இத்துணைத்து என்கின்றது.**

**இ–ள்: இயற்சீரும் உரிச்சீரும் பொதுச்சீரும் என்று ஐயம் அற வகுக்கப்பட்ட சீர் மூன்று வகைப்படும் என்றவாறு. (6)**

### விளக்கம்

*நிறுத்த முறை – செய்யுளியல் முதல் நூற்பா. நேர் நிரை என்ற அசைகள் தம்மொடு தாம் இயல்பாக இணைதலால் பிறக்கும் சீர்கள் எல்லாப் பாக்களுக்கும் பாவினங்களுக்கும் பொருத்தமாக இயலுகின்ற இயற்சீர்கள் என்றும், வெண்பாவிற்கும் வஞ்சிப்பா விற்கும் உரிமை பூண்டு நிற்கும் மூவசைச் சீர்கள் உரிச்சீர்கள் என்றும், இவற்றைப் போலச் சிறப்புடையன அன்றிச் சிறப் பின்றி வழங்கும் நாலசைச் சீர்கள் பொதுச்சீர் என்றும் பெயரிடப்பட்டவாறு அறிக.*

### ஒத்த நூற்பாக்கள்

*'ஈரசை கொண்டும் மூவசை புணர்ந்தும்*
*சீர்இயைந்து இற்றது சீர்எனப் படுமே.' – தொ. பொ. 324*

*'முழுதும்' – யா. வி. 10*

*'இயற்சீர் உரிச்சீர் பொதுச்சீர் என்னும்*
*நிகழ்ச்சிய என்ப நின்ற மூன்றும்.' – மயேச்சுரம்*

*'குற்றுகரம் ஒற்றுக்கிக் கூன்வகுத்துச் சீர்இயற்றி*
*மற்றை நெடிலும் வகையுளியும் – சொற்றதன்மேல்*
*மேலசைச்சீர் நாட்டி அளபெடையை ஈறழித்தால்*
*நாலசைச்சீர்க் கில்லை நடை.'*

'அசையே இரண்டும் மூன்றும் தத்தமில்
இசைய வருவன சீர்எனப் படுமே.' – பல்காயம்

'நாலசை யானும் நடைபெறும்; ஓரசை
சீர்நிலை எய்தலும் சிலவிடத் துளவே.' – பல்காயம்
6

## சீர்களின் வகையும் பாவிற்கு உரிமையும்

716. ஈரசை கூடிய சீர்இயற் சீர்; அஃது
ஈரிரண்டு ஆம்அவை அகவற்கு இசைதலும்,
மூவசை கூடிய சீர்உரிச் சீர்;அது
நாலிரண்டு ஆகி நடைபெறும்; அவற்றுள்,
நேர்இறு நான்கும் வெள்ளை, அல்லன
பாவினுள் வஞ்சியின் பாற்பட்டு இடுதலும்,
நாலசை யானும், ஓரசை யானும்,
சீர்பெற நடப்பது பொதுச்சீர்; ஆங்கு,அது
எண்ணிரண்டு, இரண்டாய், இயறலும், நெறியே.

இது முற்கூறிய சீர்கள் ஆமாறும் அவற்றது எண்ணும் அவை செய்யுட்கு உரியவாமாறும் கூறுகின்றது.

இ-ள் : இரண்டு அசையான் வரும் சீர் இயற்சீர் எனப்படும். அது நேர்நேர்ஆயும், நிரைநேர்ஆயும், நிரைநிரைஆயும், நேர்நிரைஆயும், தம்மில்கூட நான்காம். அங்ஙனம் ஆகிய நான்கு சீரும் ஆசிரிய உரிச்சீர் ஆதலும்; மூவசையான் வரும் சீர் உரிச்சீர் எனப்படும். அது நேர்நேர்நேராயும், நிரைநேர்நேராயும், நிரைநிரைநேராயும், நேர்நிரைநேராயும்) நேர்நேர் நிரையாயும், நிரைநேர்நிரையாயும், நிரைநிரை நிரையாயும், நேர்நிரைநிரையாயும் தம்மில்கூடி எட்டாகி நடக்கும்; அவ்வெட்டனுள் நேர்ஈற்று உரிச்சீர் நான்கும் வெண்பா உரிச்சீர் ஆதலும், நிரைஈற்று உரிச்சீர் நான்கும் வஞ்சி உரிச்சீர் ஆதலும்;

நாலசையானும் ஓரசையானும் சீராம் தன்மை தோன்ற நடப்பது பொதுச்சீர் எனப்படும்; அதுநேர் நேர் நேராயும், நிரைநேர் நேர்நேராயும், நிரை நிரை நேர்நேராயும், நேர் நிரை நேர்நேராயும் ; நேர்நேர் நிரைநேராயும், நிரைநேர் நிரைநேராயும், நிரைநிரை நிரைநேராயும், நேர்நிரை நிரைநேராயும், நேர்நேர் நேர்நிரையாயும், நிரைநேர் நேர்நிரையாயும், நிரைநிரை நேர்நிரையாயும், நேர்நிரைநேர்நிரையாயும், நேர்நேர் நிரைநிரையாயும், நிரைநேர் நிரைநிரையாயும், நிரை நிரைநிரை நிரையாயும், நேர்நிரைநிரைநிரையாயும், தம்மிற்கூடிப் பதினாறு சீராய் நடத்தலும், நேராயும் நிரையாயும் இரண்டு சீராய் நடத்தலும், முறை என்றவாறு.

'சீர்பெற' என்ற மிகையானே வெண்பாவினுள் நாலசைச் சீர்வாரா; ஆசிரியத்துள்ளும் குற்றுகரம் வந்துழி அன்றி வாரா; கலியுள்ளும் பெரும்பான்மையும் குற்றுகரம் வந்துழி அன்றி வாரா ; வஞ்சியுள் குற்றுகரம் வாராதேயும் வரப்பெறும் ; வஞ்சியுள் இரண்டு நாலசைச் சீர் ஓரடியுள் அருகிக் கண்ணுற்று நிற்கவும் பெறும்; அல்லனவற்றுள் பெரும்பான்மையும் ஓரடியுள் ஒன்று அன்றி வாரா ; இரண்டு வரினும் கண்ணுற்று நில்லா ; பாவின் துணைப் பாவினத்துள்ளும் பயின்று வாரா ; நிரை ஈற்றுப் பொதுச்சீர் எட்டும் வஞ்சியுள் அல்லது வாரா எனவும் கொள்க

ஈரசைச் சீர் எல்லாச் செய்யுளுள்ளும் பயின்று இனிது நடத்தலின் இயற்சீர் என்றும், மூவசைச் சீர் எல்லாச் செய்யுளுள்ளும் வரும் எனினும் வெண்பாவிற்கும் வஞ்சிப்பாவிற்கும் உரிமை பூண்டு நிற்றலின் உரிச்சீர் என்றும் ஏனைய பொதுவாய் நிற்றலின் பொதுச்சீர் என்றும் ஆயின.

வழக்கின்கண் ஆசிரிய உரிச்சீர்க்கு உதாரணம் தேமா புளிமா கருவிளம் கூவிளம் எனவும்,

வெண்பா உரிச்சீர்க்கு உதாரணம் தேமாங்காய் புளிமாங்காய் கருவிளங்காய் கூவிளங்காய் எனவும்,

வஞ்சி உரிச்சீர்க்கு உதாரணம் தேமாங்கனி புளிமாங்கனி கருவிளங்கனி கூவிளங்கனி எனவும்,

நாலசைச்சீர்க்கு உதாரணம்-தேமாந்தண்பூ புளிமாந்தண்பூ கருவிளந்தண்பூ கூவிளந்தண்பூ; தேமா நறும்பூ புளிமாநறும்பூ கருவிளநறும்பூ கூவிளநறும்பூ; தேமாந்தண்ணிழல் புளிமாந்தண்ணிழல் கருவிளந்தண்ணிழல் கூவிளந்தண்ணிழல்; தேமாநறுநிழல் புளிமாநறுநிழல் கருவிளநறுநிழல் கூவிளநறுநிழல் எனவும், ஓரசைச் சீர்க்கு உதாரணம் நாள்மலர் எனவும்,

செய்யுட்கண் ஆசிரிய உரிச்சீர்க்கு உதாரணம்:

'குன்றக் குறவன் காதல் மடமகள்
வரைஅர மகளிர் புரையும் சாயலள்
ஐயள் அரும்பிய முலையள்
செய்ய வாயினள் மார்பினள் சுணங்கே.' – யா. கா. 9 மே.

எனவும்,

[குன்ற – தேமா; குறவன் – புளிமா; மடமகள் – கருவிளம்; சாயலள் – கூவிளம்]

வெண்பா உரிச்சீர்க்கு உதாரணம்:

'பொன்ஆர மார்பின் புனைகழல்கால் கிள்ளிபேர்
உன்னேன்என்று ஊழ்உலக்கை பற்றினேற்கு – என்னே
மனஇெடு வாய்எல்லாம் மல்குநீர் கோழிப்
புனல்நாடன் பேரே வரும்' – யா. கா. 9 மே,

எனவும்,

[பொன்ஆர - தேமாங்காய்; புனல்நாடன் – புளிமாங்காய்; புனைகழற்கால் – கருவிளங்காய்; ஊழ்உலக்கை – கூவிளங்காய்.]

வஞ்சி உரிச்சீர்க்கு உதாரணம்:

'பூந்தாமரைப் போதலமரத்
தேம்புனலிடை மீன்திரிதரும்
வளவயலிடைக் களவயின்மகிழ்
வினைக்கம்பலை மனைச்சிலம்பவும்
மனைச்சிலம்பிய மணமுரசொலி
வயற்கம்பலைக் கயல்ஆர்ப்பவும்
நாளும்
மகிழும் மகிழ்தூங்கு ஊரன்
புகழ்தல் ஆனுப் பெருவன் மையனே.' – யா. கா். 9 மே.

எனவும்,

[பூந்தாமரை – தேமாங்கனி; வயற்கம்பலை – புளிமாங்கனி; வளவயலிடை – கருவிளங்கனி; தேம்புனலிடை – கூவிளங்கனி]

நாலசைச் சீர்க்கு உதாரணம்:

| | | |
|---|---|---|
| 'அங்கண்வானத் தமரரசரும் | — | தேமாந்தண்பூ |
| வெங்களியானை வேல்வேந்தரும் | — | கூவிளந்தண்பூ |
| வடிவார்கூந்தல் மங்கையரும் | — | புளிமாந்தண்பூ |
| கடிமலர்ஏத்திக் கதழ்ந்திறைஞ்சச் | — | கருவிளந்தண்பூ |
| சிங்கம்சுமந்த மணிஅணைமிசைக் | — | தேமா நறும்பூ |
| கொங்கவிர்அசோகின் குளிர்நிழற்கீழ்ச் | — | கூவிள நறும்பூ |
| செழுநீர்ப்பவளத் திரள்காம்பின் | — | புளிமா நறும்பூ |
| முழுமதி புரையும் முக்குடைநிழல் | — | கருவிள நறும்பூ |
| வெங்கண் வினைப்பகை விளிவெய்தப் | — | தேமா நறுநிழல் |
| பொன்புனைநெடுமதில் புடைவளைப்ப | — | கூவிள நறுநிழல் |
| அநந்தசதுட்டயம் அவை எய்த | — | புளிமா நறுநிழல் |
| நனந்தலைஉலகுடன் நவைநீங்க | — | கருவிள நறுநிழல் |
| மந்தமாருதம் மருங்கசைப்ப | — | தேமாந்தண்ணிழல் |
| அந்தரதுந்துபி நின்றியம்பு | — | கூவிளந்தண்ணிழல் |

விளங்,கு,சாமரை எழுந்தலமர — புளிமாந்தண்ணிழல்
நலங்கிளர் பூமழை நனிசொரிதர — கருவிளந்தண்ணிழல்
இனிதிருந்து
அருள்நெறி நடாத்திய ஆதிதன்
திருவடி பரவுதும்; சித்திபெறல் பொருட்டே'– யா. கா. 9 மே

எனவும்,

'பாலொடு தேன்கலந் தற்றே பணிமொழி
வாலெயிறு ஊறிய நீர்' – குறள் 1121

[ நீர் – நேர் – நாள் ]

எனவும்,

'நன்றறி வாரின் கயவர் திருவுடையர்
நெஞ்சத்து அவலம் இலர்' – குறள் 1072

[ இலர் – நிரை – மலர் ]

எனவும் வரும். பிறவும் அன்ன. 7

ஒத்த நூற்பாக்கள்

*'இயலசை மயக்கம் இயற்சீர்; ஏனை*
*உரியசை மயக்கம் ஆசிரிய உரிச்சீர்.'* – தொ. பொ. *325*

*'முன்நிரை உறினும் அன்ன வாகும்.'* *326*

*'நேர் அவண் நிற்பின் இயற்சீர்ப் பால.'* *327*

*'இயலசை ஈற்றுமுன் உரியசை வரினே,*
*நிரையசை இயல ஆகும் என்ப.'* *328*

*'அளபெடை அசைநிலை ஆகலும் உரித்தே.'* *329*

*'ஒற்றளபு எடுப்பினும் அற்றென மொழிப.'* *330*

*'இயற்சீர் இறுதிமுன் நேர்அவண் நிற்பின்,*
*உரிச்சீர் வெண்பா ஆகும் என்ப.'* *331*

'வஞ்சிச் சீர்என வகைபெற் றனவே;
வெண்சீர் அல்லா மூவசை யான.' – தொ. பொ. 332

'தன்பா அல்வழித் தான்அடைவு இன்றே.' 333

'வஞ்சி மருங்கின் எஞ்சிய உரிய.' 334

'இசைநிலை நிறைய நிற்குவ ஆயின்,
அசைநிலை வரையார் சீர்நிலை கொளலே.' 339

'இயற்சீர்ப் பாற்படுத்து இயற்றினர் கொளலே;
தலைவகை சிதையாத் தன்மை யான.' 340

'ஓரோ அசையின லாகிய ஈரசைச்
சீஇர்,இயற்சீர் என்னப் படுமே.' – காக்கை

'இயற்சீர் எல்லாம் ஆசிரிய உரிச்சீர்.' ,,

'மூவசை யான்முடிவு எய்திய எட்டினுள்,
அந்தம் தனிச்சீர் நான்குஅசை வெள்ளை;
அல்லன, வஞ்சிக் கிழமை வகைப்பட் டனவே.' – காக்கை

'நாலசை யானும் நடைபெறும்; ஓரசை
சீர்நிலை எய்தலும் சிலவிடத் துளவே.' – காக்கை

'ஈரசை ஆகிய மூவசைச் சீர்தான்,
நேர்இறின் வெள்ளை; நிரைஇறின் வஞ்சி.' – சிறுகாக்கை

'ஈரசைச் சீர்நான்கு இயற்சீர்; மூவசையின்
இயற்சீர் எட்டினுள் அல்லன விரவினும்
நேர்இறின் வெள்ளை; நிரைஇறின்வஞ்சி.' – அவிநயம்

'மூவசைச் சீர்உரிச் சீர்இரு நான்கினுள்,
நேர்இறு நான்கும் வெண்பா உரிச்சீர்;
நிரைஇறு நான்கும் வஞ்சி உரிச்சீர்.'

'தேமா புளிமா கருவிளம் கூவிளமென்று
ஆமா றறிந்தவற்றின் அந்தத்து — நாமாண்பின்
தண்ணிழல் தண்பூ நறும்பூ நறுநிழலும்
நண்ணுவிக்க நாலசைச்சீர் ஆம்.'

'ஈரசைச்சீர் முன்பின் னுகவைத் துறழ்ந்து
மாறியக்கால் நாலசைச் சீர்பதி னாறும்.' – அவிநயம்

'நாலசைச் சீரும் ஒரோவிடத்து இயலும்;
பாவொடு பாவினம் பயிறல் இன்றி.' – பல்காயம்

'நேர்நிரை வரினே சீர்நிலை எய்தும்;
பாவொடு பிறவும் ஆகும் ஒரோவழி.' – அவிநயம்

'நேரும் நிரையும் சீராய் வருதலும்
சீரும் தளையும் சிதைவழிக் கொளலும்
யாவரும் உணர்வர் யாவகைப் பாவினும்.' – மயேச்சுரம்

'ஈரசை கூடிய சீர்இயற் சீர்; அவை
ஈரிரண்டு என்ப; இயல்புஉணர்ந் தோரே.' – யா. வி. 11

'நேர்நேர் நிரைநேர் நேர்நிரை நிரைநிரைஎன்று
ஈரிரண்டு என்ப; இயற்சீர்த் தோற்றம்.' – யா. வி. 11 மே

'மூவுசைச் சீர்உரிச் சீர்இரு நான்கினும்
நேர்இறு நான்கும் வெள்ளை; அல்லன
பாவினுள் வஞ்சியின் பாற்பட் டனவே.' – யா. வி. 12

'நாலசைச் சீர்பொதுச் சீர்பதி னாறே.' 13

'ஓரசைச் சீரும்அஃது; ஓரிரு வகைத்தே.' 14

'ஈரசை நாற்சீர் அகவற் குரிய ;வெண் பாவினவாம்
நேரசை யாலிற்ற மூவசைச் சீர் ;நிரை யாலிறுப
வாரசை மென்முலை மாதே! வகுத்தவஞ் சிக்குரிச்சீர்;
ஓரசை யேநின்றும் சீராம்; பொதுஒரு நாலசையே.'
– யா. கா. 6

'தேமா புளிமா கருவிளம் கூவிளம் சீர்அகவற்கு
ஆமாம்; கடைகாய் அடையின்வெண் பாவிற்கு; அந்தங்கனியா
வாமாண் கலையல்குல் மாதே! வகுத்தவஞ் சிக்குரிச்சீர்;
நாமாண் புரைத்த அசைச்சீர்க் குதாரணம், நாள்மலரே.
– யா. கா. 7

'தண்ணிழல் தண்பூ நறும்பூ நறுநிழல் தந்துறழ்ந்தால்
எண்ணிரு நாலசைச் சீர்வந் தருகும்; இனிஅவற்றுள்
கண்ணிய பூவினம் காய்ச்சீர் அனைய; கனியொடொக்கும்
ஒண்ணிழற்சீர்; அசைச் சீர் இயற் சீர்ஒக்கும்; ஒண்தளைக்கே.'
– யா. கா. 8

'நாலசை யால்நடைபெற்றன வஞ்சியுள்,
ஈரொன்று அணைதலும், ஏனுழி ஒன்றுசென்று
ஆகலும், அந்தம் நிரையசை வந்தன,
கூறிய வஞ்சிக்கு உரியன ஆதலும்
ஆகும் என்ப அறிந்திசி னோரே.' – காக்கை. யா. கா. 8 மே.

'குன்றக் குறவன் அகவல்,பொன் னரம்வெண் பாட்டு, வஞ்சிக்கு
ஒன்றும் உதாரணம் பூந்தா மரைஎன்ப, ஓரசைச்சீர்
நன்றறி வாரிற் கயவரும், பாலொடு நாலசைச்சீர்க்கு
அன்றதென் னார்,அள்ளற் பள்ளத்தினே டங்கல் வானத்துமே.'
– யா. கா. 9

'அசையிரண்டு ஒன்றின் முற்சீர்; மூவசை ஒன்றின்நேர்
இறுவது இடைச்சீர்; நிரைஇறின்பிற்சீர் என இயம்பே.'
– வீ. சோ. யா. 1

'கருவிளங் கூவிளம் தேமா புளிமா எனக்கலந்து,
மருவிய நான்கு முதற்சீர்க ளாம்; மற் றவற்றினந்தத்து
உருவமாம் காய்வரின் ஆம்இடைச்சீர்; ஒண் கனிவருமேல்
செருவமர் வேற்கண்ணி னாய்! கடைச் சீரெனத் தேர்ந்தறியே.'
– வீர. யா. 2

'நேரே நிரையே அசைச்சீர் இரண்டென
நேர்நேர் நிரைநேர் நிரைநிரை நேர்நிரை
ஈரசை இயற்சீர் ஈரிரண்டு; இவற்றோடு
ஈற்று நேர்நிரை இருநான்கு உரிச்சீர்;
நேர் இறும் வெண்சீர் நிரைஇறும் வஞ்சிச்சீர்
நாலசை பொதுச்சீர் நானான்கு என்ப.' – தொ. வி. 204

*'நேர்நேர் தேமா, நிரைநேர் புளிமா,*
*நிரைநிரை கருவிளம், நேர்நிரை கூவிளம்,*
*ஆகுநாற் சீரும், அகவற் குரிய.'* – மு. வீ. யா. 3

*'ஈரசை நாற்சீர் ஈற்றினுள் நேரசை*
*விளந்துகாய் எனவரல், வெண்பாக் குரிய.'* – மு. வீ. யா. 4

*'நிரைஅசை அடைந்து கனிஎன நேர்வது,*
*வஞ்சிக்கு உரியவாம், வழுத்துங் காலே.'* – மு. வீ. யா. 4

*'தண்ணிழல் தண்பூ நறும்பூ நறுநிழல்*
*புணர்ந்து வருவது,பொதுச்சீர் ஆகும்.'* – மு. வீ. யா. 6

*'ஓரசை நின்றும் சீரா கும்மே.'* – மு. வீ. யா. 7

## தளையின் பொதுவகை

7

**717.** தன்சீர் தனதோடு ஒன்றலும் உறழ்தலும்
என்றுஇரண்டு ஆகும் இயம்பிய தளையே.

**இது நிறுத்த முறையானே தளைவகை இத்துணைத்து என்கின்றது.**

**இ-ள் : தன் சீர் இறுதி தன் வருஞ்சீர் முதல் அசையோடு ஒன்றுதலும் ஒன்றுமையும் என இருவகைப் படும் மேற்கூறிய தளை என்றவாறு.** (8)

### விளக்கம்

*நிறுத்த முறை – செய்யுளியல் முதல் நூற்பா.*

*முதல் சீரின் ஈற்றசை நேர் அல்லது நிரையாக இருக்க, வருஞ்சீரின் முதல் அசை நேர் அல்லது நிரையாக அமையப் பொருந்துவதே ஒன்றுதலாம். முதல் சீரின் ஈற்றசை நேர் அல்லது நிரையாக இருக்க வருஞ்சீரின் முதல்அசை மாறியிருப்பின் ஒன்றுமையாகும்.*

### ஒத்த நூற்பாக்கள்

*'செயற்குஉரி இருசீர் செய்யுள் நடப்புழி*
*தலைப்பெய நிற்பது, தளையெனப் படுமே.'*

*'நின்ற சீர்ஈற் றெடுவருஞ் சீர்முதல்*
*ஒன்றுதல் ஒன்றாது ஆகுதல் தளையே.'*

*'நின்றசீர் ஈறும் வருஞ்சீர் முதலசையும்*
*ஒன்றியும் ஒன்றாதும் ஓசைகொள — நின்றால்,*
*வளையொன்று முன்கையாய்! வந்தன நூலோர்*
*தளையென்று கட்டுரைப்பர் தாம்.'* 8

## எழுவகைத்தளைகள்

718. நேர்நேர் ஒன்றல் நிரைநிரை ஒன்றல்என்று
ஆயிரு தளையும் அகவற்கு இயைதலும்,
வெண்சீர் ஒன்றல் இயற்சீர் விகற்பம்என்று
அவ்விரு தளையும் வெள்ளைக்கு அமைதலும்,
நிரைஈற்று உரிச்சீர் ஒன்றலும் உறழ்தலும்
வரையாது வருதல் வஞ்சிக்கு வருதலும்,
வெண்சீர் விகற்பம் கலித்தளை ஆதலும்,
பண்பினின் வழாஅப் பாங்கின என்ப.

**இது முற்கூறிய தளைகள் ஆமாறும் அவற்றது எண்ணும் அவை செய்யுட்கு உரிய ஆமாறும் கூறுகின்றது.**

**இ-ள் : நேர் ஈற்று இயற்சீர்முன் நேர் வந்து ஒன்றுவது ஆகிய நேர் ஒன்று (ஆசிரியத்தளையும்,) நிரை ஈற்று இயற்சீர் முன் நிரை வந்து ஒன்றுவது ஆகிய நிரை ஒன்று ஆசிரியத்தளையும் என அவ்விரண்டு தளையும் ஆசிரியப்பாவுக்கு உரியவாதலும்.**

வெண்பா உரிச்சீர்முன் நேர்வந்து ஒன்றுவது ஆகிய வெண்சீர் வெண்டளையும் நேர் ஈற்று இயற்சீர்முன் நிரையும் நிரை ஈற்று இயற்சீர்முன் நேரும் வந்து உறழ்தல் ஆகிய இயற்சீர் வெண்டளையும் என அவ்விரண்டு தளையும் வெண்பாவிற்கு உரிய ஆதலும்,

நிரை ஈற்று உரிச்சீர்முன் நிரைவந்து ஒன்றுதல் ஆகிய ஒன்றிய வஞ்சித்தளையும் நேர்வந்து உறழ்தல் ஆகிய ஒன்றாத வஞ்சித்தளையும் கடியப்படாது வருதல் வஞ்சிப்பாவிற்கு உரிய ஆதலும்,

வெண்சீர் முன் நிரை வந்து விகற்பித்தல் கலித்தளைக்கு உரித்தாதலும் தத்தம் இயல்பினின்றும் தவறாத முறையான் வரும் என்று கூறுவர் ஆசிரியர் என்றவாறு.

'பண்பினின் வழாஅ' என்ற மிகையானே, தன் சீரோடு வேற்றுச் சீர் ஒன்றியும் ஒன்றாதும் வருவனவும் சிறப்பிலவேனும் தன்தளையாம் என்றும், நேர் ஈற்றுப் பொதுச்சீர் எட்டும் நேர் ஈற்று உரிச்சீர் போலக்கொண்டு வருஞ்சீர் முதல் அசையோடு ஒன்றியது வெண்சீர் வெண்டளை ஆகவும் ஒன்றாதது கலித்தளையாகவும் வழங்கப்படும் என்றும், நிரை ஈற்றுப் பொதுச்சீர் எட்டும் நிரை ஈற்று உரிச்சீர் போலக்கொண்டு வருஞ்சீர் முதல் அசையோடு ஒன்றினும் ஒன்றாது விடினும் வஞ்சித்தளை ஆகவும் வழங்கப்படும் என்றும், ஓரசைச்சீர் இயற்சீரே போலக்கொண்டு வருஞ்சீர் முதல் அசையோடு நேராய் ஒன்றியது நேர் ஒன்று ஆசிரியத்தளை ஆகவும் நிரையாய் ஒன்றியது நிரை ஒன்று ஆசிரியத்தளை ஆகவும் ஒன்றாதது இயற்சீர் வெண்டளைஆகவும் வழங்கப்படும் என்றும் கொள்க.

நேர் ஒன்று ஆசிரியத்தளையான் வந்த செய்யுள் :

**'உள்ளார் கொல்லோ தோழி! முள்ளுடை**
**அலங்குகுலை ஈந்தின் சிலம்பிபொதி செங்காய்,**
**துகில்பொதி பவளம் ஏய்க்கும்,**
**அகில்படு கள்ளிஅம் காடிறந் தோரே'** - *யா. கா.* 11 மே.

எனவும்,

*[உள்ளார் - நேர்நேர் - தேமா; கொல்லோ - நேர்நேர்; மாமுன் நேர் வருதலின் நேர் ஒன்று ஆசிரியத்தளை - பிறவும் அன்ன.]*

நிரை ஒன்று ஆசிரியத்தளையான் வந்த செய்யுள் :

**'திருமழை தலைஇய இருள்நிற விசும்பின்,**
**விண்அதிர் இமிழ்இசை கடுப்பப்**
**பண்ணமைத் தவர்தேர் சென்ற ஆறே'** - *யா. கா.* 11 மே.

எனவும்,

*[திருமழை - நிரைநிரை - கருவிளம்; தலைஇய - நிரைநிரை; விளம்முன் நிரை வருதலின் நிரை ஒன்று ஆசிரியத்தளை - பிறவும் அன்ன.]*

வெண்சீர் வெண்டளையானும் இயற்சீர் வெண்டளையானும் வந்த செய்யுள் :

**'சிலைவிலங்கு நீள்புருவம் சென்றொசிய நோக்கி,**
**முலைவிலங்கிற் றென்று முனிவாள், — மலைவிலங்கு**
**தார்மாலை மார்ப! தனிமை பொறுக்குமோ**
**கார்மாலை கண்கூடும் போழ்து'** - *யா. கா.* 11 மே.

எனவும்,

*[சிலை விலங்கு - நிரைநிரை நேர் - கருவிளங்காய்; நீள் புருவம் - நேர் நிரைநேர்; - காய்முன் நேர் வருதலின் வெண்சீர் வெண்டளை. என்று முனிவாள் - மாமுன் நிரை வருதலின் இயற்சீர் வெண்டளை. பொறுக்குமோ கார்மாலை - விளம்முன் நேர் வருதலின் இயற்சீர் வெண்டளை. பிறவும் அன்ன.]*

ஒன்றிய வஞ்சித்தளையானும் ஒன்றாத வஞ்சித்தளை யானும் வந்த செய்யுள் :

'மந்தாநிலம் வந்தசைப்ப
வெண்சாமரை புடைபெயர்தரச்
செந்தாமரை நாள்மலர்மிசை
என ஆங்கு
இனிதின் ஒதுங்கிய இறைவனை
மனம்மொழி மெய்களின் வணங்குதும் மகிழ்ந்தே'

– *யா. கா. 11 மே.*

எனவும்,

[*வெண்சாமரை – நேர்நேர்நிரை – தேமாங்கனி; புடை பெயர்தர – நிரைநிரைநிரை – கருவிளங்கனி; (கனிமுன்நிரை வருதலின் ஒன்றிய வஞ்சித்தளை.) மந்தாநிலம் வந்தசைப்ப – கனி முன் நேர் வருதலின் ஒன்றாத வஞ்சித்தளை.*]

கலித்தளையான் வந்த செய்யுள் :

'செல்வப்போர்க் கதக்கண்ணன் செயிர்த்தெறிந்த சினஆழி,
முல்லைத்தார் மறமன்னர் முடித்தலையை முருக்கிப்போய்,
எல்லைநீர் வியன்கொண்மூ இடைநுழையும் மதியம்போல்,
மல்லல்ஓங் கெழில்யானை மருமம்பாய்ந் தொளித்ததே'

– *யா. கா. 11 மே.*

எனவும்,

[*செல்வப்போர் – நேர்நேர்நேர் – தேமாங்காய்; கதக் கண்ணன் – நிரைநேர்நேர் –(காய்முன் நிரை வருதலின் கலித்தளை.)*]

நாலசைச்சீர் உரிச்சீரே போலத் தளைவகை எய்திய செய்யுள் :

'அங்கண்வானத் தமரரசரும்
வெங்களியானை வேல்வேந்தரும்
வடிவார்கூந்தல் மங்கையரும்
கடிமலரேந்திக் கதழ்ந்திறைஞ்சச்
சிங்கஞ்சுமந்த மணிஅணைமிசைக்

கொங்கவிர்அசோகின் குளிர்நிழற்கீழ்ச்
செழுநீர்பவளத் திரள்காம்பின்
முழுமதிபுரையும் முக்குடைநீழல்
வெங்கண்வினைப்பகை விளிவெய்தப்
பொன்புனைநெடுமதில் புடைவளைப்ப
அநந்தசதுட்டயம் அவைஎய்த
நனந்தலைஉலகுடன் நவைநீங்க
மந்தமாருதம் மருங்கசைப்ப
அந்தரதுந்துபி நின்றியம்ப
விலங்குசாமரை எழுந்தலமர
நலங்கிளர்பூமழை நனிசொரிதர
இனிதிருந்து
அருள்நெறி நடாத்திய ஆதிதன்
திருவடி பரவுதும்; சித்திபெறல் பொருட்டே' - யா.கா. 9 மே.

எனவும்,

*[நாலசைச் சீர்கள் மூவசைச் சீர்கள் போல இறுதி அசை பற்றிக் கொள்ளப்படல் வேண்டும் - பூவைக் காயாகவும் நிழலைக் கனியாகவும் கொள்ளல்வேண்டும்.]*

**நிரை அசைச்சீர் இயற்சீரே போல நின்று வருஞ்சீர் முதல் அசையோடு ஒன்றாமையின் இயற்சீர் வெண்டளை யாயும் நேர் அசைச்சீர் இயற்சீரே போல நின்று வருஞ்சீர் முதல் அசையோடு ஒன்றினமையின் ஆசிரியத் தளையாயும் வந்த செய்யுள் :**

'உரிமை யின்கண் இன்மையால்
அரிமதர் மழைக் கண்ணாள்
செருமதி செய் தீமையால்
பெருமை கொன்ற என்பவே' – யா. கா. 11 மே.

**எனவும் வரும். பிறவும் அன்ன.** **(9)**

*[அசைச்சீருள் நேர்அசைகள் தேமாஞ்சீர் போலவும் நிரை அசைகள் கருவிளஞ்சீர் போலவும் கொள்ளப்படும். மழை. நிரை; செய் – நேர்.]*

## விளக்கம்

மாமுன் நேர்வரின் நேர்ஒன்று ஆசிரியத்தளை.

விளம்முன் நிரைவரின் நிரைஒன்று ஆசிரியத்தளை.

மாமுன் நிரையும் விளம்முன் நேரும்வரின் இயற்சீர் வெண்டளை.

காய்முன் நேர்வரின் வெண்சீர் வெண்டளை.

காய்முன் நிரைவரின் கலித்தளை.

கனிமுன் நிரைவரின் ஒன்றிய வஞ்சித்தளை.

கனிமுன் நேர்வரின் ஒன்றாத வஞ்சித்தளை.

நாலசைச் சீர்கள் எல்லாம் மூவசைச் சீர்கள் போலக் கொள்ளப்பட்டுப் பூக்கள் காய்களாகவும், நிழல்கள் கனிகளாகவும் அமைந்தாற் போலத் தளை அறுக்கப்படும்.

ஓர் அசைச் சீர்களாகிய நேர் நிரை என்பனவற்றை நேர்நேர் போலவும் நிரைநிரை போலவும் கொள்ளுதல் வேண்டும்.

## ஒத்த நூற்பாக்கள்

'இயற்சீர் இரண்டு தலைப்பெயல் தம்முள்
விகற்பம் இலவாய் விரவி நடப்பின்
அதற்பெயர் ஆசிரி யத்தளை யாகும்.' — காக்கை

'ஈரசை இயற்சீர் ஒன்றியது எல்லாம்
ஆசிரி யத்தளை என்மனர் புலவர்.' — மயேச்சுரம்

'இயற்சீர் இரண்டு தலைப்பெயல் தம்முள்
விகற்ப நடையது வெண்சீர் ஆகும்.' — காக்கை

'உரிச்சீர் அதனுள் உரைத்தமை அன்றிக்
கலக்குந் தளையெனக் கண்டிசி னோரே.' — காக்கை.

'நேரீற்று நேர்வரின் வெண்டளை யாகும்; அந்
நேரீற் றியல்பின் நிரைவரின் — ஒரும்,
கலித்தளையாம்; பால்வகையால் வஞ்சித் தளையாம்;
நிரைவரினும் நாலசைச்சீர்க் கண்.'

'உரைச்சீர்த் தளைவகைக்கு எய்தும் பெயரது
நிரைநேர் இறுதி நாலசைச் சீர்க்கண்.' – காக்கை.

'ஓரசைப் பொதுச்சீர்த் தளைவகை தெரியின்
ஈரசைச் சீர்த்தளைக் கெய்தும் என்ப.' – காக்கை.

'ஓரசைப் பொதுச்சீர் ஒன்று தாயினும்,
வெண்டளை ஒன்றியது ஆசிரியத் தளையே.' – காக்கை

'தன்சீர் இரண்டும் தலைப்பெயத் தம்முள்ஒத்து
ஒன்றினும் ஒன்றாது ஒழியினும், வஞ்சியின்
பந்தம் எனப்பெயர் பகரப் படுமே.' – காக்கை

'இயற்சீர் ஒன்று நிலையது வெண்டளை;
உரிச்சீர் அதனில் ஒன்றுதல் இயல்பே.' – சிறுகாக்கை

'ஈரசை இயற்சீர் ஒன்றிய நிலைமை
ஆசிரி யத்தளை ஆகும் என்ப.' – சிறுகாக்கை.

'வெண்சீர் இறுதி நிரைவரின் கலித்தளை
வஞ்சி வகைமை வரம்பின் றாகும்.' – சிறுகாக்கை.

'ஈரசை இயற்சீர் ஒன்றுதல் இயல்பே.' – அவிநயம்

'இயற்சீர் ஒன்று நிலையது வெண்டளை;
உரிச்சீர் அதனுள் ஒன்றுதல் இயல்பே.' – மயேச்சுரம்

'நேரும் நிரையுமாம் இயற்சீர் ஒன்றின்
யாவரும் அறிப ஆசிரி யத்தளை.' – ,,

'வேறுபடவரின் அது வெண்டளை; வெண்சீர்
ஆறறி புலவர்க்கு ஒன்றினும் அதுவே.' – ,,

'வெண்சீர்ப் பின்னர் நிரைவரு காலைக்
கண்டனர் புலவர் கலித்தளை யாக.' – ,,

'வஞ்சி உரிச்சீர் வந்தன வழிமுறை
எஞ்சிய வரினும் வஞ்சித் தளையே.' – ,,

'ஈரசைச்சீர் தாமுரிய ஆசிரியச் சீர்க்கென்றும்
நேரீற் றியற்பின் நிரைவருங்கால் – ஓரும்
கலித்தளையாம் என்க,அக வற்சீர் கலியின்
ஒலிக்கியையா என்றுரைக்கும் ஓத்து.'

'வெண்சீர் ஒன்றலும் இயற்சீர் விகற்பமும்,
என்றிரண்டு என்ப வெண்டளைக்கு இயல்பே.' – யா. வி. 18

'ஈரசைச் சீர்நின்று இனிவரும் சீரொடு
நேரசை ஒன்றல் நிரையசை ஒன்றலென்று
ஆயிரு வகைத்தே ஆசிரியத் தளையே.' – யா. வி. 19

'தன்சீர் இறுதி நிரையொடு நேர்வரின்
வஞ்சித் தளையின் வகையிரண் டாகும்.' – யா. வி. 21

'நிரையீறு இல்லா உரிச்சீர் முன்னர்,
நிரைவரு காலை கலித்தளை ஆகும்.' – யா. வி. 20

'தண்சீர் தனதொன்றின் தன்றளை யாம்,தண வா வஞ்சி
வண்சீர் விகற்பமும் வஞ்சிக் குரித்து,வல் லோர்வகுத்த
வெண்சீர் விகற்பம் கலித்தளை யாய்விடும், வெண்டளையாம்
ஒண்சீர் அகவல் உரிச்சீர் விகற்பமும்; ஒண்ணுதலே.'

– யா. கா. 10

'திருமழை உள்ளார் அகவல், சிலைவிலங்கு ஆகும் வெள்ளை,
மருளறு வஞ்சி மந் தாநிலம் வந்து,மை தீர்கலியின்
தெரிவுறு பந்தம்நல் லாய்! செல்வப் போர்க்கதக் கண்ணனென்ப,
உரிமையின் கண்ணின்மை ஓரசைச் சீருக்கு தாரணமே.'

– யா. கா. 11

'பொதுச்சீர் இறுதியும் உரிச்சீர் இறுதியும்
தளைக்குஒக்கும்; அசைச்சீர் இயற்சீர் அனைத்தே;
பொதுச்சீர் வெள்ளையுள் புணரா உக்குறள்;
அல்லன கலியும் அகவலும் சேரா;
வஞ்சியும் அனைத்தும் வரினும் ஓரடி
எல்லையும் ஒன்றுமேல் இணையின் தொடரா.'

– தொ. வி. 206

'தளையாம் சீர்தமுள் தளைப்படும் கட்டே
அவைஏழ் வகைய ஆகும்; அவற்றுள்,
ஆசிரியத் தளையாம் இயற்சீர் ஒன்றல்.' – தொ. வி. 207

'வெண்டளை என்ப வெண்சீர் ஒன்றலும்
இயற்சீர் விகற்பமும் என இரு வகைத்தே.' – தொ. வி. 208

'கலித்தளை வெண்சீர் கலந்த விகற்பமே.' – தொ. வி. 209

'வஞ்சித் தளையாம் வஞ்சிக்கு உரிச்சீர்
ஒன்றலும் ஒன்றாது ஒழுகலும் என்ப.' – தொ. வி. 210

'மாமுன் நேர்நேர் ஒன்றிய அகவல்
தளையாம்; விளமுன் நிரைநிரை ஒன்றிய
அகவல் தளையாம்; ஆயுங் காலே.' – மு. வீ. யா. 9

'காய்முன் நேரே வெண்சீர் வெண்டளை;
மாமுன் நிரையும் விளமுன் நேரும்
இயற்சீர் வெண்டளை, என்மனார் புலவர்.' – மு. வீ. யா. 8

'கனிமுன் நேர்ஒன் றாதவஞ் சித்தளை;
ஒன்றிய தளைநிரை வரினா கும்மே.' – மு. வீ. யா. 10

'காய்முன் நிரைவரின் கலித்தளை ஆகும்.' – மு. வீ. யா. 11

'பொதுச்சீர்ப் பூக்காய் ஆகும்; நிழல்கனி
ஆகும்; என்மனார் அறிந்திசி னோரே.' – மு. வீ. யா. 12

'அகவற் சீரற் றாகும்ஓ ரசைச்சீர்.' – மு. வீ. யா. 13

9

## ஐவகை அடிகள்

719. குறள்அடி சிந்துஅடி அளவு அடி நெடில்அடி
கழிநெடில் அடிஎன அடிஐந்து ஆகும்.

இது நிறுத்தமுறையானே அடிவகை இத்துணைத்து என்கின்றது.

**இ-ள் : குறள் அடியும் சிந்தடியும் அளவடியும் நெடிலடியும் கழிநெடிலடியும் என முற்கூறிய அடி ஐந்து வகைப்படும் என்றவாறு.** (10)

### விளக்கம்

*நிறுத்தமுறை – முதல் நூற்பா.*

### ஒத்த நூற்பாக்கள்

*'குறள்சிந்து அளவு நெடில்கழி நெடிலென்று*
*ஐவகை மரபின அடிவகை தாமே.'* – காக்கை

*'தடுத்தன தட்டத் தளைபல தழுவியும்*
*அடுத்த சீரின் அடியெனப் படுமே.'*

*'குறளடி சிந்தடி அளவடி நெடிலடி*
*கழிநெடில் அடியெனக் கட்டுரைத் தனரே.'* – யா. வி. 23

*'அடியென்ப தளைத்த அம்சீராம் நடை; அவை*
*குறளடி இருசீர் சிந்தடி முச்சீர்*
*அளவடி நாற்சீர் ஐஞ்சீர் நெடிலடி*
*கழிநெடி லடிஐந்தே கடந்தசீர் இவற்றுள்*
*எண்சீர் மிக்கடி எனின்சிறப்பு அன்றே.'* – தொ. வி. 211
*10*

## ஐவகை அடிகளின் சீர்கள்

720. குறள்ஒரு பந்தம், இருதளை சிந்தாம்,
முத்தளை அளவடி, நால்தளை நெடில்அடி,
ஐந்தளை முதலா எழுதளை காறும்
வந்தவும் பிறவும் கழிநெடில், என்ப.

**இது முற்கூறிய அடிகள் ஆமாறு கூறுகின்றது.**

**இ-ள் : ஒரு தளையான் வந்த அடியினைக் குறள் அடி என்றும், இரு தளையான் வந்த அடியினைச் சிந்தடி**

என்றும், முத்தளையான் வந்த அடியினை அளவடி என்றும், நால்தளையான் வந்த அடியினை நெடிலடி என்றும், ஐந்தளையான் வந்த அடியினையும் அறு தளையான் வந்த அடியினையும், எழுதளையான் வந்த அடியினையும் இவற்றின் மிக்க தளையான் வந்த சிறப்பு இல்லா அடியினையும் கழிநெடிலடி என்றும் கூறுவர் ஆசிரியர் என்றவாறு.

'இரண்டு முதலா எட்டுஈ றாகத்
திரண்ட சீரான் அடிமுடிவு உடைய,
இறந்தன வந்து நிறைந்துஅடி முடியினும்
சிறந்த அல்ல, செய்யுள் உள்ளே'

என்றார் பிறரும் எனக் கொள்க.

குறள் அடியான் வந்த செய்யுள் :

[இருசீர் அடி]

'திரைத்த சாலிகை
நிரைத்த போல்நிறைந்து
இரைப்ப தேன்களே
விரைக்கொள் மாலையாய்' - யா. கா. 13 மே; சூளா. சீய. 172

எனவும்,

சிந்தடியான் வந்த செய்யுள் :

[முச்சீர் அடி]

'இருது வேற்றுமை இன்மையால்
சுருதி மேல்துறக் கத்தினோடு
அரிது வேற்றுமை ஆகவே
கருது வேல்தடக் கையினாய்' - யா. கா. 13 மே; சூளா. சீய. 170

எனவும்,

அளவடியான் வந்த செய்யுள் :

[நாற்சீர் அடி]

'தேம்பழுத்து இனியநீர் மூன்றும் தீம்பலா
மேம்பழுத்து அளிந்தன சுளையும் வேரியும்

மாம்பழக் கனிகளும் மதுத்தண்டு ஈட்டமும்
தாம்பழுத் துளசில தவள மாடமே'
- யா. கா. 13 மே; சூளா. நகர. 14

எனவும்,

நெடிலடியான் வந்த செய்யுள் :

[ஐஞ்சீர் அடி]

'வென்றான் வினையின் தொகையாகி விரிந்து தன்கண்
ஒன்றாய்ப் பரந்த உணர்வின்னொழி யாது முற்றும்
சென்றான் திகழும் சுடர்சூழ்ஒளி மூர்த்தி ஆகி
நின்றான் அடிக்கீழ்ப் பணிந்தார்வினை நீங்கி நின்றார்.'
யா. கா. 13 மே; சூளா. கடவுள் வாழ்த்து

எனவும்,

ஐந்தளையான் வந்த கழிநெடிலடிக்குச் செய்யுள் :

[அறுசீர் அடி]

'இரைக்கும் அஞ்சிறைப் பறவைகள் எனப்பெயர்ந்து
இனவண்டு புடைசூழ
நுரைக்கள் என்னுமக் குழம்புகள் திகழ்ந்தெழ
நுடங்கிய இலயத்தால்
திரைக்க ரங்களில் செழுமலைச் சந்தனத்
திரள்களைக் கரைமேல்வைத்(து)
அரைக்கும் மற்றிது குணகடல் திரையொடும்
பொருதலது அவியாதே.' - யா. கா. 13 மே; சூளா. கல். 51

எனவும்,

அறுதளையான் வந்த கழிநெடிலடிக்குச் செய்யுள் :

[எழுசீர் அடி]

'கணிகொண்டு அலர்ந்த நறவேங்கை யோடு
கமழ்கின்ற காந்தள் இதழால்
அணிகொண்டு அலர்ந்த வனமாலை சூடி
அகில்ஆவி குஞ்சி கமழ
மணிகுண் டலங்கள் இருபாலும் வந்து
வரைஆகம் மீது திவளத்
துணிகொண்டு இலங்கு சுடர்வேலி னோடு
வருவான்இது என்கொல் துணிவே.'
- யா. கா. 13 மே; சூள. அர. 197

எனவும்,

எழுதளையான் வந்த கழிநெடிலடிக்குச் செய்யுள் :

[எண்சீர் அடி]

'மூவடிவி னுலிரண்டு சூழ்சுடரும் நாண
மூதுலகம் மூடிஎழில் முளைவயிரம் நாற்றித்
தூவடிவி னுலிலங்கு வெண்குடையின் நீழல்
சுடரோயுன் அடிபோற்றிச் சொல்லுவதொன் றுண்டால்;
சேவடிகள் தாமரையின் சேயிதழ்கள் தீண்டச்
சிவந்தனவோ சேவடியின் செங்கதிர்கள் பாயப்
பூவடிவு கொண்டனவோ பொங்கொளிகள் சூழ்ந்து
புலங்கொளா வால்;எமக்கெம் புண்ணியர்தம் கோவே.'

– யா. கா. 13 மே; சூளா. துறவு. 64

எனவும்,

எண்தளையான் வந்த கழிநெடில் அடிக்குச் செய்யுள் :

[ஒன்பதுசீர் அடி]

'இடங்கை வெஞ்சிலை வலங்கை வாளியின் எதிர்ந்த தானையை
இலங்கும் ஆழியின் விலங்கியோள்
முடங்கு வால்உளை மடங்கல் மீமிசை முனிந்து சென்றுடன்
முரண்ட ராசனை முருக்கியோள்
வடங்கொள் மென்முலை நுடங்கு நுண்இடை மடந்தை சுந்தரி
வளங்கொள் பூண்முலை மகிழ்ந்தகோன்
தடங்கொள் தாமரை இடங்கொள் சேவடி தலைக்குவைப்பவர்
தமக்கு வெந்துயர் தவிர்க்குமே.'

– யா. கா. 13 மே; சூளா. துறவு. 164

எனவும்,

ஒன்பதிற்றுத் தளையான் வந்த கழிநெடில் அடிக்குச் செய்யுள் :

[பதின்சீர் அடி]

'கொங்கு தங்கு கோதைஓதி மாதரோடு
கூடும் நீடும் ஓடை நெற்றி
வெங்கண் யானை வேந்தர் போந்து வேதகீத
நாத! என்று நின்று தாழ

**அங்க பூர்வம் ஆதி யாய ஆதி நூலின்**
**நீதி ஓதும் ஆதி ஆய**
**செங்கண் மாலைக் காலை மாலை சேர்நர் சேர்வர்**
**சோதி சேர்ந்த சித்தி தானே'** – யா.கா. 13 மே; சூளா.துற. 41

எனவும் வரும் பிறவும் வந்துழிக் கண்டுகொள்க. (11)

## ஒத்த நூற்பாக்கள்

*'இருசீர் குறளடி, சிந்தடி முச்சீர்,*
*அளவடி நாற்சீர், அறுசீர் அதனின்*
*இழிபு நெடிலடி, என்றிசி னோரே.'* – காக்கை

*'நாற்சீர் கொண்டது நேரடி யாமென்ப;*
*தூக்கொடும் தொடையொடும் சிவணும் என்ப.'* – நற்றத்தம்

*நாற்சீர் கொண்டது அடியெனப் படுமே.'*–தொ.பொ. *344*

*'அடியுள் ளனவே தளையொடு தொடையே.'* –தொ.பொ. *345*

*'அடியிறந்து வருதல் இல்லென மொழிப.'* –தொ.பொ. *346*

*'குறளடி, சிந்தடி, இருசீர், முச்சீர்;*
*அளவடி, நெடிலடி, நாற்சீர்; ஐஞ்சீர்;*
*நிரல்நிரை வகையான் நிறுத்தனர் கொளலே.'* – யா.வி. *24*

*'கழிநெடில் அடியே கசடறக் கிளப்பின,*
*அறுசீர் முதலா ஐயிரண்டு ஈறு*
*வருவன பிறவும் வகுத்தனர் கொளலே.'* –யா.வி. *25*

*'குறளிரு சீரடி, சிந்துமுச் சீரடி, நாலொருசீர்*
*அறைதரு காலை அளவொடு, நேரடி; ஐயொருசீர்*
*நிறைதரு பாதம் நெடிலடி யாம்;நெடு மென்பணைத்தோள்*
*கறைகெழு வேற்கணல் லாய்!மிக்க பாதம்,கழிநெடிலே.'*
– யா.கா. *12*

*'திரைத்த,இருது, குறள்,சிந்து; அளவடி தேம்பழுத்து,*
*விரிக்கு நெடிலடி, வேனெடுங் கண்ணி!வென்றான் வினையின்,*
*இரைக்குங், கணிகொண்ட, மூவடி வோ,டிடங்,கொங்கு, மற்றும்*
*தரிக்கைக் கவான்மருப் பேர்முலை மாதர்! கழிநெடிலே.'* – *13*

'இருசீரும் முச்சீரும் நாற்சீரும் ஐஞ்சீரும் ஐந்தின்மிக்கு
வருசீரும் அந்தரங், கால்,தீப், புனலொடு, மண்,பெயரால்
திரிசீ ரடியாம்; குறள்சிந்து அளவு நெடில்தகைமை
தெரிசீர்க் கழிநெடில் என்று நிரல்நிறை செப்புவரே.'
– வீ. சோ. 109

'இருசீ ரான்வரல் குறளடி எனலே.' – மு.வீ.யா. 14
'முச்சீ ரான்முடி வதுசிந் தடியே.' – மு.வீ.யா. 15
'நாற்சீ ரான்வரல் அளவடி யாகும்.' – மு.வீ.யா. 16
'ஐஞ்சீ ரான்வரு வதுநெடி லடியே.' – மு.வீ.யா. 17
'அறுசீர் முதலே யிருசீ ரடிகடை
யாக வருவது, கழிநெடி லாகும்.' – மு.வீ.யா. 18

11

## அடிகளின் செய்யுட்குரிமை

721. வெண்பா அகவல் கலிநேர் அடியும்
ஒண்பா வஞ்சி குறள்சிந்து அடியும்
பாஇனம் எல்லாப் பாதமும் பெறுமே.

இது மேற்கூறிய அடிகள் செய்யுட்கு உரிய ஆமாறு கூறுகின்றது.

இ-ள் : வெண்பாவும் ஆசிரியப்பாவும் கலிப்பாவும் அளவடியும், ஒள்ளிய வஞ்சிப்பாக் குறள்அடியும் சிந்து அடியும், பாஇனம் எல்லா அடியும் பெற்று நடக்கும் என்றவாறு. நேரடி எனினும் அளவடி எனினும் ஒக்கும்.

அளவடியான் வந்த வெண்பாவிற்குச் செய்யுள் :

'வளம்பட வேண்டாதார் யார்யாரும் இல்லை;
அளந்தன போகம் அவர்அவர் ஆற்றான்;
விளங்காய் திரட்டினார் இல்லை; களங்கனியைக்
கார்எனச் செய்தாரும் இல்' – யா. கா. 23 மே ; நாலடி. 103

எனவும்,

அளவடியான் வந்த ஆசிரியப் பாவிற்குச் செய்யுள் :

'செங்களம் படக்கொன்று அவுணர்த் தேய்த்த
செங்கோல் அம்பின் செங்கோட்டு யானைக்
கழல்தொடிச் சேஎய் குன்றம்
குருதிப் பூவின் குலைக்காந் தட்டே' – *யா. கா. 23 மே ; குறுந். 1*

எனவும்,

அளவடியான் வந்த கலிப்பாவிற்குச் செய்யுள் :

'அரிதாய அறன்எய்தி அருளியோர்க்கு அளித்தலும்
பெரிதாய பகைவென்று பேணாரைத் தெறுதலும்
புரிவமர் காதலின் புணர்ச்சியும் தரும்எனப்
பிரிவுஎண்ணிப் பொருள்வயின் சென்றநம் காதலர்
வருவர்கொல் வயங்கிழாய் வலிப்பல்யான் கேள்இனி.'

[*இது தரவு*]

'அடிதாங்கும் அளவன்றி அனல்அன்ன வெம்மையால்
கடியவே கனங்குழாய் காடுஎன்றார், அக்காட்டுள்,
துடியடிக் கயந்தலை கலக்கிய சின்னீரைப்
பிடிஊட்டிப் பின்உண்ணுங் களிறுஎனவும் உரைத்தனரே.'

'இன்பத்தின் இகந்துஒரீஇ, இலைதீய்ந்த உலவையான்,
துன்புறூஉம் தகையவே காடுஎன்றார், அக்காட்டுள்
அன்புகொள் மடப்பெடை அசைஇய வருத்தத்தை
மென்சிறக ரால்ஆற்றும் புறவுஎனவும் உரைத்தனரே.'

'கல்மிசை வேய்வாடக் கனைகதிர் தெறுதலான்,
துன்னரூஉம் தகையவே காடுஎன்றார், அக்காட்டுள்
இன்னிழல் இன்மையான் வருந்திய மடப்பிணைக்குத்
தன்நிழலைக் கொடுத்தளிக்கும் கலை,எனவும் உரைத்தனரே.'

[*இவை மூன்றும் தாழிசை*]

என வாங்கு (*தனிச்சொல்*)

'இனைநலம் உடைய கானகம் சென்றோர்,
புனைநலம் வாட்டுநர் அல்லர்; மனைவயின்

பல்லியும் பாங்குஒத்து இசைத்தன ;
நல்எழில் உண்கணும் ஆடுமால் இடனே.' (சுரிதகம்)

– யா. கா. 23 மே. கலி. 11

எனவும்,

குறள் அடியான் வந்த வஞ்சிப்பாவிற்குச் செய்யுள் :

'சுறமறிவன துறைஎல்லாம்
இறஈன்பன இல்எல்லாம்
மீன்திரிவன கிடங்குஎல்லாம்
தேன்தாழ்வன பொழில்எல்லாம்
என ஆங்கு,
தண்பணை தழீஇய இருக்கை
மண்கெழு நெடுமதில் மன்னன் ஊரே.' – யா. கா. 23 மே.

எனவும்,

சிந்தடியான் வந்த வஞ்சிப்பாவிற்குச் செய்யுள் :

'தொன்னலத்தின் புலம்பலைப்பத் தொடித்தோள்மேல்
பன்னலத்த கலம்தொலையப் பரிவெய்தி,
என்நலத்தகை இதுஎன்னென எழில்காட்டிச்
சொல்நலத்தகைப் பொருள்கருத்தி னில்சிறந்தாங்கு
எனப் பெரிதும்
கலங்குஅஞர் எய்தி விடுப்பவும்,
சிலம்பிடைச் செலவும், சேண்நிவந் தற்றே.'

– யா. கா. 23 மே.

எனவும் வரும். எல்லா அடியானும் வந்த பா இனங்களுக்குச் செய்யுள் 'திரைத்த சாலிகை' முதலிய வாக முற்காட்டியவே கொள்க. (பக். 72) பிறவும் அன்ன.

'ஒண்பா' என்ற மிகையானே வெண்பாவின் ஈற்று அடியும் நேரிசை ஆசிரியப்பாவின் ஈற்று அயல் அடியும், கலிவெண்பாவின் ஈற்று அடியும் சிந்தடியாயும், இணைக் குறள் ஆசிரியப்பாவின் இடைஅடி குறள் அடியாயும் சிந்து அடியாயும் வரப்பெறும் எனக் கொள்க. (12)

### விளக்கம்

மேற்கூறிய என்றது சென்ற நூற்பாவினை.

### ஒத்த நூற்பாக்கள்

'வஞ்சி அடியே இருசீர்த்து ஆகும்.' – தொ. பொ. 357

'முச்சீ ரானும் வரும்இடன் உடைத்தே.' – ,, 358

'ஈற்றயல் அடியே ஆசிரிய மருங்கின்
தோற்றம் முச்சீர்த்து ஆகும் என்ப.' – தொ. பொ. 380

'இடையும் வரையார் தொடைஉணர் வோரே.' – 381

'வெண்பா ஈற்றடி முச்சீர்த்து ஆகும்.' – 384

'சிந்தடி குறளடிஎன்று ஆயிரு திறமும்
வஞ்சிக் கிழமை வகைப்பட் டனவே.' – காக்கை

'இருசீர் அடியும் முச்சீர் அடியும்
வருதல் வேண்டும் வஞ்சி யுள்ளே.' – மயேச்சுரம்

'ஆசிரியம் வெண்பாக் கலியோடு மும்மையும்
நாற்சீர் அடியான் நடைபெற் றனவே.' – காக்கை.

'சிந்தும் குறளும் வருதலும் அவ்வழி
உண்டென் றறைப உணர்ந்திசி னோரே.' – காக்கை.

'வஞ்சி–அல்லாப் பாவினுள் அடிவகை தெரியின்
எல்லாம் நாற்சீர், அல்லடி யியலா,
இறுதியும் அயலும் இடையும் முச்சீர்
பெறுதியும் வரையார் வெள்ளைமுதல் மூன்றும்.' –மயேச்சுரம்

'இரண்டினும் மூன்றினும் வஞ்சி ஆகும்;
நாற்சீர் அடியான் பாப்பிற மூன்றே.' – அவிநயம்

'ஆசிரி யப்பா வெண்பாக் கலியென்று
மூவகைப் பாவும் நேரடிக்கு உரிய.' – நத்தத்தம்

'வஞ்சி அல்லா மூவகைப் பாவும்
எஞ்சுதல் இலவே நாற்சீர் அடிவகை.' – சிறுகாக்கை

'விருத்தம் துறையொடு தாழிசை என்று
இசைச்செய்யுள் எல்லா அடியினும் நடக்கும்.' - காக்கை

'எல்லா அடியினும் இனப்பா நாற்சீர்
அல்லா மெல்லடிப் பாவினுக் கியலா.' - அவிநயம்

'சிந்தடி குறளடி என்றிரண்டு அடியான்
வஞ்சி நடக்கும் என்மனார் புலவர்.' - யா. வி. 26

'கலியொடு வெண்பா அகவல் கூறிய
அளவடி தன்னான் நடக்குமன் அவையே.' - 27

'பாவினம் எல்லா அடியினும் நடக்கும்.' - 28

'வெண்பா அகவல் கலிப்பா அளவடி, வஞ்சியென்னும்
ஒண்பா அடிகுறள் சிந்து என்று உரைப்ப.' - யா. கா. 22

'வளம்பட என்பது வெள்ளைக்கு, அகவற்கு உதாரணம் செங்
களம்படக் கொன்று, கலிக்கரி தாய,கண் ணார்கொடிபோல்
நுடங்கிடை மாதே! சுறமறி, தொன்னலத்தின் புலம்பென்று
உளங்கொடு நாவலர் ஓதினர் வஞ்சிக் குதாரணமே.'
- யா. கா. 23

12

## தொடையும் விகற்பமும்

722. மோனை எதுகை முரண்இயைபு அளபெடை
ஆனஅவ் வைந்தும், அவற்றோடு ஒத்துஉறாஉம்
பாத இணையே பொழிப்போடு ஒரூஉத்தொடை
கூழை கதுவாய் மேலதூஉம் கீழதூஉம்
சீரிய முற்றொடு சிவணும் ஐஏழும்,
தொடையும் அத்தொடையின் விகற்பமும் ஆகும்.

இ-ள் : அடி மோனையும் அடி எதுகையும் அடி முரணும் அடிஇயைபும் அடிஅளபெடையும் ஆகிய அவ்வைந்தும், அத்தொடைகளை ஒத்து ஓர் அடிக்கண்ணே வரும் இணைமோனையும் பொழிப்புமோனையும் ஒரூஉமோனையும் கூழைமோனையும் மேற்கதுவாய் மோனையும் கீழ்க்கதுவாய் மோனையும் முற்று மோனையும்,

**இணை எதுகையும் பொழிப்புஎதுகையும் ஒரூஉ எதுகையும் கூழை எதுகையும் மேற்கதுவாய் எதுகையும் கீழ்க்கதுவாய் எதுகையும் முற்று எதுகையும்,**

**இணைமுரணும் பொழிப்புமுரணும் ஒரூஉமுரணும் கூழைமுரணும் மேற்கதுவாய்முரணும் கீழ்க்கதுவாய் முரணும் முற்றுமுரணும்,**

**இணை இயைபும் பொழிப்பு இயைபும் ஒரூஉ இயைபும் கூழை இயையும் மேற்கதுவாய்இயைபும் கீழ்க்கதுவாய் இயையும் முற்று இயையும்,**

**இணை அளபெடையும் பொழிப்புஅளபெடையும் ஒரூஉ அளபெடையும் கூழைஅளபெடையும் மேற்கது வாய்அளபெடையும் கீழ்க்கதுவாய்அளபெடையும் முற்று அளபெடையும், ஆகிய இவற்றோடு பொருந்தும் முப்பத்தைந்தும் முற்கூறிய தொடையும் அத்தொடை விகற்பமும் ஆம் என்று கூறுவர் ஆசிரியர் எ–று. (13)**

விளக்கம்

*நிறுத்தமுறை – முதல் நூற்பா.*

*மோனை எதுகை முரண் இயைபு அளபெடை என்ற ஐந்தனையும் இணை பொழிப்பு ஒரூஉ கூழை மேற்கதுவாய் கீழ்க்கதுவாய் முற்று என்பனவற்றோடு உறழத் தொடை விகற்பகம் 35 ஆயினமை உணரப்படும்.*

ஒத்த நூற்பாக்கள்

*'மோனை எதுகை முரணே இயைபுஎன*
*நால்நெறி மரபின தொடைவகை என்ப.' –தொ.பொ. 400*

*'அளபெடை தலைப்பெய ஐந்தும்ஆகும்.' – தொ.பொ. 401*

'தொடைஎனப் படுவது அடைவகை தெரியின்
எழுத்தொடு சொற்பொருள் என்றிவை மூன்றின்
நிரல்பட வந்த நெறிமைத் தாகி,
அடியோடு அடியிடை யாப்புற நிற்கும்
முடிவினது என்ப; முழுதுணர்ந் தோரே.' – காக்கை

'அடுத்த அடியிரண்டு யாவகைப் பாவினும்
தொடுத்து வழங்கலின் தொடையெனப்படுமே.'–மயேச்சரம்

'எழுத்தியல் தொடைகளின் இடைக்கண் மாறுகோள்
மொழிப்பொருள் தொடைமுறை பிறழ வைத்ததோர்
இழுக்கியல் பிலாநிரல் நிறையும் எட்டென
ஒழுக்கினர் உண்மையை உணர்தல்வேண்டும்.'

'தொடையே அடியிரண்டு இயையத் தோன்றும்.' –யா.வி. 33

'மோனை எதுகை முரண் இயைபு அளபெடை
பாத இணையே பொழிப்போடு ஒரூஉத்தொடை
கூழை கதுவாய் மிசையதூஉம் கீழதூஉம்
சீரிய முற்றொடு சிவணுமார் அவையே.' – யா.வி. 34

'மயங்கிய தொடைமுதல் வந்ததன் பெயரான்
இயங்கினும் தளைவகை இன்னன ஆகும்.' – அவிநயம்
பல்வகைத் தொடைஒரு பாவினில் தொடுப்பின்,
சொல்லிய முதல்தொடை சொல்லினர் கொளலே.'
– சிறுகாக்கை

'தொடையடி உட்பல வந்தால், எழுவாய்
உடையத னற்பெயர் ஒட்டப் படுமே.' – காக்கை

'விகற்பங் கொள்ளாது ஓசையின் அமைதியும்
முதற்கண் அடிவரின், முடிவ தாகும்.' – பல்காயம்

'முதற்சீர்த் தோற்றம் அல்லது ஏனை
விகற்பம் கொள்ளார் அடியிறந்து வரினே.' – நத்தத்தம்

'தொடைபல தொடுப்பினும் தளைபல விரவினும்
முதல்வந் ததனை மொழிந்திசின் பெயரே.' – யா.வி. 53

## தொடை, தொடைவகை - இலக்கணம்

723. முதல்எழுத்து ஒன்றின் மோனையும், ஏனை
இரண்டாம் எழுத்தோடு இயையின் எதுகையும்,
மொழியினும் பொருளினும் முரணின் முரணும்,
இறுவாய் ஒப்பின் இயைபுத் தொடையும்,
அளபுஎடுத்து ஒன்றின் அடிஅள பெடையும்,
இருசீர் மிசைவரத் தொடுப்பின் இணையும்,
முதலொடு மூன்றும் சீர்த்தொடை பொழிப்பும்,
சீர்இரண்டு இடைவிடத் தொடுப்பின் ஒரூஉவும்,
மூஒரு சீரும் முதல்வரத் தொடுப்பின்
கூழையும் முதல்அயல் சீர்ஒழித்து அல்லன
மேல்வரத் தொடுப்பின் மேற்கது வாயும்
ஈற்றுஅயல் சீர்ஒழித்து எல்லாம் தொடுப்பின்
கீழ்க்கது வாயும் கிளந்த ஈர்இரண்டு
சீர்தொறும் தொடுப்பின் முற்றும் ஆகும்.

**இது முற்கூறிய தொடையும் தொடை விகற்பமும் ஆமாறு கூறுகின்றது.**

**இ-ள்: அடிதொறும் முதல் எழுத்து ஒன்றிவரத் தொடுப்பின் அடி மோனைத் தொடையும், அடிதொறும் ஒழிந்த இரண்டாம் எழுத்து ஒன்றிவரத் தொடுப்பின் அடிஎதுகைத் தொடையும், மொழியானும் பொருளானும் மறுதலைப்படத் தொடுப்பின் அடிமுரண் தொடையும், அடிதொறும் ஈற்று எழுத்து ஒன்றிவரத் தொடுப்பின் அடிஇயைபுத் தொடையும், அடிதொறும் அளபு எடுத்து ஒன்றிவரத் தொடுப்பின் அடி அளபெடைத் தொடையும்,**

**முதல் இருசீர்க்கண்ணும் மோனை முதலாயின வரத் தொடுப்பின் இணைத் தொடையும், முதல் சீர்க்கண்ணும்**

மூன்றும் சீர்க்கண்ணும் மோனை முதலாயின வரத் தொடுப்பின் பொழிப்புத் தொடையும், நடு இருசீர்க் கண்ணும் இன்றி முதல் சீர்க்கண்ணும் நான்காம் சீர்க் கண்ணும் மோனை முதலாயின வரத் தொடுப்பின் ஒரூஉத் தொடையும், இறுதிச் சீர்க்கண் இன்றி ஒழிந்த மூன்று சீர்க்கண்ணும் மோனை முதலாயின வரத் தொடுப்பின் கூழைத் தொடையும், முதல் அயல் சீர்க்கண் இன்றி ஒழிந்த மூன்று சீர்க்கண்ணும் மோனை முதலாயின வரத்தொடுப்பின் மேற்கதுவாய்த் தொடையும், ஈற்று அயல் சீர்க்கண் இன்றி ஒழிந்த மூன்று சீர்க் கண்ணும் மோனை முதலாயின வரத் தொடுப்பின் கீழ்க்கதுவாய் தொடையும், சொல்லப்பட்ட நான்கு சீர்க்கண்ணும் மோனை முதலாயின வரத்தொடுப்பின் முற்றுத் தொடையும் ஆம் என்றவாறு.

'ஏனை' என்ற மிகையானே, இரண்டாம் எழுத்து ஒன்றிவரினும் முதல் எழுத்து எல்லாம் தம்முள் ஒத்த அளவினவாய் வந்து கட்டு என்பதற்கு பட்டு என்பது அல்லது பாட்டு என்பது எதுகை ஆகாது எனவும்; முதல்நிலை முதலிய உயிர் அளபெடை மூன்றும், குறில் இணைக்கீழும் குறில் கீழும் வரும் ஒற்று அளபெடை இரண்டும், தம்முள் ஒன்றிவரத் தொடுப்பது சிறப்பு உடைத்து எனவும் கொள்க. 'ஈர் இரண்டு' எனவே இணைமோனை முதலிய எல்லாம் அளவடிக்கண்ணே வழங்கப்படும் என்பதூஉம், 'இறுவாய் ஒப்பின் இயைபுத் தொடை' எனவே அதன் விகற்பம் ஆகிய இணை இயைபுத்தொடை முதலிய ஏழும் ஈற்றுச்சீரே முதல் சீராகக்கொண்டு வழங்கப்படும் என்பதூஉம் பெற்றாம்.

அடிமோனைத் தொடைக்குச் செய்யுள் :

'மாவும் புள்ளும் வதிவயின் படர
மாநீர் விரிந்த பூவும் கூம்ப
மாலை தொடுத்த கோதையும் கமழ
மாலை வந்த வாடையின்
மாயோள் இன்உயிர் புறத்துஇறுத் தற்றே' – யா. கா. 18 மே.

எனவும்,

அடி எதுகைத் தொடைக்குச் செய்யுள் :

'வடியேர்கண் நீர்மல்க வான்பொருட்கண் சென்றார்
கடியார் கனங்குழாய்! காணார்கொல்? காட்டுள்
இடியின் முழக்கஞ்சி, ஈர்ங்கவுள் வேழம்
பிடியின் புறத்தசைத்த கை' – யா. கா. 18 மே.

எனவும்,

பொருள் சொல் முரண் தொடைக்குச் செய்யுள் :

'இருள்பரந் தன்ன மாநீர் மருங்கின்
நிலவுக்குவித் தன்ன வெண்மணல் ஒருசிறை
இரும்பின் அன்ன கருங்கோட்டுப் புன்னை
பொன்னின் அன்ன நுண்தாது உறைக்கும்
சிறுகுடிப் பரதவர் மடமகள்
பெருமதர் மழைக்கணும் உடையவால் அணங்கே'
– யா. கா. 18 மே.

எனவும்,

[ சிறு – பெரு என்பன சொல்முரண் ]

அடி அளபெடைத் தொடைக்குச் செய்யுள் :

'ஆஅ அளிய அலவன்தன் பார்ப்பினோடு
ஈஇர் இரைகொண்டு ஈர்அளைப் பள்ளியுள்,
தூஉம் திரைஅலைப்பத் துஞ்சாது, இறைவன்தோள்
மேஎ வலைப்பட்ட நம்போல், நறுநுதால்!
ஓஒ உழக்கும் துயர்' – யா. கா. 18 மே,

எனவும்,

இணைமோனை முதலிய மோனை விகற்பம் ஏழும் வந்த செய்யுள் :

'அணிமலர் அசோகின் தளிர்நலம் கவற்றி – இணை
அரிக்குரல் கிண்கிணி அரற்றும் சீறடி – பொழிப்பு
அம்பொன் கொடிஞ்சி நெடுந்தேர் அகற்றி – ஒரூஉ
அகன்ற அல்குல் அந்நுண் மருங்குல் – கூழை
அரும்பிய கொங்கை அவ்வளை அமைத்தோள் – மேற்கதுவாய்
அவிர்மதி அனைய திருநுதல் அரிவை – கீழ்க்கதுவாய்
அயில்வேல் அனுக்கி அம்புஅலைத்து அமர்ந்த – முற்று
கருங்கயல் நெடுங்கண் நோக்கம்என்
திருந்திய சிந்தையைத் திறைகொண் டனவே'

– யா. கா. 20 மே.

எனவும்,

இணை எதுகை முதலிய எதுகை விகற்பம் ஏழும் வந்த செய்யுள் :

'பொன்னின் அன்ன பொறிசுணங்கு ஏந்திப் – இணை
பன்னருங் கோங்கின் நன்னலம் கவற்றி – பொழிப்பு
மின்அவிர் ஒளிவடம் தாங்கி மன்னிய – ஒரூஉ
நன்னிற மென்முலை மின்இடை வருத்தி – கூழை
என்னையும் இடுக்கண் துன்னுவித்து இன்னடை – மேற்கதுவாய்
அன்ன மென்பெடை போலப் பன்மலர்க் – கீழ்க்கதுவாய்
கன்னியம் புன்னை இன்னிழல் துன்னிய – முற்று
மயில்ஏய் சாயல்அவ் வாள்நுதல்
அயில்வேல் உண்கண்எம் அறிவுதொலைத் தனவே'

– யா. கா. 20 மே

எனவும்,

இணை முரண் முதலிய முரண் விகற்பம் ஏழும் வந்த செய்யுள் :

'சீறடிப் பேரகல் அல்குல் ஒல்குபு – இணை
சுருங்கிய நுசுப்பின் பெருகுவடம் தாங்கி – பொழிப்பு
குவிந்துசுணங்கு அரும்பிய கொங்கை விரிந்து – ஒரூஉ

சிறிய பெரிய நிகர்மலர்க் கோதைதன் - கூழை
வெள்வளைத் தோளும் சேயரிக் கருங்கணும் - மேற்கதுவாய்
இருக்கையும் நிலையும் ஏந்துஎழில் இயக்கமும் - கீழ்க்கதுவாய்
துவர்வாய்த் தீஞ்சொலும் உவந்துஎனை முனியாது - முற்று
என்றும் இன்னணம் ஆகுமதி,
பொன்திகழ் நெடுவேல் போர்வல் லோயே!' - யா. கா. 20 மே

எனவும்,

இணை இயைபு முதலிய இயைபு விகற்பம் ஏழும் வந்த செய்யுள் :

'மொய்த்துடன் தவழும் முகிலே பொழிலே - இணை
மற்றதன் அயலே முத்துறழ் மணலே - பொழிப்பு
நிழலே இனிஅதன் அயலது கடலே - ஒரூஉ
மாதர் நகிலே வல்லே இயலே - கூழை
வில்லே நுதலே வேற்கண் கயலே - மேற்கதுவாய்
பல்லே தளவம் பாலே சொல்லே - கீழ்க்கதுவாய்
புயலே குழலே மயிலே இயலே - முற்று

அதனால்

இவ்வயின் இவ்வுரு இயங்கலின்
எவ்வயி னோரும் இழப்பர்தம் நிறையே' - யா. கா. 20 மே

எனவும்,

இணை அளபெடை முதலிய அளபெடை விகற்பம் ஏழும் வந்த செய்யுள் :

'தாஅட் டாஅ மரைமலர் உழக்கிப் - இணை
பூஉக் குவளைப் போஒ தருந்திக் - பொழிப்பு
காஅய்ச் செந்நெல் கறித்துப் போஒய் - ஒரூஉ
மாஅத் தாஅள் மோஒட் டெருமை - கூழை
தீஇம் புனலிடைச் சேஒர் பாஅல் - மேற்கதுவாம்
மீஇன் ஆஅர்ந்து உகளும் சீஇர் - கீழ்க்கதுவாய்
ஆஅ னஅ நீஇள் நீஇர் - முற்று
ஊரன் செய்த கேண்மை
ஆய்வளைத் தோளிக்கு அலர்ஆ னதே' - யா.கா. 20 மே.

எனவும் வரும். பிறவும் அன்ன,

இரும்பும் பொன்னும் மாறுபாடு உடைமையின் பொருள் முரண் ஆயிற்று எனவும் குடியும் கண்ணும் ஆகாது சிறுமை பெருமை என்னும் சொல்லே மாறு கோடலின் சொல்முரண் ஆயிற்று எனவும் கொள்க. (14)

### விளக்கம்

அளபெடை விகற்பத்துக்குச் சிதம்பரச் செய்யுட் கோவைச் செய்யுள் :

'பூஉந் தண்ண் புனமயில் அகவ
மாஅங் குயில்கள் சாஅய்ந் தொளிப்பப்
கோஒ டரங்கள் முசுவொடும் வெரீஇக்
காஅல் தழீஇக் கவிழ்ந்ந் தொடுங்கச்
சூஉல் முதிர்ந்து காஅல் வீஇழ்
வாஅன் தாஅழ் மழைப்பெயல் தலைஇத்
தேஎன் தாஅழ் பூஉங் காஅ
வளங்ங் கனிந்த மணிமன்றுள்
விளங்ங் கொளியை உளங்கொளல் தவமே.' -சி.செ.கோ. 42

### ஒத்த நூற்பாக்கள்

'அடிதொறும் தலைஎழுத்து ஒப்பதுமோனை.' –தொ.பொ. 404

'அஃதொழித்து ஒன்றின் எதுகை ஆகும்.' –தொ.பொ. 405

'ஆயிரு தொடைக்கும் கிளைஎழுத்து உரிய.' –தொ.பொ. 406

'மொழியினும் பொருளினும் முரணுதல் முரணே.' – 407

'இறுவாய் ஒன்றல் இயைபின் யாப்பே.' – 408

'அளபெழின் அவையே அளபெடைத் தொடையே.'– 409

'ஒருசீர் இடையிட்டு எதுகை யாயின்
பொழிப்புஎன மொழிதல் புலவர் ஆறே.' – 410

'இருசீர் இடையிடின் ஒரூஉஎன மொழிப.' – 411

'அடிமுதல் ஓரெழுத்து அடிமுதல் தொடையே.'

'முதலெழுத்து ஒன்றி முடிவது மோனை.'

'ஏனையது ஒன்றின் எதுகைத் தொடையே.'

'முதலெழுத்து அளவொத்து அயலெழுத்து ஒன்றுவது
எதுகை அதன்வழி இயையவும் பெறுமே.' —பல்காயம்

'முதலெழுத்து ஒன்றுவ; மோனை எதுகை
முதலெழுத்து அளவோடு ஒத்தது முதலா
அதுஒழித்து ஒன்றின் ஆகும் என்ப.' —பல்காயம்

'ஆதி எழுத்தே அடிதொறும் வரின்அடி
மோனைத் தொடையென மொழிமனர் புலவர்.' —யா.வி. 35

'இரண்டாம் எழுத்தொன்று இயைவதே எதுகை.' 36

'மொழியினும் பொருளினும் முரணுதல் முரணே.' 38

'இறுவாய் ஒப்பின்அஃது இயைபு எனப்படுமே.' 40

'அளபெடை ஒன்றுவது அளபெடைத் தொடையே.' 41

'சொல்லினும் பொருளினும் மாறுகோள் முரணே.'
— பல்காயம்

'பொருளினும் மொழியினும் முரணுதல் முரணே.' —நத்தத்தம்

'பொருளினும் சொல்லினும் முரணத்தொடுப்பின்,
முரண்என மொழிப முந்தை யோரே.' — மயேச்சுரம்

'மறுதலை உரைப்பினும் பகைத்தொடை ஆகும்.' அவிநயம்

'மொழியினும் பொருளினும் முரணத் தொடுப்பின்,
இரணத் தொடையென்று எய்தும் பெயரே.' — காக்கை

'இறுவாய் ஒப்பினஃது இயைபுஎன மொழிப.'— அவிநயம்

'இயைபே இறுசீர் ஒன்றும் என்ப.' — பல்காயம்

'இறுசீர் ஒன்றின் இயைபெனப் படுமே.' — நத்தத்தம்

'அளபெடைத் தொடைக்கே அளபெடை ஆகும்.' —பல்காயம்

'அளபெடைத் தொடைக்கே அளபெடை ஒன்றும்.'-நத்தத்தம்

'அளபெடை இனம்பெறத் தொடுப்பது அளபெடை.' –அவிநயம்

'சொல்லிசை அளபெழ நிற்பது அளபெடை.' – சிறுகாக்கை

'அளபெழுந்து யாப்பின்அஃது அளபெடைத் தொடையே.'
– மயேச்சுரம்

'இரண்டாம் சீர்வரின் இணைஎனப் படுமே.'

'இருசீர் மிசைவரத் தொடுப்பது இணையே.' – யா.வி. 42

'முதலொடு மூன்றுஞ் சீர்த்தொடை பொழிப்பே.' – யா.வி. 43

'ஒரூஉத்தொடை,
இருசீர் இடைவிடின் என்மனார் புலவர்.' – அவிநயம்

'சீர்இரண்டு இடைவிடத் தொடுப்பது ஒரூஉத்தொடை.'
– யா.வி. 44

'மூன்றுவரின் கூழை, நான்குவரின் முற்றே.'

'மூவொருசீரும் முதல்வரத் தொடுப்பது
கூழை என்மனார் குறியுணர்ந் தோரே.' – யா. வி. 45

'முதல்அயல் சீர்ஒழித்து அல்லன மூன்றின்
மிசைவரத் தொடுப்பது மேற்கது வாயே.' – யா. வி. 46

'ஈற்றுஅயல் சீர்ஒழித்து எல்லாம் தொடுப்பது
கீழ்க்கது வாயின் கிழமையது ஆகும்.' – யா. வி. 47

'சீர்தொறும் தொடுப்பது முற்றெனப் படுமே.' – யா. வி. 48

அவை தாம்,

'முதலோடு அயல்கொள்வது இணை,அயல் இன்றி
மூன்றும் சீரது பொழிப்பு,இரண்டு இடைவிட்டு
இறுதியொடு கொள்வது ஒரூஉ, இறுதிச்
சீர்ஒழித்து ஏனைய ஒன்றின் கூழை,
முதல்ஈறு அடைந்தவற்று இன்மை இருவகைக்
கதுவாய், முற்றும் நிகழ்வது முற்றே,
முதலோடெட்டு ஆகும், என்மனார் புலவர்.' – பரிமாணம்

'எழுவாய் எழுத்தொன்றின் மோனை, இறுதி இயைபு, இரண்டாம்
வழுவா எழுத்தொன்றின் மாதே! எதுகை, மறுதலைத்த
மொழியான் வரினும் முரண்,அடிதோறும் முதல்மொழிக்கண்
அழியாது அளபெடுத்து ஒன்றுவது ஆகும் அளபெடையே.'

– யா. கா. 16

'மாவும்புள் மோனை, இயைபின் னகை,வடியேர் எதுகைக்கு,
ஏவின்முரணும் இருள்பரந்த, ஈண்டள பாஅவளிய.'

– யா. கா. 17

'இருசீர் மிசைஇணை யாகும், பொழிப்பிடை யிட்,டொருவாம்
இருசீர் இடையிட்ட, தீறிலி கூழை, முதல்இறுவாய்
வருசீர் அயலில மேல்கீழ் வகுத்தமை தீர்கதுவாய்,
வருசீர் முழுவதும் ஒன்றின்முற் று,மென்ப மற்றவையே.'

– யா. கா. 19

'மோனை விகற்பம் அணிமலர், மொய்த்துடஙும் இயைபிற்கு,
ஏனை எதுகைக் கினம்பொன் னி னன்ன, இனி முரணிற்கு
ஆன விகற்பமும் சீறடிப் பேர, தளபெடையின்
தான விகற்பமுந் தாட்டாமரை,யென்ப தாழ்குழலே.'

– யா. கா. 20

'முன்னிரண் டாவியும் ஈறும்ஐ யும்மோனை ; முன்னவற்றின்
பின்னிரண் டாவியும் ஏழும்எட் டும்மோனை ; ஆறுமைந்தும்
பன்னிரண் டாமுயிர் முன்னிரண் டும்மோனை; பண்ணும்தச்சப்
பின்னிரண் டாம்நளுமவ்வும்வவ் வும்மோனை, பெண்ணணங்கே.'

– வீ. சோ. 110

'ஏன்று முதலள வொத்திரண் டாமெழுத் தொன்றி வரின்
சான்றார் அதனை எதுகைஎன் றேதுவர் ; தன்மைகுன்றா
மூன்றாவ தொன்றல் இரண்டடி ஒன்றல் முழுதுமொன்றல்
ஆன்றால் இனம்உயிர் ஆசிடை யாய்வரும் ஆங்கதுவே.'

– வீ. சோ. 111

'தொடை என்பது ஈரடி தொடுப்பதாம்; அவை
அடை முதல் மோனை, அந்தம் இயைபே,
இடையே எதுகை, எதிர்மொழி முரண்,அள
பெடையே அளபாம், எனஐ வகையே.' தொ. வி. 212

'எதுகை என்பது இயைவன மொழிக்கண்
முதலெழுத்து அளவொத்து முதலொழித்து ஒன்றுதல்.'
– தொ. வி. 213

'மூன்றும்எழுத்து ஒன்றுதல் ஆசுஇனம் தலையாகு
இடைகடை ஆறும் எதுகை வகையே.' – தொ. வி. 214

'மோனை முதலடி முதல்வரின் அடியே,
இணைவது இணையே, இடைவிடல் பொழிப்பே,
இறுவது ஒரூஉ, ஈறுஒன்று ஒழிவது
கூழை, முதல்அயல் குன்றல் மேற் கதுவாய்,
ஈற்றயல்ஒன்று ஒன்று தெனின்கீழ்க் கதுவாய்,
எல்லாம் ஒன்றுவது எனின்முற்று என்ப.' – தொ. வி. 216

'அடிஇணை பொழிப்புஒரூஉக் கூழை மேல்கீழ்க்
கதுவாய் முற்றுஎன எட்டொடும் மோனை
இயைபே எதுகை முரணே அளபே
எனஐந்து உறழ எண்ணைந்து ஆகி
அடிஅந் தாதி இரட்டைச் செந்தொடை
எனஇம் மூன்றும் இயையத் தொடையும்
விகற்பமும் எண்ணைந்து ஒருமூன்று என்ப.' – தொ.வி. 218

'அடிதொறும் முதலெழுத்து அணைந்து வரல்அடி
மோனை என்மனார் முழுதுணர்ந் தோரே.' – மு. வீ. யா. 24

'இறுதி அசைஎழுத் தேனும் ஒன்றுவது
அடிஇயைபு ஆம்என அறையப் படும்.' – 25

'இரண்டாம் எழுத்தொன் றுவதெது கையே.' – 26

'முரணத் தொடுப்பது முரண்தொடை ஆகும்.' – 27

'அளபெடுத்து ஒன்றுவது அளபெடைத் தொடையே.' – 28

'இணைஇரு சீர்மிசை எய்துவ தாகும்.' – மு.வீ.யா. 32
'பொழிப்பு இடையிட்டுப் போதுவ தாகும்.' – 33
'இருசீர் இடையிட்டு ஆதியும் அந்தமும்
ஒன்றின் ஒரூஉஎன்று உணர்ந்திசி னோரே.' – 34
'இறுதிச் சீர்ஒழித்து எல்லாம் தொடுப்பது
கூழை என்மனர் குறிஉணர்ந் தோரே.' – 35
'முதல்அயல் சீர்ஒழித்து ஏனைய சீர்எலாம்
இயைத் தொடுப்பது மேற்கது வாயே.' – 36
'ஈற்றயல் சீர்ஒழித்து எல்லாம் தொடுப்பது
கீழ்க்கது வாயின் கிழமைய தாகும்.' – 37
'முழுவதும் இயைவது முற்றெனப் படுமே.' – 38

14

## விகற்பமிலாத் தொடைகள்

724. செந்தொடை இரட்டையோடு அந்தாதி எனவும்
வந்த வகையான் வழங்கவும் பெறுமே.

**இஃது இவ்வகையானும் தொடையாம் என்கின்றது.**

**இ-ள் : செந்தொடை எனவும் இரட்டைத் தொடை எனவும் அந்தாதித் தொடை எனவும் வந்த கூற்றால் நடக்கவும் பெறும், முற்கூறிய தொடை என்றவாறு. (15)**

### விளக்கம்

இத்தொடைகளுக்கு இணை பொழிப்பு முதலிய விகற்பம் இல்லை என்பது கொள்க.

### ஒத்த நூற்பாக்கள்

'பொழிப்பும் ஒரூஉவும் செந்தொடை மரபும்
அமைத்தனர் தெரியின் அவையுமார் உளவே.'
– தொ. பொ. 402

'நிரல்நிறுத்து அமைத்தலும் இரட்டை யாப்பும்
மொழிந்தவற்று இயலான் முற்றும் என்ப.'
– தொ. பொ. 403

'சொல்லிய தொடையொடு வேறுபட்டு இயலின்
சொல்லியல் புலவர்அது செந்தொடை என்ப.' – 412

'மெய்பெறு மரபின் தொடைவகை தாமே
ஐயீ ராயிரத்து ஆறைஞ் நூற்றொடு
தொண்டுதலை யிட்ட பத்துக்குறை எழுநூற்
றொன்பஃ தென்ப உணர்ந்திசி னோரே.' – 413

15

## செந்தொடை - முதலியவற்று இலக்கணம்

**725.** சொல்லிய தொடையொடு வேறுபட்டு இயலின்
சொல்லி நிறுத்தசெந் தொடையும்,நேர் அடியின்
முழுவதும் ஒருசொல் வரின்அஃது இரட்டையும்,
அடியும் சீரும் அசையும் எழுத்தும்
முடிவு முதலாச் செய்யுள் மொழியின்
அந்தாதித் தொடையும்,என்று அறிதல் வேண்டும்.

இது செந்தொடை முதலிய மூன்றும் ஆமாறு கூறுகின்றது.

இ–ள்: முற்கூறிய தொடைகளோடு வேறுபட்டு நடப்பின் மேல் கூறிப்போந்த செந்தொடையும், நாற்சீர் ஓர் அடியின் முழுவதும் ஒரு சொல்லே வரத் தொடுப்பின் அஃது இரட்டைத் தொடையும், அடியும் சீரும் அசையும் எழுத்தும் ஆகிய இறுதி மற்றை அடிக்கு ஆதியாகச் செய்யுள் செய்யின் அந்தாதித் தொடையும் என்று அறிதலை விரும்பும் ஆசிரியன் என்றவாறு.

'சொல்லி நிறுத்த' என்ற மிகையானே அசையினும் சீரினும் இசையினும் (ஓசையினும்) எல்லாம் இசையாது வருவது சிறப்புடைச் செந்தொடை எனவும், இரட்டைத் தொடை ஈற்று எழுத்து ஒன்று குறையினும் இழுக்காது எனவும் கொள்க.

செந்தொடைக்குச் செய்யுள் :

'பூத்த வேங்கை வியன்சினை ஏறி,
மயில்இனம் அகவும் நாடன்
நன்னுதல் கொடிச்சி மனத்தகத் தோனே' – யா. கா. 18 மே

எனவும்,

இரட்டைத் தொடைக்குச் செய்யுள் :

'ஒக்குமே, ஒக்குமே, ஒக்குமே, ஒக்கும்,
விளக்கினுள் சீறெரி ஒக்குமே, ஒக்கும் ;
குளக்கொட்டிப் பூவின் நிறம்.' – யா. கா. 18 மே.

எனவும்,

அந்தாதித் தொடைக்குச் செய்யுள் :

'உலகுடன் விளக்கும் ஒளிகிளர் அவிர்மதி
மதிநலன் அழிக்கும் வளங்கெழு முக்குடை
முக்குடை நீழல் பொற்புடை ஆசனம்
ஆசனத் திருந்த திருந்துஒளி அறிவன்
ஆசனத்து இருந்த திருந்துஒளி அறிவனை
அறிவுசேர் உள்ளமொடு அருந்தவம் புரிந்து
துன்னிய மாந்தரது என்ப
பன்னருஞ் சிறப்பின் விண்மிசை உலகே.' – யா. கா. 18 மே.

எனவும் வரும். பிறவும் அன்ன. (16)

## விளக்கம்

*'போற்றுமின் போற்றுமின் போற்றுமின் போற்றுமின்*
*கூற்றம் குமைக்க வருமுன், நமரங்காள் !*
*ஏற்றுவந்தான் பொற்றாள் இணை'* – சி. செ. கோ. 26

*என்பதனை இரட்டைத் தொடைக்கும்,*

'உம்பர் பெருமாற் கொளிர்சடிலம் பொன்பூத்த
தம்பொற் புயம்வேட்டேம் தார்முலையும் பொன்பூத்த
பொன்பூத்த பூங்கொன்றை சூழ்ந்து' – சி. செ. கோ. 27

என்பதனை அந்தாதித் தொடைக்கும் சிதம்பரச் செய்யுட் கோவையிலிருந்து எடுத்துக்காட்டாகக் கொள்க.

'அறனன்று மாதவன் என்ப(து) உலகெந்தை
தாள்காணார் நாணுக் கொள' – சி. செ. கோ. 2

என்பது அந்நூலில் செந்தொடைக்கு உதாரணமாகும்.

## ஒத்த நூற்பாக்கள்

'ஒன்றிய தொடையொடும் விகற்பம் தன்னொடும்
ஒன்றாது கிடப்பது, செந்தொடை யாப்பே.' – சிறுகாக்கை

'அசையினும் சீரினும் இசையினும் எல்லாம்
இசையா தாவது செந்தொடை தானே.' – பல்காயம்

'ஒன்றா தாவது செந்தொடைக் கியல்பே.' – நத்தத்தம்

'செம்பகை இல்லா மரபினதாம் தம்முள்
ஒன்றா நிலையது செந்தொடை ஆகும்.' – காக்கை

'மாறலது ஒவ்வா மரபின செந்தொடை.' – அவிநயம்

'செந்தொடை ஒவ்வாத் திறத்தன ஆகும்.' – யா. வி. 50

'முழுவதும் ஒன்றின் இரட்டை யாகும்.' – பல்காயம்

'சீர்முழுது ஒன்றின் இரட்டை ஆகும்.' – நத்தத்தம்

'ஒருசீர் அடிமுழு தாயின் இரட்டை.' – அவிநயம்

'ஒருசீர் அடிமுழுதும் வருவது இரட்டை.' – மயேச்சுரம்

'அடிமுழு தொருசீர் வரின்அஃது இரட்டை.' – பரிமாணம்

'இரட்டை அடிமுழுது ஒருசீர் இயற்றே.' – யா. வி. 51

'அடியும் சீரும் அசையும் எழுத்தும்,
முடிவு முதலாச் செய்யுள் மொழியின் அஃது
அந்தாதித் தொடையென்று அறிதல் வேண்டும்.'

'அசையினும் சீரினும் அடிதொறும் இறுதியை
முந்தா இசைப்பின் அஃது அந்தாதித் தொடையே.'

'ஈறு முதலாத் தொடுப்பது அந்தாதி என்று
ஓதினர் மாதோ உணர்ந்திசி னோரே.' – யா. வி. 52

'அந்தம் முதலாத் தொடுப்பது அந்தாதி; அடிமுழுதும்
வந்த மொழியே வருவ திரட்டை; வரன் முறையான்
முந்திய மோனை முதலா முழுதுமொவ் வாதுவிட்டால்,
செந்தொடை நாமம் பெறும்; நறுமென்குழல் தேமொழியே.'
– யா. கா. 17

'ஓவில் அந்தாதி உலகுடனும், ஒக்குமே இரட்டை,
பாவருஞ் செந்தொடை பூத்த என்றுகும், பணிமொழியே.'
– யா. கா. 18

'அந்தாதி அடிக்கடை ஆதி ஆதல்;
இரட்டை முழுதுஓர் இறை அடுக் கியவடி;
செந்தொடை தொடை ஒன்றும் சேரா அடியே.'
– தொ. வி. 217

'அந்தம் முதலாத் தொடுப்பது அந்தாதி.' – மு. வீ. 29

'ஓரடி முழுதும் ஒருசொல் லேவரத்
தொடுப்பது இரட்டைத் தொடைஎனப் படுமே.'
– மு. வீ. 30

'செந்தொடை ஒவ்வாத் திறத்தன ஆகும்.' – மு. வீ. 31

16

## பாவகை

726. வெண்பா ஆசிரியம் கலியே வஞ்சிஎனப்
பண்புஆய்ந்து உரைத்த பாநான்கு ஆகும்.

இது நிறுத்த முறையானே முற்கூறிய பாவகை இத்துணைத்து என்கின்றது.

**இ–ள்: வெண்பாவும் ஆசிரியப்பாவும் கலிப்பாவும் வஞ்சிப்பாவும் எனத் தத்தம் தன்மையான் தெரிந்து சொல்லப்பட்ட பா நான்கு வகைப்படும் என்றவாறு. 17**

## விளக்கம்

*தொடக்கத்தில் வெண்பாவும் ஆசிரியமுமே தோன்றின; பின் வெண்பா நடைத்தாகிய கலியும் ஆசிரியநடைத்தாகிய வஞ்சியும் தோன்றப் பாக்கள் நான்காயின என்பர் தொல்காப்பியனார்.*

*நிறுத்த முறை – முதல் நூற்பா.*

*பா என்பது சேட்புலத்து ஒருவன் எழுத்தும் சொல்லும் புலனாகாத வகையில் பாடம் ஓதுங்கால் அவன் ஓதுகின்றதனை இன்னது என விகற்பித்து உணர்தற்கு ஏதுவாய பரந்துபட்டுச் செல்லுவதோர் ஓசைத் தொகுதி ஆகவே ஓசைபற்றிப் பாக்கள் வரையறுக்கப்பட்டன.*

## ஒத்த நூற்பாக்கள்

*'பாவிரி மருங்கினைப் பண்புறத் தொகுப்பின்*
*ஆசிரி யப்பா வெண்பா என்றாங்கு*
*ஆயிரு பாவினுள் அடங்கும் என்ப.' – தொல். பொ. 419*

*'ஆசிரிய நடைத்தே வஞ்சி; ஏனை*
*வெண்பா நடைத்தே கலிஎன மொழிப.' – 420*

*'ஆசிரியம் வஞ்சி வெண்பாக் கலியென*
*நாலியற்று என்ப பாவகை விரியே.' – 417*

*'செய்யுள் தாமே மெய்பெற விரிப்பின்*
*பாவே பாவினம் எனஇரண்டு ஆகும்.'* **யா. வி. 54**

*முழுதும் - யா. வி 55*

*'பண்ணும் திறனும்போல் பாவும் இனமுமாய்*
*வண்ண விகற்ப வகையின்றி, — பண்ணின்*
*திறம் விளரிக் கில்லதுபோல், செப்பல் அகவல்*
*இசைமருட்கும் இல்லை; இனம்.'*

*'வெண்பா முதலா நால்வகைப் பாவும்*
*எஞ்சா நால்வகை வருணம் போல;*
*பாவினத்து இயற்கையும் அதனோ ரற்றே.' - வாய்ப்பியம்*

*'வெண்பா முதலாக வேதியர் ஆதியா*
*மண்பால் வகுத்த வருணமாம்; - ஒண்பா*
*இனங்கட்கும் இவ்வாறே என்றுரைப்பர்; தொன்னூல்*
*மனந்திட்பக் கற்றோர் மகிழ்ந்து.'*

*'அறமுதல் நான்கென்றும், அகமுதல்நான் கென்றும்,*
*திறனமைந்த செம்மைப் பொருள்மேல், - குறைவின்றிச்*
*செய்யப் படுதலாற் செய்யுள்; செயிர்தீரப்*
*பையத்தாம் பாவுதலாற் பா.'*

*'வெண்பா அகவல் கலிப்பா அளவடி, வஞ்சிஎன்னும்*
*ஒண்பா அடிகுறள் சிந்துஎன்று உரைப்ப;' - யா. கா. 22*

*'வெண்பா அகவல் விரிகலி வஞ்சி*
*மருட்பா எனஐ வகைப்பா.......' - தொ. வி. 219*

*17*

## பா இனம்

**727.** தாழிசை துறையே விருத்தம் என்றுஇவை
பாஇனம் பாவொடு பாற்பட்டு இயலும்.

**இது நிறுத்தமுறையானே முற்கூறிய பாஇன வகை இத்துணைத்து என்கின்றது.**

**இ-ள் : தாழிசையும் துறையும் விருத்தமும் என்று இம்மூன்றும் பா இனம் எனப்படும். அவை பாவிஞெடு கூடி அப்பெயர் பெற்று நடக்கும் என்றவாறு.**

**அங்ஙனம் வழங்குமாறு வெண்தாழிசை வெண்-துறை வெளி விருத்தம் எனவும்,**

**ஆசிரியத்தாழிசை ஆசிரியத்துறை ஆசிரிய விருத்தம் எனவும்,**

**கலித்தாழிசை கலித்துறை கலி விருத்தம் எனவும்,**

**வஞ்சித்தாழிசை வஞ்சித்துறை வஞ்சி விருத்தம் எனவும் கொள்க. 18**

விளக்கம்

*நிறுத்த முறை – முதல்நூற்பா.*

*ஒவ்வொரு பாவிற்கும் தாழிசை துறை விருத்தம் என்ற இனங்கள் கூறப்பட்டுள்ளன. இங்ஙனம் பாஇனம் வகுத்தல் தொல்காப்பியனுருக்கு உடன்பாடன்று. பா இனம் வகுத்தல் பிற்பட்ட காலத்திலேயே ஏற்பட்டது. இப்பா இனங்களின் இலக்கணங்களை நோக்க இவற்றின் அமைப்பிற்கும் பெயருக்கும் பொருத்தம் பெரும்பாலும் இல்லை என்பது தெளிவாகப் போதரும். எனினும் பல நூற்றுண்டுகளாகப் பழகிவிட்டபடியால் இவற்றை நாம் இப்பொழுது கொள்ளவேண்டியவராயுள்ளோம்.*

ஒத்த நூற்பாக்கள்

*முழுதும் – யா. வி. 56*

*'வெண்பா விருத்தம் துறையொடு தாழிசை*
*என்றிம் முறையின் எண்ணிய மும்மையும்*
*தத்தம் பெயரான் தழுவும் பெயரே.'* – காக்கை.

*'பாவே, தாழிசை, துறையே, விருத்தம்என,*
*நால்வகைப் பாவும், நானன்கு ஆகும்.'* – சிறுகாக்கை

'வெண்பாத் தாழிசை வெண்டுறை விருத்தம்என்று
இந்நான்கு; அல்லவும் முந்நான்கு என்ப.' – அவிநயம்

'ஒத்தா ழிசை,துறை, விருத்தம், எனப்பெயர்
வைத்தார் பாவினம் என்ன வகுத்தே.' – மயேச்சுரம்

'விருத்தம் வியன்துறை தாழிசை என்று
பொருத்து முறைமை மறுத்தல்; – விரித்துச்
சிறுகாக்கை பாடினியார் செய்த முறையே
மறுகாக்கை வைத்தார் வகுத்து.'

'துறைதா ழிசைவிருத்தம் தூக்கன மூன்றே.' – தொ. வி. 219

18

## வெண்பாவின் பொது இலக்கணம்

728. செப்பல் இசையன வெண்பா; மற்றவை
அந்தடி சிந்தடி ஆகலும், அவ்வடி
அந்தம் அசைச்சீர் ஆகவும், பெறுமே.

**இது நிறுத்தமுறையானே வெண்பா ஆமாறு பொது வகையான் உணர்த்துகின்றது.**

**இ-ள்: செப்பல் ஓசையைத் தமக்கு ஓசையாக உடையனவாம், எல்லா வெண்பாவும்; அவ்வெண்பாக் களின் ஈற்றடி முச்சீர் ஆதலும், அவ்வீற்றடியின் இறுதி அசைச்சீரான் இறுதலும் பெறும் என்றவாறு.**

'பாலொடு தேன்கலந் தற்றே பணிமொழி
வாலெயி றூறிய நீர்' – குறள் 1121

என நேர்அசைச் சீரானும்,

'நன்றறி வாரின் கயவர் திருவுடையர்
நெஞ்சத்(து) அவலம் இலர்' – குறள் 1072

**என நிரைஅசைச் சீரானும் இறுதலே அன்றி உம்மை யால்,**

'கொல்லா நலத்தது நோன்மை பிறர்தீமை
சொல்லா நலத்தது சால்பு' – குறள் 984

எனக் குற்றுகர ஈற்று நேர்பு அசைச்சீரான் இறுதலும்,

'அகர முதல எழுத்தெல்லாம் ஆதி
பகவன் முதற்றே உலகு' – குறள் 1

எனக் குற்றுகர ஈற்று நிரைபு அசைச் சீரான் இறுதலும்,

'இனமலர்க் கோதாய் இலங்குநீர்ச் சேர்ப்பன்
புனைமலர்த் தாரகலம் புல்லு' –யா. கா. 26 மே

என முற்றுகர ஈற்று நேர்நேர் இயற்சீரான் இறுதலும்,

'மஞ்சுசூழ் சோலை மலைநாட மூத்தாலும்
அஞ்சொல் மடவார்க்(கு) அருளு' – யா. கா. 26 மே.

என முற்றுகர ஈற்று நிரைநேர் இயற்சீரான் இறுதலும் கொள்க.

'மற்று' என்ற மிகையானே, ஏந்திசைச் செப்பலும் தூங்கிசைச் செப்பலும், ஒழுகிசைச் செப்பலும் எனச் செப்பல் ஓசை மூன்று வகைப்படும்;

'வெண்சீர் வெண்டளை யான்வரும் யாப்பை
ஏந்திசைச் செப்பல் என்மனார் புலவர்'

எனவும்,

'இயற்சீர் வெண்டளை யான்வரும் யாப்பைத்
தூங்கிசைச் செப்பல் என்மனார் புலவர்'

எனவும்,

'வெண்சீர் ஒன்றலும் இயற்சீர் விகற்பமும்
ஒன்றிய பாட்டே ஒழுகிசைச் செப்பல்'

எனவும் கூறுப ஆகலின்.

இவற்றிற்குச் செய்யுள் :

'யாதானும் நாடாமால்; ஊராமால்; என்ஒருவன்?
சாந்துணையும் கல்லாத ஆறு' –குறள் 397
–ஏந்திசைச் செப்பல்

எனவும்,

'பாலொடு தேன்கலந் தற்றே பணிமொழி
வாலெயி றூறிய நீர்' – குறள் 1121
– தூங்கிசைச் செப்பல்

எனவும்,

'கொல்லான், புலால் மறுத்தானைக் கைகூப்பி,
எல்லா உயிரும் தொழும்' – குறள் 240
– ஒழுகிசைச் செப்பல்

எனவும் முறையே காண்க.

**இவ்வோசையைத் தூக்கு என்று ஓர் உறுப்பாக்கி மேல் கூறுவாரும் உளர். மேல் இவ்வாறு வருவனவற்றிற்கும் இவ்வுரை உய்த்து உரைக்க. (19)**

### விளக்கம்

*நிறுத்த முறை – 17 ஆம் நூற்பா. – தூக்காவது நிறுத்தலும் அறுத்தலும் பாடலும் என்று இன்னோரன்னவற்றுமேல் நிற்கும் வரையறையாம் (தொ. பொ. 339. பே) ஆசிரியப்பா ஓசையைச் செந்தூக்கு எனப் பதிற்றுப் பத்து கூறுகிறது.*

### ஒத்த நூற்பாக்கள்

*'அகவல் என்பது ஆசிரி யம்மே.'* தொ. பொ. 393

*'அஃதான் றென்ப வெண்பா யாப்பே.'* – 391

*'ஏந்திசைச் செப்பலும் தூங்கிசைச் செப்பலும்
ஒழுகிசைச் செப்பலும் உண்ணும் வெண்பா
செப்பல் ஓசை வெண்பா ஆகும்.'* – சங்கயாப்பு

*'சிறந்துயர் செப்பல் இசையன ஆகி,
மறைந்த உறுப்பின் அகறல் இன்றி,
விளங்கக் கிடப்பது வெண்பா ஆகும்.'* – காக்கை

*'சிந்தடி யானே இறுதலும், அவ்வடி
அந்தம் அசைச்சீர் வருதலும், யாப்புற
வந்தது வெள்ளை வழக்கியல் தானே.'* – காக்கை

'ஏந்திசைச் செப்பல் இசையன வாகி
வேண்டிய உறுப்பின வெண்பா யாப்பே.' – அவிநயம்

'முச்சீர் அடியான் இறுதலும், நேர்நிரை
அச்சீர் இயல்பின் அசையின் இறுதியாம்.' – அவிநயம்

'மாவாழ் புலிவாழ் சுரமுள வாக, மணியிறுவாய்
ஓவா தளபெடுத் தூஉவும் கெழூஉவு முதாரணமா,
நாவார் பெருப்புகழ் நற்றத்தர் யாப்பின் நடந்ததுபோல்,
தேய்வாம் உகரம்வந் தாலியற் சீரிங்குச் செப்பியதே.'

'காசும் பிறப்புமே காட்டாது தேமாவும்
மாசில் புளிமாவு மாயுரைத்தல்; – ஓசைமேல்
தேறித்தாம் செப்பல் தெளிவிப்பான், அன்றாகிக்
கூறிற்றே கூறுர் கொணர்ந்து.'

'பண்பாய்ந் தடக்கிய பாநிலை தெரியின்
வெண்பா மூவிசை விரிக்குங் காலே.'

'செப்பல் வெண்பா, வெண்கூ வெண்பா,
அகவல் வெண்பா, என்றனர் அவையே.'

'செப்பல் வெண்பா சீர்ஏழ் ஆகி,
தொடைநிலை பெறாஅது அடிநிலை பெறுமே.' – (தூங்கிசை)

'வெண்கூ வெண்பா எழுத்துஇறந்து இசைக்கும்.'-(ஏந்திசை)

'அகவல் வெண்பா அடிநிலை பெற்றுச்
சீர்நிலை தோறும் தொடைநிலை திரியாது,
நடைவயின் ஓரடி நேயம் உடைத்தாய்ப்
பொருளொடு புணர்ந்த எழுத்தறி யாதே.' – (இன்னிசை)

'மருளொடு புணர்ந்தோர் மருட்கைதீரச்
சொல்ல வன்மை வெண்பா இயல்பே.'

'குற்றுகரச் சீரோ டுகர வகாரச்சீர்
நிற்றல் எழுவாயாப் பின்னிசைத்தா — முற்றுகரம்
ஈறாய் அருகி வருமென்றே, பொய்கையார்
கூறுர் அஃதீறாக் கொண்டு.'

முழுதும் – யா.வி. 57

'ஒன்றும் இடைச்சீர் வருஞ்சீ ரொடுமுதற் சீர்கள்தெற்றும்
என்றும் அளவடி ஈற்றடி அல்லன; ஈற்றடியும்
நன்று மலர்காசு நாள்பிறப் பென்றிற்ற சிந்தடியே;
'துன்றும் கடைச்சீர் புகாஎன்பர் வெள்ளையில் தூமொழியே.'
–வீ.சோ. *113*

'வெள்ளைக்கு இயற்சீர் வெண்சீர் விரவி
ஏற்கும் அளவடி ஈற்றடி சிந்தடி
ஈற்றுச்சீர் அசைச்சீர் உக்குறள் மிகலுமாம்.' –தொ.வி. *220*

'வெள்ளையுள் பிறதளை விரவா; வெண்டளை
ஒன்றாய்ச் செப்பல் ஓசையாம்; அஃதே
ஏந்திசை வெண்சீர், இயற்சீர் தூங்கிசை,
ஒழுகிசை இரண்டும் உளஎனில் ஆகும்.' –தொ.வி. *221*

'வெண்பா அளவடி வேண்டப் படுமே.' –மு.வீ.யா.செ. *1*

*(19)*

## வெண்பாவகை

729. குறளே நேரிசை இன்னிசை பஃறொடை
சிந்தியல் எனஅஃது ஐந்துஎன மொழிப.

**இது மேல் பொதுவகையான் கூறிய வெண்பா வகை இத்துணைத்து என்கின்றது.**

**இ-ள்: குறள் வெண்பாவும் நேரிசை வெண்பாவும் இன்னிசை வெண்பாவும் பஃறொடை வெண்பாவும் சிந்தியல் வெண்பாவும் என்று முற்கூறிய வெண்பா ஐந்து வகைப்படும் என்று கூறுவர் ஆசிரியர் என்றவாறு.**

(20)

### விளக்கம்

*குறள் 2 அடி, நேரிசை இன்னிசை 4 அடி, பஃறொடை 5–12 அடி, சிந்தியல் 3 அடி, என அடிபற்றி ஐந்து பகுப்பாக வரையறுத்தவாறு.*

### ஒத்த நூற்பாக்கள்

'நெடுவெண் பாட்டே முந்நால் அடித்தே
குறுவெண் பாட்டின் அளவுஎழு சீரே.' –தொ. பொ. 470

'குறள்சிந்து இன்னிசை நேரிசை பஃறொடை
எனஐந் தாகும் வெண்பாத் தானே.' – யா. வி. 58

'குறள்சிந்து இன்னிசை நேரிசை சவலை
பஃறொ டைஎன வெண்பா ஆறு.' – தொ. வி. 222

(20)

## வெண்பாவகை இலக்கணம்

730. ஈரடி யான்வரின் குறள்;அஃது இரண்டாய்ச்
சீரிய வான்தனிச் சொல்இடை சிவணி
இருவிகற் பானும், ஒருவிகற் பானும்
செப்பல் ஓசையின் சிதையா தாகி
அத்திறம் வரின்நே ரிசை;அடி நான்காய்
ஒன்றும் பலவும் விகற்பாய்த் தனிச்சொல்
இன்றி நடப்பின் இன்னிசை; அடிபல
துன்னின் பஃறொடை; நேரிசை இன்னிசை
அன்னவாய் மூன்றடி யான்வரின் சிந்தியல்
வெண்பா; ஆதலும் விதிஎனப் படுமே.

இது முற்கூறிய வெண்பாக்கள் ஆமாறு கூறுகின்றது.

இ–ள் : ஈரடியான்வரின் குறள் வெண்பா ஆதலும், அக்குறட்பா இரண்டாய்த் தொடைக்கு ஏற்ற தனிச்சொல் இடைக்கண் பொருந்தி முதல் இரண்டு அடியும் ஒரு விகற்பத்தானும் கடை இரண்டு அடியும் ஒரு விகற்பத்தானும் நான்கு அடியும் ஒரு விகற்பத்தானும்

செப்பல் ஓசையின் வழுவாது அவ்வாறு வரின் நேரிசை வெண்பா ஆதலும், நான்கு அடியாய் ஒரு விகற்பத் தானும் பல விகற்பத்தானும் தனிச் சொல் இன்றி வரின் இன்னிசை வெண்பா ஆதலும், மேல் வெண்பாவிற்கு நான்கடி உரிமை கூறினமையின் நான்கு அடியின் மிக்கு ஒரு விகற்பாயும் பல விகற்பாயும் அடி பலவாய் வரின் பஃறொடை வெண்பா ஆதலும், நேரிசை வெண்பாவே போல இரண்டாம் அடி இறுதி தனிச்சொல் பெற்று இரு விகற்பாயும் ஒரு விகற்பாயும் மூன்று அடியாய் வரின் நேரிசைச் சிந்தியல் வெண்பா ஆதலும் இன்னிசை வெண்பாவேபோல ஒரு விகற்பாயும் பல விகற்பாயும் தனிச்சொல் இன்றி மூன்று அடியாய் வரின் இன்னிசைச் சிந்தியல் வெண்பா ஆதலும் இலக்கணம் எனப்படும் என்றவாறு.

மேல் வெண்பாச் செப்பல் ஓசைத்தாய் வரும் எனக் கூறி ஈண்டும் செப்பல் ஓசையின் சிதையாது என்றது— ஒருசார் பிற பாக்களை உதாரண வாய்பாட்டான் ஓசை ஊட்டும் இடத்துத் தத்தம் ஓசையின் சிறிது வழுவி வருவன உள ஆயினும், வெண்பாவிற்குச் செப்பல் ஓசை சிறிதும் வழுவல் ஆகாது என்று யாப்புறுத்தல் பொருட்டாகவும், செப்பல் ஓசையில் சிறிது வழுவிவந்த நேரிசை இன்னிசை வெண்பாக்களை ஒருபுடை ஒப்புமை நோக்கி வெண்துறைப்பாற்படுத்தும், செப்பல் ஓசை சிறிது வழுவிவந்த பஃறொடை வெண்பாக்களை ஒருபுடை ஒற்றுமை நோக்கி வெண்கலிப்பாற்படுத்தும் வழங்கினும் இழுக்காது என்பது அறிவித்தற்கும் எனக் கொள்க.

'சீரியவான் தனிச் சொல்' என்ற மிகையானே முதல் குறட்பாவிேைடு தனிச்சொல் இடைவேறுபட்டு விட்டுஇசைப்பின் ஒற்றுமைப்படாத உலோகங்களை

ஒற்றுமைப்படப் பற்றுச இட்டு விளக்கினாற்போல, முதல் குறட்பாவின் இறுதிக்கண் ஒன்றும் இரண்டும் அசை கூட்டி உச்சரிக்கப்பட்டு இரண்டு விகற்பத்தானும் ஒரு விகற்பத்தானும் வருவன உள ஒருசார் ஆசிடை நேரிசை வெண்பாவாம் எனவும், நேரிசை வெண்பாவே போல இரண்டாம் அடியின் இறுதி தனிச்சொல் பெற்று மூன்று விகற்பத்தான் வருவனவும் மூன்றும் அடியின் இறுதி தனிச்சொல் பெற்று இரண்டு விகற்பத்தான் வருவனவும், அடிதோறும் தனிச்சொல் பெற்று வருவனவும், பிறவாற்றான் நேரிசை வெண்பாவிற்குச் சிறிது வேறுபட்டு நான்கு அடியாய் வருவனவும் எல்லாம் இன்னிசை வெண்பாவாம் எனவும் கொள்க.

இரு விகற்பத்தான் வந்த குறள் வெண்பாவிற்குச் செய்யுள் :

'உருவுகண் டெள்ளாமை வேண்டும், உருள்பெருந்தேர்க்
கச்சாணி அன்னார் உடைத்து' – குறள் 667

எனவும்,

ஒரு விகற்பத்தான் வந்த குறள் வெண்பாவிற்குச் செய்யுள் :

'உடையார்முன் இல்லார்போல் ஏக்கற்றும் கற்றார்
கடையரே கல்லா தவர்' – குறள் 395

எனவும்,

இரு விகற்பத்தான் வந்த நேரிசை வெண்பாவிற்குச் செய்யுள் :

'தடமண்டு தாமரையின் தாதா டலவன்
இடமண்டிச் செல்வதனைக் கண்டு — பெடைஞெண்டு
பூழிக் கதவடைக்கும் புத்தூரே, பொய்கடிந்து
வூழி நடாயினான் ஊர்' – யா. கா. 24 மே

எனவும்,

ஒரு விகற்பத்தான் வந்த நேரிசை வெண்பாவிற்குச் செய்யுள் :

'அரிய வரைகீண்டு காட்டுவார் யாரே!
பெரியவரை வயிரம் கொண்டு; — தெரியின்,
கரிய வரைநிலையார் காய்ந்தாலென் செய்வர்?
பெரிய வரைவயிரம் கொண்டு' — யா. கா. 24 மே

எனவும்,

ஈரசையான் ஆசுஇட்டு இரு விகற்பத்தான் வந்த ஆசிடை நேரிசை வெண்பாவிற்குச் செய்யுள் :

'தாமரையின் தாதாடித் தண்டுவலைச் சேறளைந்து,
தாமரையின் நாற்றமே தான்நாறும்; — தாமரைபோல்
கண்ணன், முகத்தான், கரதலத்தான், சேவடி,எம்
கண்ஆர்வம் செய்யும் கருத்து' — யா. கா. 24 மே.

[நாறும் என்பது ஆசு]

எனவும்,

ஓர் அசையான் ஆசுஇட்டு இரு விகற்பத்தான் வந்த ஆசிடை நேரிசை வெண்பாவிற்குச் செய்யுள் :

'கருமமும் உள்படா, பேசகமும் துவ்வா,
தருமமும் தக்கார்க்கே செய்யா, — ஒருநிலையே
முட்டின்று மூன்றும் முடியுமேல், அஃதென்ப;
பட்டினம் பெற்ற கலம்' - யா.கா. 24 மே; நாலடி 250

[செய்யா என்பதிலுள்ள யா என்பது ஆசு]

எனவும்,

ஈரசையான் ஆசுஇட்டு ஒரு விகற்பத்தான் வந்த ஆசிடை நேரிசை வெண்பாவிற்குச் செய்யுள் :

'வஞ்சியேன் என்றவன்றன் ஊர்உரைத்தான்; யானுமவன்
வஞ்சியான் என்பதனால் வாய்நேர்ந்தேன்; - வஞ்சியான்,
வஞ்சியேன் வஞ்சியேன் என்றுரைத்தும் வஞ்சித்தான்;
வஞ்சியாய் வஞ்சியார் கோ' — யா. கா. 24 மே.

[நேர்ந்தேன் - ஆசு]

எனவும்,

ஓர் அசையான் ஆசுஇட்டு ஒரு விகற்பத்தான் வந்த ஆசிடை நேரிசை வெண்பாவிற்குச் செய்யுள் :

'ஆத்த அறிவினர் ஆண்டிளையர் ஆயினும்
காத்தோம்பித் தம்மை அடக்குப ; – மூத்தொறூஉம்
தீத்தொழிலே கன்றித் திரிதந்து, எருவைபோல்,
போத்தறார் புல்லறிவி னார்' – யா. கா. 24 மே. நாலடி. 351

[அடக்குப என்பதில் பகரம் ஆசு]

எனவும்,

ஒரு விகற்பத்தான் வந்த இன்னிசை வெண்பாவிற்குச் செய்யுள் :

'வைகலும் வைகல் வரக்கண்டும் அஃதுணரார்,
வைகலும் வைகலை வைகுமென் றின்புறுவர் ;
வைகலும் வைகல்தம் வாழ்நாள்மேல் வைகுதல்,
வைகலை வைத்துணரா தார்.' – யா. கா. 25 மே ; நாலடி. 39

[வைகுமென் என்பதிலுள்ள என் என்பது ஆசு]

எனவும்,

இரு விகற்பத்தான் வந்த இன்னிசை வெண்பாவிற்குச் செய்யுள் :

'இன்றுகொல் அன்றுகொல் என்றுகொல் என்னாது,
'பின்றையே நின்றது கூற்றம் என்றெண்ணி,
ஒருவுமின் தீயவை ; ஒல்லும் வகையான்
மருவுமின் ; மாண்டார் அறம்.' – யா. கா. 25 மே; நாலடி. 36

எனவும்,

பல விகற்பத்தான் வந்த இன்னிசை வெண்பாவிற்குச் செய்யுள் :

'கடற்குட்டம் போழ்வர் கலவர் ; படைக்குட்டம்
பாய்மா உடையான் உடைக்கிற்கும் ; தோமில்
தவக்குட்டம் தன்னுடையான் நீந்தும் ; அவைக்குட்டம்
கற்றான் கடந்து விடும்.' – யா. கா. 25 மே; நான்மணி 18

எனவும்,

இரண்டாம் அடி இறுதி தனிச்சொல் பெற்று மூன்று விகற்பத்தான் வந்த இன்னிசை வெண்பாவிற்குச் செய்யுள் :

'அங்கண் விசும்பில் அகன்நிலாப் பாரிக்கும்
திங்களும் சான்றோரும் ஒப்பர்மன் ; - திங்கள்
மறுஆற்றும் ; சான்றோர்அஃ தாற்றார், தெருமந்து
தேய்வர் ; ஒருமா சுறின்.' - யா. கா. 25 மே ; நாலடி. 151

எனவும்,

மூன்றாம் அடி இறுதி தனிச்சொல் பெற்று இரு விகற்பத்தான் வந்த இன்னிசை வெண்பாவிற்குச் செய்யுள் :

'வளம்பட வேண்டாதார் யார்யாரும் இல்லை ;
அளந்தன போகம் அவரவர் ஆற்றான் ;
விளங்காய் திரட்டினார் இல்லை, களங்கனியைக்
காரெனச் செய்தாரும் இல்.' - யா. கா. 25 மே; நாலடி. 103

எனவும்,

அடிதொறும் தனிச்சொல் பெற்று மூன்று விகற்பத்தான் வந்த இன்னிசை வெண்பாவிற்குச் செய்யுள் :

'இன்னாமை வேண்டின் இரவெழுக - இந்நிலத்து
மன்னுதல் வேண்டின் இசைநடுக - தன்னோடு
செல்வது வேண்டின் அறஞ்செய்க - வெல்வது
வேண்டின் வெகுளி விடல்.' - யா. கா. 25 மே; நான்மணி. 17

எனவும்,

ஐந்தடியான் வந்த ஒரு விகற்பப் பஃறொடை வெண்பாவிற்குச் செய்யுள் :

'சேற்றுக்கால் நீலம் செருவென்ற வேந்தன்வேல்
கூற்றுறழ் மொய்ம்பின் பகழி பொருகயல்

தோற்றம் தொழில்வடிவு தம்முள் தடுமாற்றம்,
வேற்றுமை இன்றியே ஒத்தன ; மாவேடர்
ஆற்றுக்கால் ஆட்டியர் கண்' – யா. கா. 25 மே.

எனவும்,

ஆறடியான் வந்த பல விகற்பப் பஃறொடை வெண்பாவிற்குச்செய்யுள் :

'பன்மாடக் கூடல் மதுரை நெடுந்தெருவில்
என்னொடு நின்றார் இருவர் ; அவருள்ளும்
பொன்னோடை நன்றென்றாள் நல்லளே ; பொன்னோடைக்
கியானைநன் றென்றாளும் அந்நிலையள் ; யானை
எருத்தத் திருந்த இலங்கிலைவேல் தென்னன்
திருத்தார்நன் றென்றேன் ; தியேன்' – யா. கா. 25 மே.

எனவும்,

ஏழடியான் வந்த பல விகற்பப் பஃறொடை வெண்பாவிற்குச் செய்யுள் :

'வையகம் எல்லாம் கழனியா, வையகத்துச்
செய்யகமே நாற்றிசையின் தேயங்கள் - செய்யகத்து
வான்கரும்பே தொண்டை வளநாடு, வான்கரும்பின்
சாறேஅந் [நாட்டுத் தலையூர்கள், சாறட்ட
கட்டியே கச்சிப் புறமெல்லாம், கட்டியுள்
தானேற்றம் ஆய சருக்கரை மாமணியே,
ஆன்ஏற்றான் கச்சி அகம்' – யா. கா. 25 மே.

எனவும்,

இரு விகற்பத்தான் வந்த நேரிசைச் சிந்தியல் வெண்பாவிற்குச் செய்யுள் :

'நற்கொற்ற வாயில் நறுங்குவளைத் தார்கொண்டு
சுற்றும்வண் டார்ப்பப் புடைத்தாளே; — பொற்றேரான்
பாலைநல் வாயில் மகள்' – யா. கா. 26 மே.

எனவும்,

ஒரு விகற்பத்தான் வந்த நேரிசைச் சிந்தியல் வெண்பாவிற்குச் செய்யுள் :

'அறிந்தானை ஏத்தி, அறிவாங் கறிந்து,
செறிந்தார்க்குச் செவ்வ னுரைப்பச் — சிறந்தார்,
சிறந்தமை ஆராய்ந்து கொண்டு' – யா. கா. 26 மே.

எனவும்,

ஒரு விகற்பத்தான் வந்த இன்னிசைச் சிந்தியல் வெண்பாவிற்குச் செய்யுள் :

'நறுநீல நெய்தலும் கொட்டியும் தீண்டிப்
பிறநாட்டுப் பெண்டிர் முடிநாறும்; பாரி
பறநாட்டுப் பெண்டிர் அடி' – யா. கா. 26 மே.

எனவும்,

இரு விகற்பத்தான் வந்த இன்னிசைச் சிந்தியல் வெண்பாவிற்குச் செய்யுள் :

'சுரைஆழ அம்மி மிதப்ப, வரைஅனைய
யானைக்கு நீத்து முயற்கு நிலைஎன்ப;
கானக நாடன் சுனை' – யா. கா. 26 மே.

எனவும்,

மூன்று விகற்பத்தான் வந்த இன்னிசைச் சிந்தியல் வெண்பாவிற்குச் செய்யுள் :

'முல்லை முறுவலித்துக் காட்டின – மெல்லவே
சேயிதழ்க் காந்தள் துடுப்பீன்ற – போயினூர்
திண்தேர் வரவுரைக்கும் கார்' – யா கா. 26 மே.

எனவும் வரும். பிறவும் வந்துழிக் கண்டுகொள்க.

இனிச் செப்பல் ஓசையில் சிதையாது நேரும் நிரையும் நேர்பும் நிரைபும் ஆகிய சீர்களை இறுதியாக உடைய சிந்தடியான் முடியும் வெண்பாக்களை ஓசை ஊட்டுமாறு.

'பாலொடு தேன்கலந் தற்றே பணிமொழி
வாலெயி றூறிய நீர்' –குறள் 1121

இதனை,

'கூவிளம் கூவிளம் தேமா கருவிளம்
கூவிளம் கூவிளம் தேமா'

எனவும்,

'நன்றறி வாரிற் கயவர் திருவுடையர்
நெஞ்சத் தவலம் இலர்' –குறள் 1072

இதனை,

'கூவிளம் தேமா புளிமா கருவிளங்காய்
தேமா புளிமா மலர்'

எனவும்,

'கொல்லா நலத்தது நோன்மை பிறர்தீமை
சொல்லா நலத்தது சால்பு' –குறள் 984

இதனை,

'தேமா கருவிளம் தேமா புளிமாங்காய்
தேமா கருவிளம் காசு'

எனவும்,

'அகர முதல எழுத்தெல்லாம் ஆதி
பகவன் முதற்றே உலகு' – குறள் 1

இதனை,

'புளிமா புளிமா புளிமாங்காய் தேமா
புளிமா புளிமா பிறப்பு'

எனவும், முறையே அலகிட்டு ஓசை ஊட்டி அவ்வாறுதல் காண்க. பிறவும் அன்ன. (21)

## விளக்கம்

உதாரணப் பாடல்களுக்கு ஒத்த சிதம்பரச் செய்யுட்கோவைப் பாடல்கள் சிறந்த எடுத்துக்காட்டுக்களாக உளங்கொளத்தக்கன ஆதலின் அவற்றை நிரலே காண்பாம்.

இருவிகற்பக் குறள் வெண்பா :

'அறனன்று மாதவ னென்ப துலகெந்தை
தாள்காணார் நாணுக் கொள.' – 2

ஒருவிகற்பக் குறள் வெண்பா :

'பூங்கொன்றைக் கண்ணியான் பொன்மன் றிறைஞ்சிடுக
ஆங்கொன்றைக் கண்ணி யவர்.' – 1

இருவிகற்ப நேரிசை வெண்பா :

'கறையரவுக் கஞ்சுரு தஞ்சுறாஉந் திங்கள்
இறைவி நறுநுதலைக் கண்டு; – பிறைமுடியோன்
கைம்மான் நடமுவந்த காற்புலிக்கஞ் சாதஞ்சும்;
அம்மான் விழிமானைக் கண்டு.' – 5

ஒருவிகற்ப நேரிசை வெண்பா :

'திருமுடியில் கண்ணியும் மாலையும் பாம்பு;
திருமார்பில் ஆரமும் பாம்பு; – பெருமான்
திருவரையில் கட்டிய கச்சையும் பாம்பு;
பொருபுயத்தில் கங்கணமும் பாம்பு.' – 4

இருவிகற்பத்து ஈராசிடை நேரிசை வெண்பா :

'நீரில் குமிழி இளமை; நிறைசெல்வம்
நீரில் சுருட்டும் நெடுந்திரைகள்; – நீரில்
எழுத்தாகும் யாக்கை; நமரங்காள் என்னே?
வழுத்தாத தெம்பிரான் மன்று.' – 9

இருவிகற்பத்து ஓர் ஆசிடை நேரிசை வெண்பா :

'வரத்தின் பிறப்பொன் றருள்கெனினும் வள்ளல்
கரத்தில் கபாலத்தைக் காணா உப் – புரத்தை
இரும்புண்ட ரீகபுரத் தெய்தினர்க் கீயான்,
அரும்புண்ட ரீகத் தயன்.' – சி. செ. கோ. 7

ஒருவிகற்பத்து ஈராசிடை நேரிசை வெண்பா :

'கூற்றம் குமைத்த குரைகழற்கால் கும்பிட்டுத்
தோற்றம் துடைத்தேம் துடைத்தேமால் ; – சீற்றஞ்செய்
ஏற்றினன், தில்லை இடத்தினன், என் ? இனியாம்
போற்றினல் நல்கும் பொருள்.' – 8

ஒருவிகற்பத்து ஓர் ஆசிடை நேரிசை வெண்பா :

'வணங்கு சிறுமருங்குல் பேரமர்க்கண் மாதர்
அணங்கு புரிவ தறமால் ; – பிணங்கி
நிணங்காலும் முத்தலைவேல் நீள்சடைஎங் கோமாற்
கிணங்காது போலும் இரவு.' – 6

ஒருவிகற்பத் தின்னிசை வெண்பா :

'வாழி திருமன்றம் கண்ட மலர்க்கண்கள் ;
வாழி பெருமாள் புகழ்கேட்ட வார்செவிகள் ;
வாழி அவனை வணங்கு முடிச்சென்னி ;
வாழிஅவன் சீர்பாடும் வாய்.' – 10

இருவிகற்பத் தின்னிசை வெண்பா :

'புனலமுவம் புக்குடைந்தோர் தாளுன்றி, நின்று,
வனசங்காள் செய்ததவம் வாழியரே ! வாழி !
பொருவிடையோன் தெய்வப் புலியூரை ஒப்பாள்,
திருமுகத்துக் கொப்பச் செயின்.' – 12

பலவிகற்பத் தின்னிசை வெண்பா :

'ஆதி முதலுணர்ந்தியா மன்புசெயப் பெற்றவா,
ஓஒ பெரிதும் அரிதே! எளிதேயோ!
வேதந் துறைசெய்தான், மெய்துணியான், கைதுணிந்தான்;
பேதுற்றும் வெஃகேம் பிற.' – சி. செ. கோ. 13

இரண்டாமடியிறுதி தனிச்சொல் பெற்று மூன்றுவிகற்பத் தான்வந்த இன்னிசை வெண்பா :

'ஆடகச் செம்பொன் அணிமன் றிடங்கொண்ட
பாடகச் சீறடியாள் பாகத்தான், – சூடகக்கைக்
கங்கையாள் கேள்வன், கழல்தொழூஉக் கைகூப்பி,
நின்றிறைஞ்சச் சென்றிறைஞ்சும் கூற்று.' – 15

மூன்றாமடியிறுதி தனிச்சொல் பெற்று இருவிகற்பத்தான் வந்த இன்னிசை வெண்பா :

'காதல் மகளிர் கலக்கக் கலக்குண்டு,
பேதுற்றார் நெஞ்சம், பிழைத்தகன்றார் நன்னெஞ்சம்,
போதம் படரும் புலியூரே, – தாதுண்டு,
வண்டுறங்கும் நீள்சடையோன் வைப்பு.' – 16

அடிதொறும் தனிச்சொல் பெற்றுப் பல விகற்பத்தான் வந்த இன்னிசை வெண்பா :

'காமர் உயிர்செகுக்கும் கண்ணென்றே – காமருசீர்
மாதர் நலனழிக்கும் கண்ணென்றே – மாதருக்
கின்னா இரவொழிக்கும் கண்ணென்றே - இந்நிலத்தில்
தன்னே ரிலாதான் தனக்கு.' – 17

ஒருவிகற்பத்து ஐந்தடிப் பஃறொடை வெண்பா :

'செக்கர் சடையில் பசுங்குழவி வெண்டிங்காள்!
முக்கண் ஒருவற்கு, நின்னோ டிருசுடரும்,
ஒக்க விழித்தலால் உய்ந்தேம்; ஒருநீயே
அக்கண் ஒருமூன்று மாயின்,மற் றுய்வுண்டோ?
மைக்கண் மடவார் உயிர்க்கு.' – 18

பலவிகற்பத்து ஐந்தடிப் பஃறொடை வெண்பா :

'பொன்புரிந்த செஞ்சடைக்கு வெள்ளிப் புரிபுரிக்கும்
வெண்டிங்கட் கண்ணியான் வெல்கொடியு மானேறே
அங்கவன்ற னூர்தியுமற் றவ்வேறே யவ்வேற்றின்
கண்டத்தில் கட்டும் கருமணிக்கிங் கென்கொலோ
பைந்தொடியார் செய்த பகை.' – சி. செ. கோ. 19

ஒருவிகற்பத்து ஆறடிப் பஃறொடை வெண்பா :

'கருந்தாது கொல்லுங் கருங்கைத்திண் கொல்லர்
வருந்தா தியன்றதொரு வல்விலங்கு பூண்டு
திருந்தாதார் முன்றிற்றொறுஞ் சென்றுசிலர் தூங்க
இருந்தேங் களிதூங்கி யாமேமற் றம்ம
அருந்தா தலர்தில்லை யம்பலத்திற் றூங்கும்
பெருந்தேன் முகந்துண்ணப் பெற்று.' – 20

பலவிகற்ப ஆறடிப் பஃறொடை வெண்பா :

'வில்மதனை வென்ற தலர்விழியே; ஒன்னார்தம்
பொன்னெயில் தீமடுத்த தின்னகையே; – பூமிசையோன்
தார்முடி கொய்தது கூர்உகிரே; ஆருயிர்உண்
கூற்றுயி ருண்ட தடித்தலமே; ஏற்றான்
பரசும், பிறைகழும், சூலமும், என்னே?
கரமலர் சேப்பக் கொளல்.' – 21

ஒருவிகற்பத்து ஏழடிப் பஃறொடை வெண்பா :

'வானே நிலனே கனலே மறிபுனலே
ஊனேயவ் வூனி லுயிரே யுயிர்த்துணையே
ஆனேறும் ஏறே அரசே அருட்கடலே
தேனே யமுதே யளியோங்கள் செல்வமே
யானே புலனு நலனு மிலனன்றே
ஆனாலு மென்போன்மற் றார்பெற்று ரம்பலத்துள்
மூனாட கங்காணும் வாழ்வு.' – 22

பல விகற்பத்து ஏழடிப் பஃறொடை வெண்பா :

'வண்டும் சுரும்பும் ஞிமிறும் குடைந்தார்ப்பத்
தண்டேன் நிறைக்கும் இதழி நறுங்கண்ணி
எண்டோள்முக் கண்ணான் இமயம் புனைமன்றில்,
அண்டர் கண்களிப்பத் தொண்டர் அகம்குளிர்ப்ப,
நின்றாடும் ஆடற் குருகா திருத்திரால்;
வன்திண் மறலி புடைத்துக் கொடிறுடைக்கும்
அன்றும் உருகீர்கொல் லாம்.' – சி. செ. கோ. 23

இரு விகற்ப நேரிசைச் சிந்தியல் வெண்பா :

'கம்பக் கரடக் களிற்றின் கபாயணிந்த
அம்பொற் புயத்தாற் கமைந்ததால்; – அம்பை
முலையானைக் கோடணிந்த மார்பு.' – 25

ஒரு விகற்ப நேரிசைச் சிந்தியல் வெண்பா :

'கங்கைக்குக் கண்மலர் சாத்தக் கருங்குவளை
செங்குவளை பூத்தாள் செயல்என்னே? – எங்கோமான்
பங்குற்றும் தீராப் பசப்பு.' – 24

ஒரு விகற்பத்து இன்னிசைச் சிந்தியல் வெண்பா :

'போற்றுமின், போற்றுமின், போற்றுமின், போற்றுமின்,
கூற்றம் குமைக்க வருமுன், நமரங்காள்!
ஏற்றுவந்தான் பொற்றாள் இணை.' – 26

இருவிகற்பத்து இன்னிசை வெண்பா :

'உம்பர் பெருமாற் கொளிர்சடிலம் பொன்பூத்த;
தம்பொற் புயம்வேட்டேம் தார்முலையும் பொன்பூத்த;
பொன்பூத்த பூங்கொன்றை சூழ்ந்து.' – 27

பல விகற்பத்து இன்னிசைச் சிந்தியல் வெண்பா :

'கருமிடற்றன், செஞ்சடையன், வெண்ணீற்றன், என்னும்,
மழுவலத்தன், மானிடத்தன் என்னும்; – உழுவலத்த
மன்றுடையான் தார்வேட்ட மான்.' – 28

வெண்பாக்களின் இறுதிச்சீர் நாள், மலர், காசு, பிறப்பு என்ற நான்கனுள் ஒன்றாய் இருத்தலை இக்காட்டிய எடுத்துக் காட்டுக்கள் வாயிலாகவும் உணரலாம்.

'சுரையாழ' என்ற சிந்தியல் வெண்பாவிற்கு,

'கரையாடக் கெண்டை கயமாட மஞ்ஞை'

என்ற முதலடியைக் கூட்டி அதனை இருவிகற்ப நேரிசை வெண்பாவாகக் கொள்வாரும் உளர்.

## ஒத்த நூற்பாக்கள்

'தொடைஒன்று அடிஇரண் டாகி வருமேல்
குறளின் பெயர்க்கொடை கொள்ளப் படுமே.' – காக்கை.

'ஈரடி இயைந்தது குறள்வெண் பாவே.' – அவிநயம்

'ஐம்பெருந் தொடையி னினக்குறள் விகற்பம்
செந்தொடை விகற்பொடு செயிர்தீர் ஈரடி.'

'நேரிசைச் சிந்தும் இன்னிசைச் சிந்துமென்று
ஈரடி முக்கால் இருவகைப் படுமே.'

'இரண்டாம் அடியின் ஈறுஒரூஉ எய்தி,
முரண்ட எதுகைய தாகியும், ஆகாதும்,
இரண்டு துணியாய், இடைதனில் போழ்ந்து,
நிரந்தடி நான்கின நேரிசை வெண்பா.' – காக்கை.

'குறட்பா இரண்டவை நால்வகைத் தொடையாய்,
முதற்பாத் தனிச்சொலின் அடிமூய், இருவகை
விகற்பினும் நடப்பது நேரிசை வெண்பா.' – அவிநயம்

'இருகுறள் நடுவண் தனிச்சொல் பெற்று,
இரண்டொன் றாகும் அவணிடை யிட்டு
ஒருவிகற் பாகியும் இருவிகற் பாகியும்
நிகழ்வன நேரிசை வெண்பா ஆகும்.'

'தனிச்சொல் தழுவல ஆகி விகற்பம்
பலபல தோன்றினும் ஒன்றே வரினும்
இதற்பெயர் இன்னிசை என்றிசி னோரே.' – காக்கை.

'ஒன்றும் பலவும் விகற்பாய்த் தனிச்சொல்
இன்றி வருவன; இன்னிசை வெண்பா.' – சிறுகாக்கை

'ஒன்றும் பலவும் விகற்பாய்த் தனிச்சொல்
இன்றி நடப்பது; இன்னிசை வெண்பா.' – அவிநயம்

'ஒருவிகற் பாகித் தனிச்சொல் இன்றியும்,
இருவிகற் பாகித் தனிச்சொல் இன்றியும்,
தனிச்சொல் பெற்றுப் பலவிகற் பாகியும்
தனிச்சொல் இன்றிப் பலவிகற் பாகியும்,
அடியடி தோறும் ஒரூஉத்தொடை அடைநவும்,
எனஐந் தாகும் இன்னிசை தானே.'

'தொடைஅடி இத்துணை என்னும் வழக்கம்
உடையதை அன்றி, உறுப்பழிவு இல்லா
நடையது பஃறொடை நாமம் கொளலே.' – காக்கை.

'தொடைபல தொடுப்பன பஃறொடை வெண்பா.'
– சிறுகாக்கை.

'தொடைமிகத் தொடுப்பன பஃறொடை வெண்பா.' –அவிநயம்

'ஏழடி இறுதி ஈரடி முதலா
ஏறிய வெள்ளைக்கு இயைந்த அடியே,
மிக்கடி வருவது செய்யுட்கு உரித்தே.'

'ஆறடி முக்கால் பாட்டெனப் படுமே,
ஏறிய அடியும் செய்யுள் வரையார்.'

'ஆதியாய் ஆற்றல் உடைத்தாய் வரம்பிகவா
நீதிசால் நூல்பொருந்தி நிற்றலால் – ஓதநீர்
மண்பாவு தொல்சீர் மறைவாணர் பாற்சார்த்தி
வெண்பா உரைத்தார் விரித்து.'

'வெண்பாவோ ரைந்தும், விகற்பத்தால் பத்தாகித்
தன்பால் தலைநான்கின் நாற்பதாய்த் — திண்பான்மைச்
செப்பல் ஒருமூன்றின் வந்துறழச் சேர்ந்தபாத்
தப்பாத முந்நாற்ப தாம்.'

'ஈரடி குறள்சிந்து இருதொடை இயற்றே.' — யா. வி. 59

'நாலோ ரடியாய்த் தனியிரண் டாவதன்
ஈற்றொரு வாய்,முற்று இருவிகற்பு ஒன்றினும்
நேரிசை வெண்பா எனப்பெயர் ஆகும்.' — „ 60

'விகற்புஒன் றாகியும், மிக்கும், தனிச்சொல்
இயற்றப் படாதன; இன்னிசை வெண்பா.' — „ 61

'பாதம் பலவரின் பஃறொடை வெண்பா.' — „ 62

'ஈரடி வெண்பாக் குறள்,குறட் பாவிரண் டாயிடைக்கண்
சீரிய வான்தனிச் சொல்லடி மூய்ச்செப்ப லோசைகுன்றா
தோரிரண் டாயும் ஒருவிகற் பாயும் வருவதுண்டேல்,
நேரிசை ஆகும்; நெறிசுரி பூங்குழல் நேரிழையே.'

— யா. கா. 24

'நேரிசை இன்னிசை போல நடந்தடி மூன்றின் வந்தால்
நேரிசை இன்னிசைச் சிந்திய லாகும்; நிகரில் வெள்ளைக்கு
ஓரசைச் சீரும், ஒளிசேர் பிறப்பும், ஒன் காசும், இற்ற
சீருடைச் சிந்தடி யே,முடி வாமென்று தேறுகவே.'

— யா. கா. 26

'ஒன்றும் பலவும் விகற்பொடு நான்கடி யாய்த்தனிச்சொல்
இன்றி நடப்பினஃ தின்னிசை துன்னும்; அலபலவாய்ச்
சென்று நிகழ்வ பஃறொடை யாம்;சிறை வண்டினங்கள்
துன்றும் கருமென் குழல்துடி ஏரிடைத் தூமொழியே.'

— யா. கா. 25

'வேண்டிய ஈரடி யாற்குறள் ஆம்;மிக்க மூவடியால்
தூண்டிய சிந்தியல்; நான்கடி நேரிசை; தொக்கதனில்
நீண்டிய பாதத்துப் பஃறொடையாம்; இதன் நேரிசையே
நீண்டிசை யாங்கலி; நேரிசை பேதிக்கில் இன்னிசையே.'

— வீ. சோ. 114

'ஒன்றைந்தெட் டாகியசீர் ஒத்த எதுகையாய்
நின்றபதின் மூன்ரெழன்பா னேரொத்து — நன்றியலும்
நீடுசீர் மூவைந்தாம் நேரிசைவெண் பாவென்பர்
நாடுசீர் நாப்புலவர் நன்கு.' – வீ. சோ. 114 மேற்.

'ஒன்றும் பலவும் விகற்பாகி நான்கடியும்
நின்ற தனிச்சொல்தாம், பெற்றும் பெறுதொழிந்தும்
தன்னிசைய நேரிசையில் வேறாய், வருமாகில்
இன்னிசைவெண் பாவாமென் றார்.' – வீ. சோ. 114 மேற்.

'ஈரடி குறளே, இருகுறள் சவலை,
இருகுறள் இடைக்கூன் இயைநே ரிசையே,
நாலடி விகற்ப நடைஇன் னிசையே,
நேரிசை இன்னிசை நேர்மூ வடிசிந்தே,
நாலடி மிக்கடி நண்ணிய பஃறொடை,
எனஅறு வெண்பா ஏற்கும் நடையே.' – தொ. வி. 222

'உரத்தெழு செப்பல் ஓசையைத் தழுவி,
இரண்டடி யாயீற் றடிமுச் சீராய்
ஒருவிகற் பானும், இருவிகற் பானும்,
வருவது குறள்வெண் பாவெனப் படுமே.' – மு.வீ.யா.செ. 2

'இடையில் தனிச்சொல் பெற்றிரு குறளாய்,
ஒருவிகற் பானும், இருவிகற் பானும்,
வருவது நேரிசை வெண்பா ஆகும்.' – 3

'தனிச்சொல் இன்றி ஒருவிகற் பானும்,
தனிச்சொல் இன்றி இருவிகற் பானும்,
தனிச்சொல் இன்றிப் பலவிகற் பானும்,
தனிச்சொல் பெற்றுப் பலவிகற் பானும்,
தனிச்சொல் மூன்றும் அடியில் தழுவி
இருவிகற் பானும், வருவதுஇன் னிசையே.' – 4

'அடியடி தோறும் தனிச்சொல் பெற்று
வருவதும் அதன்இயல் பாமென மொழிப.' – 5

'நேரிசை போல இரண்டாம் அடியில்
தனிச்சொல் பெற்றுஒரு விகற்பத் தானும்,
தனிச்சொல் பெற்றுஇரு விகற்பத் தானும்,
மூன்றடி யாக முடிவது நேரிசைச்
சிந்தியல் என்மனார் தெளிந்திசி னோரே.' – 6

'இன்னிசை போலத் தனிச்சொல் இன்றி,
ஒருவிகற் பானும், பலவிகற் பானும்
வருவது இன்னிசைச் சிந்திய லாகும்.' – 7

'இருகுறள் சவலை ஒருவிகற் பாகும்.' – 8

'பாதம் பலவரின் பஃறொடை யாகும்.' – 9

'அடிவரை இன்றித் தனிச்சொல் பெற்றும்
பெறாதும் வருவது கலிவெண் பாவே.' – 10

'நேர்நாள் ; நிரைமலர் ; தேமாக் காசு ;
புளிமாப் பிறப்பு ;எனப் புகலப் படுமே.' – 11

'செப்பல் ஓசையில் சிறக்கும்வெண் பாவே.' – 12

'ஏந்திசை தூங்கிசை ஒழுகிசை எனஒரு
மூன்று வகைப்படும் மொழியுங் காலே.' – 13

'வெண்சீர் வெண்டளை யான்வரும் பாவே
ஏந்திசைச் செப்பல் என்மனார் புலவர்.' – 14

'இயற்சீர் வெண்டளை யான்வரும் பாவே
தூங்கிசை யாமெனச் சொல்லப் படுமே.' – 15

'வெண்சீர் இயற்சீர் விரவி ஒழுகுவது
ஒழுகிசை என்மனார் உணர்ந்திசி னோரே.' – 16

## வெண்பா இனம்

731. அடிஒரு மூன்றுவந்து அந்தடி சிந்தாய்
விடின்அது வெள்ளொத் தாழிசை ஆதலும்,
மூன்றடி முதலா ஏழடி காறும்வந்து
ஈற்றடி சிலசில சீர்குன் றினும்அவை
வேற்றுஒலி விரவினும் வெண்துறை ஆதலும்,
ஒருமூன்று ஒருநான்கு அடிஅடி தோறும்
தனிச்சொல் தழுவி நடப்பது வெள்ளை
விருத்தம் எனப்பெயர் வேண்டலும், விதியே.

இது மேல் கூறிய வெண்பாவிற்கு இனம் ஆகிய தாழிசை துறை விருத்தங்கள் ஆமாறு கூறுகின்றது.

இ-ள்: மூன்றடியான் நடந்து ஈற்று அடி முச்சீர் அடியாய் முடியின் அது வெள்ளொத்தாழிசை ஆதலும், மூன்றடி முதலாக ஏழடி அளவும் நடந்து ஈற்றடியுள் சில அடிகள் சிலசீர் குறையினும் அவ்வாறு வருங்கால் முன்பின் சில அடி ஓர் ஓசையாய்ப் பின்பின் சில அடி மற்றோர் ஓசையாய் வேற்று ஒலி விரவிவரினும் வெண் துறை ஆதலும், மூன்றடியும் நான்கடியுமாய் அடிகள் தோறும் ஒரு சொல்லே இறுதிக்கண் தனிச் சொல்லாகப் பொருந்தி நடப்பது வெளி விருத்தம் எனப் பெயர் பெறுதலும் இலக்கணமாம் என்றவாறு.

உரையில் கோடலான் வெள்ளொத்தாழிசை முச்சீரான் இறுங்கால் வெண்பாவே போலக் காசு பிறப்பு நாள் மலர் என்னும் வாய்பாட்டான் இறும் எனவும், முதல் அடி இரண்டும் அளவடியான் வரும் எனவும், சிந்தியல் வெண்பா ஒரு பொருள்மேல் மூன்று அடுக்கி வரின் அவையும் வெள்ளொத்தாழிசையாம் எனவும்,

ஒருசார் வெண்டுறையின் ஈற்றடி ஒன்று ஒருசீர் குறைந்து வருவனவும் உள எனவும், வெளி விருத்தம் தனிச்சொல் பெற்று வருங்கால் அளவடியின் உட்பட்டு அடங்காது வரல் வேண்டும் எனவும் கொள்க.

*சீர் வரையறுத்திலாமையால் வெண்துறை எனைத்துச் சீரானும் அடியாய் வரும் என்க.*

வெள்ளொத்தாழிசைக்குச் செய்யுள் :

'நண்பி தென்று தீய சொல்லார்,
முன்பு நின்று முனிவுசெய்யார்,
இன்பு வேண்டு பவர்' – *யா. கா.* 28 மே.

எனவும்,

ஒருபொருள்மேல் மூன்று அடுக்கி வந்த வெள்ளொத் தாழிசைக்குச் செய்யுள் :

'அன்னய், அறங்கொல்? நலங்கிளர் சேட்சென்னி
ஒன்னர் உடைபுறம் போல, நலம்கவர்ந்து
துன்னன் துறந்து விடல்'

'எடி! அறங்கொல்? நலங்கிளர் சேட்சென்னி
கூடார் உடைபுறம் போல, நலங்கவர்ந்து,
நேடான் துறந்து விடல்'

'பாவாய்! அறங்கொல்? நலங்கிளர் சேட்சென்னி
மேவார் உடைபுறம் போல, நலங்கவர்ந்து,
காவான் துறந்து விடல்' - *யா. கா.* 28 மே.

*இவை ஒருபொருள் மேல் மூன்று அடுக்கி வந்த சிந்தியல் வெண்பா*

எனவும்,

மூன்று அடியான் வந்த ஓர்ஒலி வெண்துறைக்குச் செய்யுள் :

'தாளாளர் அல்லாதார் தாம்பலர் ஆயக்கால் என்னும் என்னும்?
யாளியைக் கண்டஞ்சி, யானை,தன் கோடிரண்டும்
பீலிபோல் சாய்த்து விடும்;பிளிற்றி ஆங்கே' – *யா. கா.* 28 மே.

எனவும்,

நான்கு அடியான் வந்த ஓர்ஒலி வெண்துறைக்குச் செய்யுள் :

'குழலிசைய வண்டிளங்கள் கோழிலேய
செங்காந்தள் குலேமேல்பாய,
அழலெரியின் மூழ்கினவால், அந்தோ, அளிய,என்று
அயல்வாழ் மந்தி,
கலுழ்வனபோல் நெஞ்சயர்ந்து, கல்லருவி தூஉம்,
நிழல்வரை நன்னுடன், நீப்பனோ அல்லன்.'
– யா.கா. 28 மே

எனவும்,

ஏழடியான் வந்த வேற்று ஒலி வெண்துறைக்குச் செய்யுள் :

'முழுங்குதிரைக் கொற்கைவேந்தன், முழுதுலகும் ஏவல்செய,
முறைசெய் கோமான்
வழங்குதிறல் வாள்மாறன், மாச்செழியன், தாக்கரிய
வைவேல் பாடிக்
கலந்துநின் றூரெலாம் கருதலா காவணம்
இலங்குவாள் இரண்டினுல், இருகைவீ சிப்பெயர்ந்து
அலங்கல்மா லேயவிழ்ந்து ஆட,வா டும்,இவள்,
பொலங்கொள்பூந் தடங்கட்கே, புரிந்துநின் றூர்எலாம்
விலங்குஉள் ளந்தப, விளிந்துவே றுபவே' –யா. கா. 28 மே

எனவும்,

ஈற்று அடி ஒன்று ஒருசீர் குறைந்து வந்த ஓர்ஒலி வெண்துறைக்குச் செய்யுள் :

'வெறியுறு கமழ்கண்ணி வேந்தர்கட் காயினும்
உறவுற வரும்வழி உரைப்பன உரைப்பன்மன் ;
செறிவுறு தகையினர் சிறந்தனர் இவர்நமக்கு
அறிவுறு தொழிலரென் றல்லவை சொல்லன்மின் ;
பிறபிற நிகழ்வன பின்' – யா. கா. 28 மே.

எனவும்,

மூன்று அடியான் வந்த வெளி விருத்தத்திற்குச் செய்யுள் :

கொண்டல் முழங்கினவால் கோபம் பரந்தனவால்;
–என்செய்கோயான்
வண்டு வரிபாட வார்தளவம் பூத்தனவால்;
–என்செய்கோயான்
எண்திசையும் தோகை இருந்தகவி ஏங்கினவால்;
–என்செய்கோயான்
– யா. கா. 28 மே.

எனவும்,

நான்கு அடியான் வந்த வெளி விருத்தத்திற்குச் செய்யுள் :

'ஆவா என்றே அஞ்சினர் ஆழ்ந்தார்; – ஒரு சாரார்
கூகூ என்றே கூவிளி கொண்டார்; – ஒரு சாரார்
மாமா என்றே மாய்ந்தனர் நீந்தார்; – ஒரு சாரார்
ஏகீர் நாய்கீர் என்செய்தும், என்றார்; – ஒரு சாரார்'
– யா. கா. 28 மே.

எனவும் வரும். பிறவும் வந்துழிக் காண்க. (22)

### விளக்கம்

தனியே வந்த வெள்ளொத்தாழிசைக்குச் செய்யுள் :

'கனக மார் கவின்செய் மன்றில்
அனக நாட கற்கெம் அன்னை
மனைவிதாய் தங்கை மகள்.' – சி.செ.கோ. 33

ஒரு பொருள் மேல் மூன்று அடுக்கி வந்த வெள்ளொத்தாழிசைக்குச் செய்யுள் :

'அம்பேருண் கண்ணார்க் கழிந்த மடநெஞ்சே!
கொம்பே றுடையான் கழலிறைஞ்சா தென்கொலியாம்
வம்பே இறந்து விடல்.'

'வாணேருண் கண்ணூர்க் கழிந்த மடநெஞ்சே!
நீணுகம் பூண்டான் கழலிறைஞ்சா தென்கொலியாம்
வீணே இறந்து விடல்.'

'கோளாருண் கண்ணூர்க் கழிந்த மடநெஞ்சே!
ஆளாக ஆண்டான் கழலிறைஞ்சா தென்கொலியாம்
வாளா இறந்து விடல்.' – சி.செ.கோ. 34

மூன்றடியான் வந்த ஓரொலி வெண்டுறைக்குச் செய்யுள் :

'பரசிருக்கும் தமிழ்மூவர் பாட்டிருக்கும்
திருமன்றில், பரசொன்றேந்தி,
அரசிருக்கும் பெருமானூர்க் காட்செய்யார், என்செய்வார்?
முரசிருக்கும் படைநமனூர் முன்னூம் அந்நாளே.' – 35

நான்கடியான் வந்த ஓரொலி வெண்டுறைக்குச் செய்யுள் :

'படர்ந்தரும்வெவ் வினைத்தொடர்பால் பவத்தொடர்பு; அப்
பவத்தொடர்பால் படராநிற்கும்
விடலரும்வெவ் வினைத்தொடர்புஅவ் வினைத்தொடர்புக்
கொழிபுண்டோ? வினையேற் கம்மா!
இடர்பெரிது முடையேன்; மற் றென்செய்கேன்;
என்செய்கேன்?
அடலரவம் அரைக்கசைத்த அடிகேளோ! அடிகேளோ!' – 36

ஏழடியான் வந்த வேற்றொலி வெண்டுறைக்குச் செய்யுள் :

'கூற்றிருக்கும் அடலாழிக் குரிசில்முத
லோரிறைஞ்சக் கொழுந்தேன்பில்கி
ஊற்றிருக்கும் தில்லைவனத் தசும்பிருக்கும்
பசும்பொன்மன்றத் தொருதானூன்றி,
வண்டுபா டச்சுடர் மகுடமா டப்பிறைத்
துண்டமா டப்புலித் தோலுமா டப்பகிர்
அண்டமா டக்குலைந் தகிலமா டக்கருங்
கொண்டலோ டுங்குழற் கோதையோ டுங்கறைக்
கண்டனூ டுந்திறம் காண்மினே! காண்மினே!' – 37

ஈற்றடி ஒருசீர் குறைந்த ஓரொலி வெண்டுறைக்குச் செய்யுள்:

'உருவலன், அருவலன், ஒருவன்,மற் றிருவருக்கு
அரியவன் எனஉணர்ந் தறைகுநர் அறைகமன்;
பரவைதன் மனேவயின், பாவலன் ஏவலின்,
இருமுறை திரிதலி னெளியனென் றெளியனும்
பரவுவன் மன்றம் பணிந்து.' – சி. செ. கோ. 38

மூன்றடியான் வந்த வெளிவிருத்தத்திற்குச் செய்யுள்:

'அங்கட் கமலத் தலர்கமல மேயீரும், – நீரேபோலும்
வெங்கட் சுடிகை விடவரவின் மேயீரும், – நீரேபோலும்
திங்கட் சடையீரும், தில்லேவனத் துள்ளீரும் – நீரேபோலும்.'
– 39

நான்கடியான் வந்த வெளிவிருத்தத்திற்குச் செய்யுள்:

'வெஞ்சமன் அஞ்ச வேலொடு எதிர்ந்தால் – நமரங்காள்
அஞ்சல் எனுஞ்சொல் ஆர்சொல வல்லார்? – நமரங்காள்
மஞ்சிவர் இஞ்சி மன்றம் இறைஞ்சீர்; நமரங்காள்
நஞ்சம் அயின்றவர் நல்குவர் மாதோ! நமரங்காள்.'

## ஒத்த நூற்பாக்கள்

'ஈரடி முக்கால் இசையினும் தளேயினும்
வேறுபட் டியல்வன வெண்டா ழிசையே.'

'தன்பா அடித்தொகை மூன்ருய் இறும்அடி
வெண்பாப் புரைய இறுவது வெள்ளேயின்
தன்பா இனங்களின் தாழிசை ஆகும்.' – காக்கை

'அடிமூன் ருகி வெண்பாப் போல
இறுவன மூன்றே வெள்ளொத் தாழிசை.' – சிறுகாக்கை

'அடிமூன்ருகி வெண்பாப் போல
இறுவ தாயின் வெள்ளொத் தாழிசை.' – அவிநயம்

'ஈரடி முக்கால் இசைகொள நடந்து
மூன்றுடன் அடுக்கித் தோன்றின்ஒத் தாழிசை.' – மயேச்

'அடியொரு மூன்றுவந்து அந்தடி சிந்தாய்
விடின்அது வெள்ளொத் தாழிசை ஆகும்.' –யா.வி. 66

'வெண்டாழிசையே, மூன்றடியாய் வெள்ளை போன்று இறும்.'
–யா.கா. 28

'அடிஐந் தாகியும் மிக்கும் ஈற்றடி
ஒன்றும் இரண்டும் சீர்தபின் வெண்டுறை.' – அவிநயம்

'பெற்றஅடி ஐந்தினும் பிறவினும் பாட்டாய்
இற்ற அடியும் ஈற்றயல் அடியும்
ஒன்றும் இரண்டும் நின்ற அதன்சீர்
கண்டன குறையின் வெண்டுறை ஆகும்.' – மயேச்சுரம்

'ஐந்துஆறு அடியின் நடந்தவும் அந்தடி
ஒன்றும் இரண்டும் ஒழிசீர்ப் படுநவும்
வெண்டுறை நாமம் விதிக்கப் படுமே.' – காக்கை

'மூன்றடி முதலா ஏழடி காறும்வந்து
ஈற்றடி சிற்சில சீர்தப நிற்பினும்
வேற்றொலி விரவினும் வெண்டுறை ஆகும்.' – யா. வி. 67

'மூன்று இழிபு ஏழுஉயர்வாய்
ஆன்றடி தாஞ்சில அந்தம்குறைந்திறும் வெண்டுறையே.'
– யா. கா. 28

'ஒருமூன்று ஒருநான்கு அடியடி தோறும்
தனிச்சொல் தழுவி நடப்பன வெள்ளை
விருத்தம் எனப்பெயர் வேண்டப் படுமே.' – காக்கை

'நான்கும் மூன்றும் அடிதொறும் தனிச்சொல்
தோன்ற வருவன வெளிவிருத் தம்மே.' – சிறுகாக்கை

'மூன்றும் நான்கும் அடிதொறும் தனிச்சொல்
கொளீஇய எல்லாம் வெளிவிருத் தம்மே.' – அவிநயம்

'மூவடி ஆகியும் நாலடி ஆகியும்
பாவடி வீழ்ந்து பாடலுள் நயந்தும்
கடிவரை வில்லா அடிதொறும் தனிச்சொல்
திருத்தகு நிலைய விருத்தம் ஆகும்.' – மயேச்சுரம்

'நான்கடி யானும் நடைபெற்று அடிதொறும்
தான்தனிச் சொற்கொளின் வெளிவிருத் தம்மே.' – யா.வி.68

'மூன்றடி யானும் முடிந்தடி தோறும் முடிவிடத்துத்
தான்தனிச் சொற்பெறும் தண்டா விருத்தம்.' – யா.கா. 28

'நான்கொடு மூன்றடி தோறும் தனிச்சொல் நண்ணுமெனின்
தான்பெயர் வெள்ளை விருத்தம்; முப்பாதம் தழுவிவெள்ளை
போன்றிறும் வெண்டாழிசை; மூன்றிழி பேழடி பொருந்தி
ஆன்ற வந்தங் குறையின்வெண் டுறையென்பர்; ஆயிழையே.'
– வீ. சோ. 121

'வெண்டா ழிசையெனில் வெண்சிந் தியல்போல்
அண்டாப் பிறதளை அணைந்து வருமே.' – தொ. வி. 243

'வெண்துறை அன்னவை விரவினும் மூன்றடி
ஆதி ஏழடி அந்தமாய் ஈற்றில்
சிலவடி தம்சீர் சிலகுறைந்து இறுமே.' – தொ. வி. 239

'விருத்தம் என்ப விரவிய எல்லாம்
சீரும் அடியும் சிதையாக் கொளினும்
அவைஒத்து அளவாய் அடிநான் கனையுமே
மாவிளங் காயே வஞ்சிச்சீர் இடையும்
பொதுச்சீர் இடையும் புணர்மா வினம்இவை
ஒப்ப வரின்சீர் ஒப்புமை ஆகும்.' – தொ. வி. 247

'விருத்த விகற்பம் விளக்கிய காலை
அடிதொறும் தனிச்சீர் அணைவது வெள்ளை.' – தொ.வி. 248

'மூன்றடி யாயீற் றடிமுச் சீராய்
வருநவும், ஒருபொருள் மேல்மூன் றடுக்கி
வருநவும், வெள்ளொத் தாழிசை யாகும்.' – மு.வீ.யா.செ. 19

'மூன்றடி முதலா ஏழடி காறும்வந்து
ஈற்றடி சிற்சில சீர்தப நிற்பினும்
வேற்றொலி விரவினும் வெண்டுறை ஆகும்.' – 20

'அளவடி யாய்நான் கடிமூன் றடியாய்
அடியடி தோறும் தனிச்சொல் பெற்று
வருவது வெளிவிருத் தம்மா கும்மே.' – 21

## ஆசிரியப்பாவின் பொதுஇலக்கணம்

732. அகவல் இசையன அகவல் மற்றுஅவை
ஏஓ ஈஆய் எனஐஎன்று இறுமே.

இது நிறுத்தமுறையானே ஆசிரியப்பா ஆமாறு பொது வகையான் உணர்த்துகின்றது.

இ-ள் : அகவல் ஓசையைத் தமக்கு ஓசையாக உடையனவாம் எல்லா ஆசிரியப்பாவும். அவை ஏ என்றும் ஓ என்றும் ஈ என்றும் ஆய் என்றும் என என்றும் ஐ என்றும் இறும் என்றவாறு.

மற்று என்ற மிகையானே, ஏந்திசை அகவலும், தூங்கிசை அகவலும், ஒழுகிசை அகவலும், என அகவல் ஓசை மூன்று வகைப்படும்.

'நேர்நேர் இயற்றளை யான்வரும் அகவலும்,
நிரைநிரை இயற்றளை யான்வரும் அகவலும்,
ஆயிரு தளையும்ஒத்து ஆகிய அகவலும்,
ஏந்தல், தூங்கல், ஒழுகல், என்றிவை
ஆய்ந்த நிரல்நிறை ஆகும் என்ப'

என்ப ஆகலின்.

இவற்றிற்குச் செய்யுள் :

*(ஏந்திசை அகவல்)*

'போதுசாந்தம்......துன்னு வாரே' - *யா. கா.* 5 மே.

எனவும்,

*(தூங்கிசை அகவல்)*

'அணி நிழல்......பரிசறுப் பவரே' - *யா. கா.* 5 மே.

எனவும்,

*(ஒழுகிசை அகவல்)*

'குன்றக்குறவன்......சுணங்கே' - *யா. கா.* 9 மே,

எனவும் முறையே காண்க.

'கொன்னூர் துஞ்சினும் யாம்துஞ் சலமே;
எம்மில் அயலது ஏழில் உம்பர்
மயில்அடி இலைய மாக்குரல் நொச்சி
அணிமிகு மென்கொம்பு ஊழ்த்த
மணிமருள் பூவின் பாடுநனி கேட்டே' – குறுந். 138

என ஏயும்,

'குவளை உண்கண் இவள்வயின் பிரிந்து
பெருந்தோள் கதுப்பொடு விரும்பினை நீவி
இரங்குமென் றழுங்கல் வேண்டா;
செழுந்தேர் ஓட்டிய வென்றியொடு சென்றீ' – யா. வி. 69 மே.

என ஈயும்,

'முள்ளி நீடிய முதுநீர் அடைகரை
புள்ளிக் கள்வன் ஆம்பல் அதுக்கும்
தண்துறை ஊரன் அளிப்பவும்,
உண்கண் சிவப்பது எவன்கொல் அன்னாய்!'
– யா. வி. 69 மே; ஐங்குறு 21

என ஆயும்,

'அலந்த மஞ்ஞை யாமம் கூவும்
புலந்தது மாதோ! புரவலர்க் கிரவென'
– யா. வி. 69 மே; பெருங்கதை

என எனவும்,

'நின்றன நின்று தன்துணை ஒருசிறைப்
பூந்தண் சிலம்பன் தேந்தழை இவைஎனக்
காட்டவும், காண்டல் செல்லாள், கோட்டுப்
பூண்முலை நோக்கி, இறைஞ்சி,
வாண்முக எருத்தம் கோட்டினள், மடந்தை'
– யா. வி. 69 மே.

என ஐயும் ஈறுயவாறு காண்க. பிறவும் வந்துழிக் கண்டுகொள்க. (23)

## விளக்கம்

*நிறுத்தமுறை - 17ஆம் நூற்பா.*

## ஒத்த நூற்பாக்கள்

'தன்பால் உறுப்புத் தழுவிய மெல்லிய
இன்பா அகவல் இசையதை இன்னுயிர்க்கு
அன்பா வரைந்த ஆசிரியம் என்ப.' - அவிநயம்

'ஏ-ஐச் சொல்லின் ஆசிரியம் இறுமே,
ஓ-ஈ ஆயும் ஒரோவழி ஆகும்.' - அவிநயம்

'என்என் சொல்லும் பிறவும்என் றிவற்று
உன்னவும் பெறூஉம் நிலைமண் டிலமே.' - அவிநயம்

'இயற்சீர்த் தாகியும் அயற்சீர் விரவியும்
தன்தளை தழுவியும் பிறதளை தட்டும்
அகவல் ஓசையது ஆசிரி யம்மே.' - மயேச்சுரம்

'ஏயென்று இறுவது ஆசிரியத்து இயல்பே
ஓ-ஆ இறுதியும் உரிய ஆசிரியம்.' - மயேச்சுரம்

'நின்றது ஆதி நிலைமண் டிலத்துள்
என்றும் என்என்று இறுதிவரை வின்றே.' - மயேச்சுரம்

'அல்லா ஒற்றும் அகவலின் இறுதி
நில்லா அல்ல நிற்பன வரையார்.' - மயேச்சுரம்

'அகவல் ஓசை ஆசிரி யம்மே.'
முழுதும் - யா. வி. 69

'அகவ லோசை யொடுமள வடித்தாய்,
வருவது அகவற் பாவென மொழிப.' - மு. வீ. யா. செ. 22

'அகவல், ஏந்திசை அகவல், தூங்கிசை
அகவல், ஒழுகிசை அகவல்மூ வகைப்படும்.' - 30

'நேர்ஒன்று ஆசிரி யத்தளை யான்வரல்
நேரிசை அகவல் எனப்படும் எனலே.' - மு.வீ.யா.செ. 31

'நிரைஒன்று ஆசிரி யத்தளை யான்வரல்
தூங்கிசை அகவல் எனச்சொலப் படுமே.' - 32

'இவ்விரு தளையும் பிறவும் மயங்கி
வருவது ஒழுகிசை யாம்வழுத் திடினே.' - 33

23

## ஆசிரியப்பா வகை

733. நேரிசை இணைக்குறள் நிலைமண் டிலமே
அடிமறி மண்டிலம் எனநான்கு அகவல்.

**இது மேல் பொதுவகையான் கூறிய ஆசிரியப்பாவகை இத்துணைத்து என்கின்றது.**

**இ-ள்: நேரிசை ஆசிரியப்பாவும் இணைக்குறள் ஆசிரியப்பாவும் நிலைமண்டில ஆசிரியப்பாவும் அடிமறி மண்டில ஆசிரியப்பாவும் என நான்கு வகைப்படும் ஆசிரியப்பா என்றவாறு.**

(24)

### ஒத்த நூற்பாக்கள்

'நேரிசை இணைநிலை மண்டிலம் மண்டிலம்
ஈரிரண்டு இயல எண்ணுங் காலை.'

'நேரிசை இணைக்குறள் மண்டில நிலைப்பெயர்
ஆகுமண் டிலமுமென்று அகவல் நான்கே.' -யா. வி. 70

'ஆசிரி யத்துஒலி அகவலாய் இயற்சீர்
தன்தளை பிறவும் தழுவிய அளவடி
நடையான் நடந்து நால்வகைத் தாம்அவை
நேரிசை இணைக்குறள் நிலைமண் டிலமே
அடிமறி மண்டிலம் ஆகும் என்ப.' - தொ. வி. 223

24

## ஆசிரியப்பா வகையின் இலக்கணம்

734. அந்த அடியின் அயல்அடி சிந்தடி
வந்திடின் நேரிசை ஆசிரியம் ஆதலும்,
அளவடி அந்தமும் ஆதியும் ஆகிக்
குறளடி சிந்தடி என்று இரண்டும்
இடைவரப் நிற்பின் இணைக்குறள் ஆதலும்,
ஒத்த அடித்தாய் உலையா மரபொடு
நிற்பின் நிலைமண் டிலமா குதலும்,
மனப்படும் அடிமுதல் இடைஈறு ஆயின்
அடிமறி மண்டில ஆசிரியம் ஆதலும்,
நடைதெரி புலவர் நாடினர் கொளலே.

இது முற்கூறிய ஆசிரியப்பாக்கள் ஆமாறு கூறுகின்றது.

இ-ள்: ஈற்றுஅடியின் அயலடி முச்சீர் அடியாக நடப்பின் அது நேரிசை ஆசிரியப்பா ஆதலையும்,

ஈறும் முதலும் நாற்சீர் அடியாய் இருசீர்அடியும் முச்சீர்அடியும் ஆகிய இரண்டு அடியும் இடைஇடையே வந்து நிலைபெறின் அஃது இணைக்குறள் ஆசிரியப்பா ஆதலையும்,

சீர்தம்மில் அளவுஒத்த அடியினை உடைத்தாய்க் கெடாத தன்மையொடு நிற்பின் அது நிலைமண்டில ஆசிரியப்பா ஆதலையும்,

யாதானும் ஓர் அடியை முதல் அடியாக, இடை அடியாக ஈற்று அடியாகக் கூறினும் ஓசையும் பொருளும் சிதையாமல்வரின் அஃது அடிமறி மண்டில ஆசிரியப்பா ஆதலையும் இலக்கண நெறியை அறியும் அறிவுடையோர் ஆராய்ந்து கொள்க என்றவாறு.

'குறளடி சிந்தடி என்று இரண்டும்
இடைவர நிற்பின் இணைக்குறள்' — காக்கை.

என்றாரேனும், உரையில் கோடலான் சிந்தடிஇணைதலும் இணைக்குறளாம் எனக்கொள்க.

நேரிசை ஆசிரியப்பாவிற்குச் செய்யுள் :

'நிலத்தினும் பெரிதே, வானினும் உயர்ந்தன்று;
நீரினும் ஆரளவு இன்றே; சாரல்
கருங்கோல் குறிஞ்சிப் பூக்கொண்டு,
பெருந்தேன் இழைக்கும் நாடனொடு நட்பே' - குறுந். 3
- யா. கா. 29 மே.

எனவும்,

ஈற்று அயல்அடி இரண்டும் சிந்தடியான் வந்த இணைக்குறள் ஆசிரியப்பாவிற்குச் செய்யுள் :

'நீரின் தண்மையும், தீயின் வெம்மையும்,
சாரச் சார்ந்து தீரத் தீரும்;
சாரல் நாடன் கேண்மை,
சாரச் சாரச் சார்ந்து,
தீரத் தீரத் தீர்பொல் லாதே' - யா. கா. 29 மே.

எனவும்,

இருசீர்அடியும் முச்சீர்அடியும் இடைஇடைவந்த இணைக்குறள் ஆசிரியப்பாவிற்குச் செய்யுள் :

'சிறியகள் பெறினே, எமக்கீயும் மன்னே;
பெரியகள் பெறினே,
யாம்பாடத் தான்மகிழ்ந்து உண்ணும் மன்னே;
சிறுசோற் றானும் நனிபல கலத்தன் மன்னே;
பெருஞ்சோற் றானும் நனிபல கலத்தன் மன்னே;
என்பொடு தடிபடு வழியெல்லாம்
எமக்குஈயும் மன்னே;
அம்பொடு வேல்நுழை வழியெல்லாம்
தான்நிற்கும் மன்னே;

நரந்தம் நாறும் தன்கையால்
புலவு நாறும் என்தலை தைவரும் மன்னே;
அருங்கலை இரும்பாணர் அகல்மண்டைத் துளைஉரீஇ,
இரப்போர் கையுளும் போகி,
புரப்போர் புன்கண் பார்வை சோர்தர,
அஞ்சொல் நுண்தேர்ச்சிப் புலவர் நாவில்
சென்றுவீழ்ந் தன்று;அவன்
திருநிறத்து இயங்கிய வேலே;
ஆசுஆகு எந்தை யாண்டுஉளன் கொல்லோ?
இனி, பாடுநரும் இல்லை;
பாடுநர்க்கு ஒன்று ஈகுநரும் இல்லை;
பனித்துறைப் பகன்றை நறைக்கொள் மாமலர்
சூடாது வைகி யாங்கு, பிறர்க்கொன்று
ஈயாது வீயும் உயிர்தவப் பலவே'

– *யா. கா.* 29 *மே; புறநா.* 255

என்றும்,

*நிலைமண்டில ஆசிரியப்பாவிற்குச் செய்யுள் :*

'வேரல் வேலி வேர்க்கோள் பலவின்
சாரல் நாட! செவ்வியை ஆகுமதி;
யார்அஃது அறிந்திசி னோரே? சாரல்
சிறுகோட்டுப் பெரும்பழம் தூங்கி யாங்கிவள்
உயிர்தவச் சிறிது; காமமோ பெரிதே'

– *யா. கா.* 29 *மே; குறுந்.* 18

எனவும்,

*அடிமறிமண்டில ஆசிரியப்பாவிற்குச் செய்யுள் :*

'சூரல் பம்பிய சிறுகான் யாறே;
சூர்அர மகளிர் ஆர்அணங் கினரே;
வாரல் எனினே யான்அஞ் சுவலே;
சாரல் நாட நீவரல் ஆறே' – *யா. கா.* 29 *மே.*

எனவும் வரும். (25)

## விளக்கம்

நால்வகை ஆசிரியப்பாவிற்கும் உரிய சிதம்பரச் செய்யுட் கோவைப் பாடல்கள் பின்வருமாறு :

நேரிசை ஆசிரியப்பாவிற்குச் செய்யுள் :

'பொற்றூது பொதிந்த சிற்சபை பொலியப்
பச்சிளங் கொடியொடு படரும்
செக்கர் வார்சடைக் கற்பகத் தருவே.' – சி. செ. கோ. 41

இணைக்குறள் ஆசிரியப்பாவிற்குச் செய்யுள் :

'தண்ணென் கடுக்கை கண்ணீர் கலுழ்தர
வெண்மதிக் கண்ணி சூடும்
கண்ணுதல் கடவுள்
புண்ணியப் பொதுவில் ஆடும் பூங்கழல் இறைஞ்சுதும்
விண்மிசைப் போகிய வீடுபெறல் பொருட்டே.' – 43

நிலைமண்டில ஆசிரியப்பாவிற்குச் செய்யுள் :

'மாயிரு விசும்பின் தூநிலாப் பரப்பிப்
பாயிருள் சீக்கும் பனிமதிக் கண்ணியும்
மின்செய் கொண்மூ வெள்ளிவீழ் வீழ்ப்பப்
பொன்செய்மலர்ப் பூங்கொன்றையும்,
புலியூர் மன்றின் ஒலிகழல் மிழற்றப்
பரம நாடகம் இருவரைக் காட்டும்
எரிநிறத்து ஐமுகத்து எண்டோள் முக்கண்
கருமிடற்று ஒருவ! நின் செஞ்சடைப் பொலிதலின்,
நோயும் மருந்தும் ஓர்வழிக் கிடைத்தென
ஆருயிர் தரித்தனள் அன்றே; அதாஅன்று,
தெள்ளமுது அன்னவர் உள்உயிர் குடிக்கும்இத்
திங்கள் ஒன்றே திருமுடிக்கு அணியின்,
கங்கை யாளும் உயிர்வா ழாளே.' – 44

அடிமறிமண்டில ஆசிரியப்பாவிற்குச் செய்யுள்:

'தீர்த்தம் என்பது சிவகங் கையே;
ஏத்த ருந்தலம் எழிற்புலி யூரே;
மூர்த்தி அம்பலக் கூத்தன துருவே.' – 45

## ஒத்த நூற்பாக்கள்

'கைக்கிளை ஆசிரியம் வருவ தாயின்
முச்சீர் எருத்தின் ருகி முடிவடி
எத்திறத் தானும் ஏகாரத் திறுமே.' – கடியநன்னியம்

'ஈற்றதன் மேலடி ஒருசீர் குறையடி
நிற்பது நேரிசை ஆசிரி யம்மே.' – அவிநயம்

'இறுசீர் அடிமேல் ஒருசீர் குறையடி
பெறுவன நேரிசை ஆசிரி யம்மே.' – சிறுகாக்கை

'அந்த அடியின் அயலடி சிந்தடி
வந்தன நேரிசை ஆசிரி யம்மே.' – யா. வி. 71

'இடைபல குறைவது இணைக்குறள் ஆகும்.' – அவிநயம்

'அளவடி அந்தமும் ஆதியும் ஆகிக்
குறளடி சிந்தடி என்று இரண்டும்,
இடைவர நிற்பது இணைக்குறள் ஆகும்.' – காக்கை.

'இடைஇடை சீர்தபின் இணைக்குறள் ஆகும்.' –சிறுகாக்கை

'ஈற்றயல் குறைந்த நேரிசை; இணையாம்
ஏற்ற அடியின் இடைபல குறைந்தன.' – மயேச்சுரம்

'இணைக்குறள் இடைபல குறைந்திறின் இயல்பே.'
– யா. வி. 72

'ஒத்த அடித்தாய் உலையா மரபொடு
நிற்பது தானே நிலைமண் டிலமே.'

'என்என் கிளவியை ஈறுப் பெறுதலும்
அன்ன பிறவும் அந்தம் நிலைபெற
நிற்கவும் பெறூஉம் நிலைமண் டிலமே.'

'ஒத்த அடித்தாய் உலையா மண்டிலம்
என்என் கிளவியை ஈறு கப்பெறும்
அன்ன பிறவும்அந் நிலைமண் டிலமே.' – அவிநயம்

'ஒத்த அடியின நிலைமண் டிலமே.' – மயேச்சுரம்

'என்னெனும் அசைச்சொலும் பிறவும் ஒன்றித்
துன்னவும் பெறாஉம் நிலைமண் டிலமே.' – மயேச்சுரம்

'என்னென்று இறுதல் வரைநிலை இன்றே.' – மயேச்சுரம்

'அல்லா ஒற்றினும் அதனினும் இறுதி,
நில்லா அல்ல நிற்பன வரையார்.' – மயேச்சுரம்

'ஒத்த அடியின தாகியும் ஒற்றிற
நிற்பவும் என்னும் நிலைமண் டிலமே.' – யா. வி. 74

'உரைப்போர் குறிப்பின் உணர்வகை அன்றி
இடைப்பால் முதல்ஈறு என்றிவை தம்முள்
மதிக்கப் படாதன, மண்டில யாப்பே.' – காக்கை.

'கொண்ட அடிமுத லாயொத் திறுவது
மண்டில யாப்பென வகுத்தனர் புலவர்.' – சிறுகாக்கை

'கொண்ட அடிமுத லாயொத் திறுவது,
மண்டிலம் ஒத்திறின் நிலைமண் டிலமே.' – அவிநயம்

'எவ்வடி யானும் முதல்நடு இறுதி
அவ்வடி பொருள்கொளின் மண்டில யாப்பே.' – மயேச்சுரம்

'எழுவாய் இரட்டித்து இறுதி ஒன்றாய்
வரின்அது மண்டில ஆசிரி யம்மே.'

'மனப்படும் அடிமுத லாயிறின் மண்டிலம்.' – யா. வி. 73

'கடைஅயற் பாதம்முச் சீர்வரின் நேரிசை; காமருசீர்
இடைபல குன்றின் இணைக்குறள்; எல்லா அடியும்ஒத்து
நடைபெறு மாயின் நிலைமண் டிலம்;நடு ஆதிஅந்தத்து
அடைதரு பாதத் தகவல் அடிமறி மண்டிலமே.' – யா.கா. 29

'ஈற்றயல் முச்சீர் வரின்நே ரிசையாம்; இணைக்குறட்பா
ஏற்ற குறள்சிந் திடையே வரும்;நிலை மண்டிலப்பாச்
சாற்றிய தன்னே ரடியா லியலும்; தலைநடுஈறு
ஆற்றிய பாதத் தகவல் அடிமறி மண்டிலமே.' – வீ. சோ. 115

'நேரிசைச் சிறுமை நேரும்மூ வடியே;
வரையா பெருமையே; மற்றடி அளவடி
ஈற்றயல் சிந்தடி இயைந்து வருமே.' தொ. வி. 224

'இணைக்குறள் முதல்ஈற்று ஈரடி அளவடி;
இடைக்குறள் சிந்தடி இணையப் பெறுமே.' – 225

'நிலைமண் டிலத்தெங்கும் நீங்கா அளவடி;
அடிமறி மண்டிலம் அந்நடைத் தாகி
அடிமா றினும்தான் அழியா நிலைத்தே.' – 226

'ஈற்றய லடிமுச் சீராய் வருவது
நேரிசை அகவற் பாவா கும்மே.' – மு. வீ. யா. செ. 23

'எல்லா அடியும்ஒத் திறின்நிலை மண்டில
அகவல் என்மனார் அறிந்திசி னோரே.' – 24

'ஆதியும் அந்தமும் அளவடி யாகி
குறளடி சிந்தடி என்றாங்கு இரண்டும்
இடைவரல் இணைக்குறள் ஆசிரி யம்மே.' – 25

'மூன்றடி முதலா முடிந்தெலா அடியும்
இடைகடைமுத லாயெடுத் தாலும்,
ஓசையும் பொருளும் உலவாது வருவன,
அடிமறி மண்டில அகவலா கும்மே.' – 26

25

## ஆசிரியப்பா இனம்

735. மூன்றுஅடி ஒத்து முடிவன ஆய்விடின்
ஆன்ற அகவல் தாழிசை ஆதலும்,
எருத்துஅடி குன்றியும் இடைஇடை குன்றியும்

இவற்ரேடு இடைமடக்கு ஆகியும் நான்கடி
அவற்ருல் நடப்பின் அதன்துறை ஆதலும்,
கழிநெடில் அடிநான்கு ஒத்துஇறின் அகவல்
விருத்தம் ஆதலும், விதிஎனப் படுமே.

இது மேல் கூறிய ஆசிரியப்பாவிற்கு இனம் ஆகிய தாழிசை துறை விருத்தங்கள் ஆமாறு கூறுகின்றது.

இ–ள்: மூன்றடியாய்ச் சீர் தம்முள் அளவு ஒத்து முடியுமாயின் அஃது இலக்கணத்தான் நிறைந்த ஆசிரியத்தாழிசை ஆதலும்,

ஈற்றுஅயல்அடி குறைந்தும் இடைஇடை குறைந்தும், ஈற்றுஅயல்அடி குறைந்து இடைமடக்கு ஆகியும் இடைஇடை குறைந்து இடைமடக்கு ஆகியும் நான்கு அடியான்வரின் அவை ஆசிரியத்துறை ஆதலும்,

கழிநெடில்அடி நான்காய்த் தம்மில் அளவு ஒத்து அவை முடியின் ஆசிரிய விருத்தம் ஆதலும் இலக்கணமாம். என்றவாறு.

'ஆன்ற' என்ற மிகையானே ஆசிரியத்தாழிசை தனியே வரப்பெறும் ஆயினும் ஒரு பொருள்மேல் மூன்று அடுக்கி வருவது சிறப்பு உடைத்து எனக்கொள்க. சீர் வரையறுத்திலாமையான் ஆசிரியத்தாழிசையும் ஆசிரியத் துறையும் எனைத்துச் சீரானய அடியானும் வருதல் பெற்ரும்.

ஒரு பொருள் மேல் மூன்று அடுக்கி வந்த ஆசிரியத் தாழிசைக்குச் செய்யுள் :

'கன்று குணிலாக் கனிஉதிர்த்த மாயவன்,
இன்றுநம் ஆனுள் வருமேல், அவன்வாயில்
கொன்றை அம் தீங்குழல் கேளாமோ? தோழீ'

'பாம்பு கயிருக் கடல்கடைந்த மாயவன்,
ஈங்குநம் ஆனுள் வருமேல், அவன்வாயில்,
ஆம்பல்அம் தீங்குழல் கேளாமோ? தோழி'

'கொல்லைஅம் சாரல் குருந்துஒசித்த மாயவன்,
எல்லைநம் ஆனுள் வருமேல், அவன்வாயில்
முல்லைஅம் தீங்குழல் கேளாமோ? தோழி' – சிலப். ஆய். 1

எனவும்,

தனியே வந்த ஆசிரியத்தாழிசைக்குச் செய்யுள் :

'வான்உற நிமிர்ந்தனை, வையகம் அளந்தனை,
பால்மதி விடுத்தனை, பல்உயிர் ஓம்பினை,
நீல்நிற வண்ண!நின் நிறைகழல் தொழுதனம்'

– யா. கா. 30 மே.

எனவும்,

எருத்து அடி குறைந்த ஆசிரியத்துறைக்குச் செய்யுள் :

'கரைபொரு கான்யாற்றங் கல்லதர் எம்முள்ளி வருதி ராயின்
அரைஇருள் யாமத்து அடுபுலியே றும்மஞ்சி அகன்று போக;
நரைஉரும் ஏறுநும் கைவேல் அஞ்சும்; நும்மை
வரைஅர மகளிர் வெளவுதல் அஞ்சுதும்; வாரலையே!'

– யா. கா. 30 மே.

எனவும்,

இடைஇடை குறைந்து வந்த ஆசிரியத்துறைக்குச் செய்யுள் :

'கொன்றூர்ந் தமைந்த குருமுகத் தெழில்நிறக்
குருதிக் கோட்டின இருந்தாள் பெருங்கைக்
குன்றுமென அன்றுமென
குமுறு நின்றன கொடுந்தொழில் வேழம்;

வென்றூர்ந் தமைந்த விளங்கொளி இளம்பிறைத்
துளங்குவாள் இலங்கெயிற் றழல்உளைப் பருஉத்தாள்
அதிரும் வானென எதிரும் கூற்றெனச்
சுழலா நின்றன சுழிக்கண் யாளி;

சென்றோர்ந் தமைந்த சிறுநுதி வள்உகிர்ப்
பொறிஎருத்து எறுழ்வலிப் புலவுநாறு அழல்வாய்ப்
புனலாமெனக் கனலாமெனப்
புகையா நின்றன புலிமான் ஏற்றை;

என்றாங்கு இவைஇவை இயங்கலின் எம்திறத்து
இனிவரல் வேண்டலம், தனிவரல், எனத்தலை
விலக்கலின், இறுவரை மிசைஎறி குறும்பிடை
இதுஎன் என,அது நோனார்கரவிர விடைக்களவு
உளமது கற்றோரது கற்பன்றே' – யா. கா. 30 மே.

எனவும்,

எருத்தடி குறைந்து இடைமடக்காய் வந்த ஆசிரியத் துறைக்குச் செய்யுள் :

'வண்டுளர் பூந்தார் வளங்கெழு செம்பூட்செய்
வடிவே போல,
தண்தளிர்ப்பூம் பிண்டித் தழைஏந்தி, மாவினவித்
தணந்தோன் யாரே ?
தண்தளிர்ப் பூம்பிண்டித் தழைஏந்தி வந்துநம்
பண்டைப் பதிவினவிப் பாங்குபட மொழிந்து
படர்ந்தோ னன்றே' – யா. கா. 30 மே.

எனவும்,

இடைஇடை குறைந்து இடைமடக்காய் வந்த ஆசிரியத்துறைக்குச் செய்யுள் :

'இரங்கு குயில்முழவா, இன்னிசையாழ் தேனா,
அரங்கம் அணிபொழிலா ஆடும்போலும் இளவேனில்,
அரங்கம் அணிபொழிலா ஆடு மாயின்,
மரங்கொல்? மணந்தகன்றார் நெஞ்சம்என்
செய்த திளவேனில்? – யா. கா. 30 மே.

எனவும்,

அறுசீர்க் கழிநெடில் அடியான் வந்த ஆசிரிய விருத்தத்திற்குச் செய்யுள் :

'விடஞ்சூழ் அரவின் இடைநுடங்க, மின்வாள்
வீசி, விரையார்வேங்
கடஞ்சூழ் நாடன் காளிங்கன் கதிர்வேல் பாடும் மாதங்கி;
வடஞ்சேர் கொங்கை மலைதாந்தாம், வடிக்கண்
நீல மலர்தாந்தாம்,
தடந்தோள் இரண்டும் வேய்தாந்தாம், என்னும்
தன்கைத் தண்ணுமையே.'

எனவும் வரும்.

ஒழிந்த கழிநெடில் அடியான் வந்த ஆசிரிய விருத்தங்கட்குச் செய்யுள் கழிநெடிலடிக்கு முன்னர்க் காட்டியவே கொள்க. (பக். 73, 74) பிறவும் வந்துழிக் காண்க. (26)

விளக்கம்

*சிதம்பரச் செய்யுட் கோவைப் பாடல்களை நோக்குவோம்.*

*ஒரு பொருள்மேல் மூன்று அடுக்கி வந்த ஆசிரியத் தாழிசைக்குச் செய்யுள் :*

*'சிற்றம் பலத்து நடிக்கும் சிவபெருமான்*
*கற்றைச் சடைக்கு முடிக்கும் சுடர்த்திங்கள்*
*மற்றப் புனல்மங்கை வாணுதலை ஒக்குமால்.'*

*'பேரம் பலத்து நடிக்கும் சிவபெருமான்*
*வார்செஞ் சடைக்கு முடிக்கும் சுடர்த்திங்கள்*
*நீர்மங்கை கொங்கைக்கு நித்திலக்கச் சொக்குமால்.'*

*'பொன்னம் பலத்து நடிக்கும் சிவபெருமான்*
*மின்னும் சடைக்கு முடிக்கும் சுடர்த்திங்கள்*
*அந்நங்கை செங்கைக்கு அணிவளையும் ஒக்குமால்.'*

*– சி. செ. கோ. 47*

தனியே வந்த ஆசிரியத்தாழிசைக்குச் செய்யுள் :

'சத்தமும் ஆகிஅச் சத்தத் தாழ்பெறும்
அத்தமும் ஆகலின் அநந்தன் கண்களே
உத்தமன் ஐந்தெழுத் துருவம் காண்பன.' –சி.செ.கோ. 46

ஈருத்தடி குறைந்த ஆசிரியத் துறைக்குச் செய்யுள் :

'நாகம் பொதிசடைமேல் நாள்மதியும் வாள்மதிபோல்
நங்கை கங்குல்
மேகம்செய் கூந்தல் மிலைச்சும் தலைக்கலனும்
விளங்கும் தோற்றம்
ஆகம் பகுந்தளித்த அந்நாளில் அம்பலத்தான்
மாகம் பதியும் மதியும் பகுந்தளித்த வண்ணம் போலும்' –48

இடைஇடை குறைந்து வந்த ஆசிரியத் துறைக்குச் செய்யுள் :

'உண்டாங் கெனினும் இலதென் றறிஞர்கள்
பொய்யெனப் புகலவும் மெய்யெனப் பெயர்பெற்று
உன்றுமுனம் இன்றுமென உளதாய்
மாய்வது நிலையில் யாக்கை ;

கண்டாங் கிகழும் கிழமுதிர் அமைய்த்து
ஐவளி பித்தெனும் மெய்தரும் வித்தில்
கடலில் திரையென உடலில் திரையொடு
கலியா நின்றன நலிவுசெய் நோய்கள் ;

புண்தாங் கயில்முக் குடுமிப் படையொடும்
எயிறலைத் தழல்விழித் துயிருணக் கனல்சேர்
புகையாமென நிழலாமெனத் திரியாநின்றது
கொலைசெய் கூற்றம்.

விண்டாங் ககலுபு மெய்ப்பொருள் துணிவோர்
மின்பொலி பொன்புனை மன்றிலெம் உயிராம்
விமலன் குஞ்சித கமலம் கும்பிட
வேண்டுவர் வேண்டார் விண்மிசை உலகே.' –50

(முதலடியும் மூன்றுமடியும் 14 சீர் – ஏனை இரண்டும் 16 சீர்)

எருத்தடி குறைந்து இடைமடக்காய் வந்த ஆசிரியத் துறைக்குச் செய்யுள் :

'மாயிரு ஞாலத்து மன்னுயிர் கண்களிப்ப
மன்று ளாடும்
நாயகன் கண்டம் கறுத்தன்றே பொன்னுலகை
நல்கிற் றம்மா,
நாயகன் கண்டம் கறுதேலந் நாட்டமரர்
சேயிழை மாதருக்குச் செங்கைகளும் கொங்கைகளும்
சிவக்கும்போலும்.' – சி. செ. கோ. 51

இடைஇடை குறைந்து இடைமடக்காய் வந்த ஆசிரியத் துறைக்குச் செய்யுள் :

'திங்கட் சடைக்கற்றைப் புத்தேள் திருமார்பில்
பைங்கண் தலைகள் பலவும் நகுவ போலுமால் ;
பைங்கண் தலைகள் பலவும் நகுவகண்டு,
அங்கட் கமலத்து அயனும் மாலும் அழுவரால்' – 51

( இது முதலடியும் மூன்றாமடியும் நாற்சீர், ஏனைய ஐஞ்சீர் பெற்று இடைமடக்காய் வந்தது. )

அறுசீர்க் கழிநெடிலடி ஆசிரியவிருத்தம் :

'கனம ளித்தபைங் காவில்வெண் டரளமும்
பவளமும் கமுகீனப்
புனம ளித்தபூங் கொன்றைபொன் சொரிதரப்
புண்ணிய மலர்தில்லை
வனம ளித்ததே எனினுமோ ரானந்த
மாக்கடற் றிளைத்தாடும்
அனம ளித்தவூழ் பொழிற்குமோர் பலமென்ப
தம்பொனம் பலந்தானே,' – 52

எழுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம் :

'கோமுனிவ ருச்குமரி தாய்முது மறைப்பனுவல்
கூறிய பரப்பி ரமமாம்
ஓம்எனும் எழுத்தின்வடி வாய்,நடம் நவிற்றுபுலி
ஊரன்,மகு டச்ச டிலமேல்
மாமதி யினைத்தனது கோடென எடுப்ப,மத
மாமுகன் முகக்கை தொடர,
தூமதி பணிப்பகை எனவர நதிப்புக,வொர்
தோணி எனவிட் டகலுமே.' - ம் கா. 53

எண்சீர்க் கழிநெடியான்வந்த ஆசிரிய விருத்தம் ன்
ம் பே
'அருவருக்கும் உலகவாழ் வடங்க நீத்தே ,
ஆனந்தப் பெருவாழ்வாம் ஆடல் றைட்,
மருஅருக்கள் மதிவளிவான் யமானன் தீநீர்
மண்எனும்எண் வகைஉறுப்பின் வடிவு கொண்ட
ஒருவனுக்கும், ஒருத்திக்கும் உருவொன் றூல்அவ்
வுருவைஇஃ தொருத்தனென்கோ, ஒருத்தி என்கோ
இருவருக்கும் உரித்தாக ஒருவர் என்றோர்
இயற்சொலில தெனின்,யான்மற் றென்சொல் கேனே' 54

ஒன்பதின்சீர்க் கழிநெடிலடியான்வந்த ஆசிரிய விருத்தம் :

'வளங்கு லாவரும் அணங்க னார்விழி
மயக்கி லேமுலை முயக்கி லேவிழு மாந்தர்காள் !
களங்கு லாமுட விறந்து போயிடு
காடு சேர்முளம், வீடு சேர்வகை கேண்மினோ !
துளங்கு நீள்கழல் தழங்க ஆடல்செய்
சோதி யானணி பூதி யானுமை பாதியான்,
விளங்கு சேவடி உளங்கொ ளீர் ! யமன்
விடுத்த பாசமும், அடுத்த பாசமும், விலக்குமே !' 55

பதின்சீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம் :

'கைத்தலத்த முற்கணிச்சி வைத்திடப்பு றத்தொ ருத்தி
கட்கடைப்ப டைக்கி ளைத்த திறலோராம்
முத்தலைப்ப டைக்க ரத்தெம் அத்தர் சிற்சபைக்குள் நிற்கும்
முக்கணக்க ருக்கொ ருத்தர் மொழியாரோ?
நித்திலத்தி ளைப்ப தித்த கச்சறுத்த டிக்க னத்து
நிற்குமற்பு தத்த னத்தி னிடையே,வேள்
அத்திரத்தி னைத்தொ டுத்து விட்டுநெட்ட யிற்க ணித்தி
லக்கணுற்றி டச்செய் விக்கு மதுதானே.'
– சி. செ. கோ. 56

## ஒத்த நூற்பாக்கள்

'ஒத்த ஒருபொருள் மூவடி முடியின்அஃது
ஒத்தாழிசையாம் உடன்மூன்று அடுக்கின்.'– மயேச்சுரம்

'அடிமூன்று ஒத்திறின் ஒத்தா ழிசையே.' – சிறுகாக்கை

'மூன்றடி ஒத்த முடிவின வாய்விடின்
ஆன்ற அகவல் தாழிசை ஆகும்.' – யா. வி. 75

'அடித்தொகை நான்குபெற்று அந்தத் தொடைமேல்
கிடப்பது நாற்சீர்க் கிழமையது ஆகி
எடுத்துரை பெற்ற இருநெடில் ஈற்றின்
அடிப்பெறின் ஆசிரி யத்துறை ஆதம்.' – காக்கை

'அளவடி ஐஞ்சீர் நெடிலடி தம்முள்
உறழத் தோன்றி ஒத்த தொடையாய்
விளைவதும் அப்பெயர் வேண்டப் படுமே.' ,,

'எண்சீர் அடியீற் றயலடி குறைநவும்
ஐஞ்சீர் அடியினும் பிறவினும் இடையொன்ற
வந்த தொடையாய் அடிநான் காகி
உறழக் குறைநவும் துறையெனப் படுமே.' – மயேச்சுரம்

'நாற்சீர் அடிநான்கு அந்தத்தொடை நடந்தவும்
ஐஞ்சீர் அடிநடந்து உறழடி குறைந்தவும்
அறுசீர் எழுசீர் வலிய நடந்தவும்
தன்சீர்ப் பாதியின் அடிமுடிவு உடைத்தாய்
அந்தத் தொடையிவை அடியா நடப்பின்
குறையா உறுப்பினது துறையெனப் படுமே.' –அவிநயம்

'கடையதன் அயலடி கடைதபு நடையவும்
நடுவடி மடக்காய் நான்கடி யாகி
இடையடி குறைநவும் அகவல் துறையே.' – யா. வி. 76

'அறுசீர் முதலா நெடியவை எல்லாம்
நெறிவயின் திரியா நிலத்தவை நான்காய்
விளைகுவது அப்பா இனத்துள விருத்தம்.' – காக்கை

'அறுசீர் எழுசீர் அடிமிக வரூஉம்
முறையைய நாலடி விருத்தம் ஆகும்.' – சிறுகாக்கை

'அறுசீர் எழுசீர் அடிமிக நின்றவும்
குறைவில் நான்கடி விருத்த மாகும்.' – அவிநயம்

'ஆறு முதலா எண்சீர் காறும்
கூறும் நான்கடி ஆசிரிய விருத்தம்.' – மயேச்சுரம்

'கழிநெடில் அடிநான்கு ஒத்துஇறின் விருத்தம்,அஃது
அழியா மரபினது அகவ லாகும்.' – யா. வி. 77

'தருக்கிய தாழிசை மூன்றடி ஒப்பன; நான்கடியாய்
எருத்தடி நைந்தும் இடைமடக் காயும் இடைஇடையே
சுருக்கடி யாயும் துறையாம்; குறைவில்தொல் சீர்அகவல்
விருத்தம் கழிநெடில் நான்கொத் திறுவது; மெல்லியலே.'
– யா. கா. 30

'மூன்றடி ஒப்பன தாழிசை; நான்காய்க் கடைஅயற்கண்
ஏன்றடி நைந்து இடைமடக் காயும் இடையிடையே
தோன்றடி குன்றியு மாகுந்துறை; தொல் கழிநெடிலாய்
ஆன்றடி நான்கொத் திடிலா சிரிய விருத்தமன்றே.'
– வீ. சோ. 122

'அகவல் தாழிசை அடிமூன்று ஒத்தவாய்
அடுக்கிய மூன்றும் ஒன்ருகியும் வருமே.' – தொ. வி. 244

'ஆசிரி யத்துறை அளவில் சீர்வரும்
அடிநான்கு ஈற்றயல் ஆதி குறைநவும்
இருவழி இடைமடக் கினவும்நால் வகைய.' – 240

'விருத்த விகற்பம் விளக்கிய காலை
அகவல் கழிநெடி லடிகொள் விருத்தமே.' – 248

'மூன்றடி ஒத்து வருவதும் ஒருபொருள்
மேல்மூன்று அடுக்கி வருவதும் அகவல்
தாழிசை ஆமெனச் சாற்றப் படுமே.' – மு. வீ. யா. செ. 27

'அளவடி யாய்ஈற் றயலடி குறைநவும்
ஈற்றய லடிகுறைந் திடைமடக் காக
வருநவும் இடைஇடை குறைந்து வருநவும்
அகவல் துறையென அறையப் படுமே.' – 28

'கழிநெடில் அடிநான்கு ஒத்திறின் அகவல்
விருத்தம் என்மனுர் மெய்யுணர்ந் தோரே.' – 29

26

## கலிப்பாவின் பொது இலக்கணம்

736. துள்ள இசையன கலியே மற்றவை
வெள்ளையும் அகவலு மாய்விளைந்து இறுமே.

**இது நிறுத்தமுறையானே கலிப்பா ஆமாறு பொது வகையான் உணர்த்துகின்றது.**

**இ–ள்: துள்ளல் ஓசையைத் தமக்கு ஓசையாக உடையனவாம் எல்லாக் கலிப்பாவும்; அக்கலிப்பாக்கள் வெள்ளைச்சரிதகத்தால்தான் ஆசிரியச்சுரிதகத்தால்தான் முற்றுப்பெற்று முடியும் என்றவாறு.**

மற்று என்ற மிகையானே ஏந்திசைத்துள்ளலும் அகவல்துள்ளலும் பிரிந்திசைத்துள்ளலும் எனத் துள்ளல் ஓசை மூன்று வகைப்படும்.

'ஏந்திசைத் துள்ளல் கலித்தளை இயையின்;
வெண்டளை தன்தளை என்றிரண்டு இயையின்
ஒன்றிய அகவல் துள்ளலென்று ஓதுப;
தன்தளை பிறதளை என்றுஇவை அனைத்தும்
பொருந்தி வரினே பிரிந்திசைத் துள்ளல்'

எனக் கூறுப ஆகலின்.

இவற்றிற்குச் செய்யுள் :

*ஏந்திசைத் துள்ளல் :*

'முருகவிழ்தா மரைமலர்மேல் முடிஇமையோர் புடைவரவே,
வருசினனுர் தருமறைநூல் வழிபிழையா மனமுடையார்,
இருவினைபோய் விழமுனியா, எதிரியகா தியைஅரியா,
நிருமலராய், அருவினராய், நிலவுவர்,சோ தியினிடையே'
– *யா. கா.* 22 *மே.*

எனவும்,

*அகவல் துள்ளல் :*

'செல்வப்போர்க் கதக்கண்ணன் செயிர்த்தெறிந்த சினஆழி,
முல்லைத்தார் மறமன்னர் முடித்தலையை முருக்கிப்போய்,
எல்லைநீர் வியன்கொண்மூ இடைநுழையும் மதியம்போல்,
மல்லல்ஓங் கெழில்யானை மருமம்பாய்ந் தொளித்ததே'
– *யா. கா.* 11 *மே.*

எனவும்,

*பிரிந்திசைத் துள்ளல் :*

குடநிலைத் தண்புறவில் கோவலர் எடுத்தார்ப்ப,
தடநிலைப் பெருந்தொழுவில் தகைஏறு மரம்பாய்ந்து,
வீங்குமணிக் கயிறொரீஇத் தாங்குவனத்து ஏறப்போய்க்

கலையினொடு முயல்இரிய, கடிமுல்லை முறுவலிப்ப,
எனஆங்கு
ஆனொடு புல்லிப் பெரும்புதல் முனையும்
கானுடைத்து; அவர்தேர் சென்ற ஆறே.' - யா. கா. 22 மே.

எனவும் முறையே காண்க.

'விளைந்து' என்ற மிகையானே, ஒருசார் கொச்சகக் கலிப்பாக் கலி அடியானே இறுதலும் கொள்க. இருவகைச் சுரிதகத்தானும் கலியானும் இறுமாறு இனிக் காட்டும் கலிப்பாக்களுள் கண்டுகொள்க. (27)

'துள்ளல் ஓசை கலிஎன மொழிப.' - தொ. பொ. 395

'பிறிதின் நடப்பினும் வஞ்சியும் கலியும்
இறுதி மருங்கின் ஆசிரி யம்மே
கலியே வெண்பா ஆயினும் வரையார்.'

'வகுத்த உறுப்பின் வழுவுதல் இன்றி
எடுத்துயர் துள்ளல் இசையன ஆகல்
கலிச்சொற் பொருளெனக் கண்டிசி னோரே.' - காக்கை

'ஆய்ந்த உறுப்பின் அகவுதல் இன்றி
ஏய்ந்த துள்ளல் இசையது கலியே.' - அவிநயம்

'சீரின் கிளந்த தன்தளை தழுவி
நேர்ஈற்று இயற்சீர் சேரா தாகித்
துள்ளல் ஓசையின் தள்ளா தாகி
ஓதப் பட்ட உறுப்புவேறு பலவாய்
ஏதம் இல்லன கலிஎனப் படுமே.' - மயேச்சுரம்

முழுதும் - யா. வி. 78

'அளவடி யாய்த்துளல் அமைந்து வருவது
கலியாம் என்மனர் கற்றுணர்ந் தோரே.' - மு வீ. யா. செ. 34

'துள்ளல் ஏந்திசை பிரிந்திசை அகவல்
எனமூ வகைப்படும் என்மனர் புலவர்.' 44

'ஏந்திசைத் துள்ளல் இயையின் கலித்தளை' 45

'வெண்தளை தன்தளை விரவி வருவது
பிரிந்திசைத் துளலெனப் பேசப் படுமே.' 46

'இவ்விரு தளையும் பிறவும் மயங்கித்
தொடருவ தகவல் துள்ளலா மெனலே.' 47

27

## கலிப்பா வகை

**737. ஒத்தா ழிசைக்கலி வெண்கலிப் பாவே**
**கொச்சகக் கலியொடு கலிமூன் ருகும்.**

**இது மேல் பொதுவகையால் கூறிய கலிப்பா வகை இத்துணைத்து என்கின்றது.**

**இ-ள்: ஒத்தாழிசைக் கலியும் வெண்கலியும் கொச்சகக் கலியும் என முற்கூறிய கலிப்பா மூன்று வகைப்படும் என்றவாறு.** 28

ஒத்த நூற்பாக்கள்

*முழுதும் - யா. வி. 79*

நற்றத்தம்

'வெண்கலி ஒத்தா ழிசைக்கலி கொச்சகம்
என்றொரு மூன்றே கலிஎன மொழிப.' — காக்கை

'கொச்சகம் வெண்கலி ஒத்தா ழிசைஎன
முத்திற மாகும் கலியின் பகுதி.' — சங்கயாப்பு

'ஒத்தா ழிசைக்கலி வெண்கலிகொச் சகமென
முத்திறத் தான்வரும் கலிப்பா என்ப.' — அவிநயம்

'ஒத்தா ழிசைக்கலி வெண்கலி கொச்சகம்
முத்திறத் தடங்கும் எல்லாக் கலியும்.' — மயேச்சுரம்

'ஒத்தா ழிசைக்கலி கலிவெண் பாட்டே
கொச்சகம் உறழொடு கலிநால் வகைத்தே.'—தொ.பொ. 442

'நேரிசை அம்போ தரங்கம் வண்ணகமென்று
ஒதிய மூன்றே ஒத்தா ழிசைக்கலி.' – யா. வி. 82

'வெண்கலி ஒன்றே கொச்சகம் ஐந்தெனப்
பண்பறி புலவர் பகுத்துரைத் தனரே.' 83

'கலிஒலி துள்ளல் கலித்தளை பிறவும்
வெண்சீர் பிறவும் விரவிய அளவடி
தன்னான் நடக்கும் தன்மைத் தாகி,
ஒத்தாழிசை மூன்று, ஓரைங் கொச்சகம்,
வெண்கலி, கலிவெண்பா, விகற்பம் ஈரைந்தே.'
– தொ. வி. 237

28

## கலிப்பா வகையின் இலக்கணம்

738. தரவுஒன் றாகித் தாழிசை மூன்றாய்த்
தனிச்சொல் இடைநடந்து சுரிதகம் தழுவி
நிகழ்வது நேரிசை ஒத்தா ழிசையும்,
ஆங்கதன் இடையே அளவடி சிந்தடி
பாங்கமை குறளடி படுநீர்த் திரைபோல்
ஓய்ந்துஓய்ந்து உற்றிடு மாயின் அன்ன
அம்போ தரங்க ஒத்தா ழிசையும்,
அசையடி மிசைத்தாய் அராகம் அவற்றொடும்
இசைவுறின் வண்ணக ஒத்தா ழிசையும்,
வேற்றுத்தளை தட்டும் வெண்பா இயைந்தும்
ஈற்றடி முச்சீ ராயிறின் முறையே
வெண்கலிப் பாவும், கலிவெண் பாவும்,
தரவே தரவிணை தாழிசை சிலபல
மரபான் இயன்றவும் மயங்கிவந் தனவும்
அவ்வப் பெயரான் அமைந்தகொச் சகமும்,
ஆகும் என்ப அறிந்திசி னோரே.

இது மேற்கூறிய கலிப்பாக்கள் ஆமாறு கூறுகின்றது.

இ–ள் : முன் ஒரு தரவு வந்து அதன் பின்பு மூன்று தாழிசை வந்து அவற்றின் பின்னர்த் தனிச்சொல் வந்து அதன் பின்னர்ச் சுரிதகஉறுப்பு வந்து நடப்பது நேரிசை ஒத்தாழிசைக் கலிப்பாவாம் என்றும்,

நேரிசை ஒத்தாழிசைக் கலிப்பாவினுள் தாழிசைக்கும் தனிச்சொற்கும் இடையே நாற்சீரடியும் முச்சீரடியும் முறையான் அமைந்த இருசீரடியும் ஆகிய அசையடிகள் தோன்றிய நீர்த்தரங்கம் கரைசாரக் கரைசார ஒரு காலக்கு ஒருகால் சுருங்கி வருமாறு போலக் குறைந்து வருமாயின் அத்தன்மையது அம்போதரங்க ஒத்தாழிசைக் கலிப்பாவாம் என்றும்,

அவ்வம்போதரங்க உறுப்பிற்கு மேல் இடத்தாய்த் தரவு தாழிசை தனிச்சொல் சுரிதகம் என்னும் நான்கு உறுப்போடும் கூட அராக உறுப்பு வந்து இயையுமாயின் அது வண்ணக ஒத்தாழிசைக் கலிப்பாவாம் என்றும்,

வேற்றுத்தளை தட்டு வேற்று ஓசை தழுவியும் வெண்டளை தட்டு வெள்ளோசை தழுவியும் ஈற்றடி முச்சீரான் முடியுமாயின் முறையே வெண்கலிப்பாவாம் என்றும், கலிவெண்பாவாம் என்றும்,

[வெண்கலிப்பா பிறதளையும் விரவி வரும்; கலிவெண்பா வெண்தளையே தட்டுவரும்]

ஒரு தரவே வந்தும் தரவு இரண்டு இணைந்து வந்தும் சில தாழிசை வந்தும் பல தாழிசை வந்தும் முறையானே நிகழ்வனவும், தரவு தாழிசை அராகம் அம்போதரங்கம் தனிச்சொல் சுரிதகம் என்னும் ஆறு உறுப்பும் தம்முள் மயங்கியும் வெண்பாவினோடும் ஆசிரியத்தினோடும் மயங்கியும் வந்தனவும், முறையே,

தரவு கொச்சகம், தரவுஇணைக் கொச்சகம், சிஃறாழிசைக் கொச்சகம், பஃறாழிசைக் கொச்சகம், மயங்கிசைக் கொச்சகம் என்னும் பெயர்களான் அமைதி பெற்ற கொச்சகக் கலிப்பாவாம் என்றும் கூறுவர் அறிந்தோர் என்றவாறு.

'பாங்கமை குறளடி' என்ற மிகையானே அசையடி தான் (அம்போதரங்கம்) அளவடி ஈரடியான் இரண்டும் ஓரடியான் நான்கும் முச்சீரான் எட்டும் இருசீரான் பதினாறுமாய் வருவது சிறப்புடைத்து எனவும், இவை நான்கும் எட்டுமாய்ச் சுருங்கி வரவும் பெறும் எனவும், அங்ஙனம் வருதல் சிறப்பின்று எனவும் வேற்றுத்தளை தட்டு வேற்றோசை தழுவி வருவது வெண்கலிப்பா எனவே தன் தளைதட்டுத் தன்னோசை தழுவி வருவது கலிவெண்பா என்பது தானே போதரும் எனவும், மரபு என்ற மிகையானே தனிச்சொல்லும் சுரிதகமும் ஒருசார் கொச்சகத்து இடைஇடை வரப்பெறும் எனவும் கொள்க.

அசையடி எனினும் அம்போதரங்கம் எனினும் ஒக்கும். வெண்தளை தட்டு வெள்ளோசை தழுவிவரும் கலிவெண்பாப் பன்னீரடியின் மிக்கே வரும் எனக் கொள்க.

வெள்ளைச் சுரிதகத்தால் இற்ற நேரிசை ஒத்தாழிசைக் கலிப்பாவிற்குச் செய்யுள் :

'முத்தொடு மணிதயங்கு முக்குடைக்கீழ் முனைவனே!
எத்திசையும் பல்லுயிர்கள் இன்புற இனிதிருந்து,
பத்துறு திசைஅனைத்தும் பகைபசி பிணிநீங்க,
உத்தமர்கள் தொழுதேத்த, ஒளிர்வரைபோல் செலவினை!'

[இது தரவு]

'எள்ளனைத்தும் இடரின்றி எழில்மாண்ட பொன்னெயில்
உள்ளிருந்த உன்னையே உறுதுணையென் றடைந்தோரை,
வெள்ளில்சேர் வியன்காட்டுள் உறைகென்றல் விழுமிதோ?'

'குணங்களின் வரம்பிகந்து கூடிய பன்னிரண்டு
கணங்களும்வந் தடியேத்தக் காதலித்துன் னடைந்தோரை,
பிணம்பிறங்கு பெருங்காட்டு ளுறைகென்றல் பெருமையோ?'

'விடத்தகைய வினைநீக்கி வெள்வளைக்கைச் செந்துவர்வாய்
மடத்தகைய மயிலனையார் வணங்கநின் னடைந்தோரை,
தடத்தகைய காடுறைக என்பதுநின் தகுதியோ?'

[*இவை மூன்றும் தாழிசை*]

என ஆங்கு [*தனிச்சொல்*]

'எனைத்துணையை ஆயினும் ஆக,மற்று உன்கண்
தினைத்துணையும் தீயவை இன்மையின், சேர்தும்;
வினைத்தொகையை வீட்டுக என்று' [*இது சுரிதகம்*]

– *யா. கா.* 31 *மே.*

என வரும்.

ஆசிரியச்சுரிதகத்தால் இற்ற நேரிசை ஒத்தாழிசைக் கலிப்பாவிற்குச் செய்யுள்:

'வாள்நெடுங்கண் பனிகூர, வண்ணம்வே றுய்த்திரிந்து,
தோள்நெடுந் தகைதுறந்து, துன்பங்கூர் பசப்பினவாய்ப்
பூண்ஒடுங்கு முலைகண்டும், பொருட்பிரிதல் வலிப்பவோ?'

[*இது தரவு*]

'சூருடைய கடுங்கடங்கள் சொலற்கரிய என்பவால்,
பீருடைய நலந்தொலையப் பிரிவாரோ? பெரியவரே!'

'சேணுடைய கடுங்கடங்கள் செலற்கரிய என்பவரால்
நாணுடைய நலந்தொலைய நடப்பாரோ? நலமிலரே!'

'சிவம்படைந்த வெங்கானம் சீரிலவே என்பவால்;
புலம்படைந்து நலந்தொலையப் போவாரே? பொருளிலரே!'

[*இவை மூன்றும் தாழிசை*]

என ஆங்கு [தனிச்சொல்]

'அருள்எனும் இலராய்ப் பொருள்வயின் பிரிவோர்,
பன்னெடுங் காலமும் வாழியர்!
பொன்னெடுந் தேரோடு தானையின் பொலிந்தே,'

[இது சுரிதகம்]

– யா. கா. 31 மே.

என வரும்.

எட்டும் பதினாறும் குறையாது வந்த அம்போதரங்க ஒத்தாழிசைக் கலிப்பாவிற்குச் செய்யுள் வந்துழிக்காண்க.

–[தொ. பொ. 458 பே. யா. வி. 83 உரை நோக்குக]

எட்டும் பதினாறும் குறைந்து நான்கும் எட்டுமாய் வந்த அம்போதரங்க ஒத்தாழிசைக் கலிப்பாவிற்குச் செய்யுள் :

'கெடலரு மாமுனிவர் கிளர்ந்துடன் தொழுதேத்த,
கடல்கெழு கனைசுடரின் கலந்தொளிரும் வாலுளைய
அழலவிர் சுழல்செங்கண் அரிமாவாய், மலைந்தானை,
தாரொடு முடிபிதிரத் தமனியப் பொடிபொங்க,
ஆர்புனல் இழிகுருதி அகலிடம் உடன்நனைப்ப,
கூர்உகிரான் மார்பிடந்த கொலைமலி தடக்கையோய்!'

[இது தரவு]

'முரசதிர் வியன்மதுரை முழுவதூஉம் தலைபனிப்பப்
புரைதொடித் திரள்திண்தோள் போர்மலைந்த மறமல்லர்
அடியொடு முடிஇறுப்புண் டயர்ந்தவர் நிலம்சேரப்
பொடிஎழ வெங்களத்துப் புடைத்ததுநின் புகழாமோ?'

'கலிஒலி வியன்உலகம் கலந்துடன் நனிநடுங்க,
வலிஇயல் அவிர்ஆழி மாறெதிர்ந்த மருட்சோர்வும்
மாணுதார் உடம்போடு மறம்பிதிர எதிர்கலக்கிச்
சேணுயர் இருவிசும்பில் சேர்த்ததுநின் சினமாமோ?'

'படுமணி யினநிரைகள் பரந்துடன் இரிந்தோடக்
கடுமுரண் எதிர்மலைந்த காரொலி எழிலேறு

வெரிநொடு மருப்பொசிய வீழ்ந்துநிறம் வேருக
எருமலி பெருந்தொழுவின் இறுத்ததுநின் இகலாமோ ?'

[ இவை மூன்றும் தாழிசை ]

'இலங்கொளி மரகதம் எழில்மிகு வியன்கடல்,
வலம்புரித் தடக்கையின் மாஅல் ! நின்நிறம் ;'

'விரிஇணர்க் கோங்கமும் வெந்தெரி பசும்பொனும்,
பொருகளிறு அட்டோய் ! புரையும் நின்உடை ;'

இவை நாற்சீர்அடி இரண்டு அம்போதரங்கம்.

[ பேரெண் ]

'கண்கவர் கதிர்முடி கனலும் சென்னியை ;
தண்சுடர் உறுபகை தவிர்த்த ஆழியை ;
ஒலிஇயல் உவணம் ஓங்கிய கொடியினை ;
வலிமிகு சகடம் மாற்றிய அடியினை ;

இவை நாற்சீர் ஓர்அடி நான்கு அம்போதரங்கம்.

[ அளவெண் ]

'போர்அவுணர்க் கடந்தோய் நீஇ ;
புணர்மருதம் பிளந்தோய் நீஇ ;
நீரகலம் அளந்தோய் நீஇ ;
நிழல்திகழும் படையோய் நீஇ ;'

இவை முச்சீர் ஓரடி நான்கு அம்போதரங்கம்.

[ இடை எண் ]

'ஊழி நீஇ ; உலகு நீஇ ;
உருவு நீஇ ; அருவு நீஇ ;
ஆழி நீஇ ; அருளும் நீஇ ;
அறமும் நீஇ ; மறமும் நீஇ ;'

இவை இருசீர் ஓர்அடி எட்டு அம்போதரங்கம்.

[ சிற்றெண் ]

என ஆங்கு [ தனிச்சொல் ]

'அடுதிறல் ஒருவ!நிற் பரவுதும்; எங்கோன்
தொடுகழல் கொடும்பூண் பகட்டெழில் மார்பின்
கயலொடு கலந்த சிலையுடைக் கொடுவரிப்
புயல்உறழ் தடக்கைப் போர்வேல் அச்சுதன்
தொன்று முதிர்கடல் உலகம்
ஒன்றுபுரி திகிரி உருட்டுவோன் எனவே.' -யா.கா. 31 மே.

[இது சுரிதகம்]

என வரும்.

ஆறு உறுப்பும் குறையாது வந்த வண்ணக ஒத்தாழிசைக் கலிப்பாவிற்குச் செய்யுள் :

'விளங்குமணிப் பசும்பொன்னின் விரித்தமைத்துக் கதிர்கான்று
துளங்குமணிக் கனைகழற்கால் துறுமலர் நறும்பைந்தார்ப்
பருஉத்தடக்கை மதயானைப் பணைஎருத்தின் மிசைத்தோன்றும்
குருஉக்கொண்ட மணிப்பூணோய்! குறைஇரந்த முன்னாள்கண்
மாயாத வனப்பினையாய் மகிழ்வார்க்கும் அல்லார்க்கும்
தாயாகித் தலைஅளிக்கும் தண்துறை ஊர! கேள்!

[இது தரவு]

காட்சியால் கலப்பெய்தி எத்திறத்தும் கதிர்ப்பாகி
மாட்சியால் திரியாத மரபொத்தாய்; கரவினால்
பிணிநலம் பெரிதெய்திப் பெருந்தடந்தோள் வனப்பழிய
அணிநலம் தனியேவந்து அருளுவதும் அருளாமோ'

'அன்பினால் அமிழ்தளைஇ அறிவினால் பிறிதின்றிப்
பொன்புனை பூணகம் பசப்பெய்தப் பொழிலிடத்துப்
பெருவரைத்தோள் அருளுதற் கிருளிடைத் தமியையாய்க்
கருவரைத்தோள் கதிர்ப்பிக்கும் காதலும் காதலோ?'

'பாங்கனையே வாயிலாப் பலகாலும் வந்தொழுகும்
தேங்காத கரவினையும் தெரியாத இருளிடைக்கண்
குடவரைவேய்த் தோளிணைகள் குளிர்ப்பிப்பான் தமியையாய்த்
தடமலர்த்தாள் அருளும்நின் தகுதியும் தகுதியோ?'

[இவை மூன்றும் தாழிசை]

'தாதுறு முறிசெறி தடமலர் இடைஇடை
தழலென விரிவன பொழில்;'
'போதுறு நறுவிரை புதுமலர் தெரிதரு
கருநெய்தல் விரிவனகழி;'
'தீதுறு திறமறு கெனநனி முனிவன
துணையொடு பிணைவனதுறை;'
'மூதுறும் ஒலிகலி நுரைதரு திரையொடு
கழிதொடர் புடையதுகடல்;'

[இவை நான்கும் அராகம்]

'கொடுந்திறல் உடையன சுறவேறு கொட்பதனால்
இருங்கழி இரவருதல் வேண்டாஎன்று இசைத்திலமோ?'
'கருநிறத் தடுதொழில் கராம்பெரி துடைமையால்
இருள்நிறத் தொருகானல் இராவாரல் என்றிலமோ?'

*இவை நாற்சீர் ஈரடி இரண்டு அம்போதரங்கம்.*

'நாளொடு கழிந்தன்றால் பெண்ணரசி நலத்தகையே;
துஞ்சலும் ஒழிந்தன்றால் தொடித்தோளி தடங்கண்ணே;
அரற்றொடு கழிந்தன்றால் ஆரிருளும் ஆயிழைக்கே;
நயப்பொடு கழிந்தன்றால்; நனவதுவும் நன்னுதற்கே.'

*இவை நாற்சீர் ஓரடி நான்கு அம்போதரங்கம்.*

'அத்திறத்தால் அசைந்தன தோள்;
அலர்தற்கு மெலிந்தன கண்;
பொய்த்துரையால் புலர்ந்தது முகம்;
பொன்நிறத்தால் போர்த்தன முலை;
அழலினால் அசைந்தது நகை;
அணியினால் ஒசிந்தது இடை;
குழலினால் அவிர்ந்தது முடி;
குறையினால் கோடிற்று நிறை;

*இவை முச்சீர் ஓரடி எட்டு அம்போதரங்கம்.*

'உட்கொண்ட தகைத்தொருபால்;
உலகறிந்த வலத்தொருபால்;
கட்கொண்டல் துளித்தொருபால்;

கழிவெய்தும் படித்தொருபால்;
பரிவுறூஉம் தகைத்தொருபால்;
படர்வுறூஉம் பசப்பொருபால்;
இரவுறூஉம் துயரொருபால்;
இளிவந்த எழிற்றொருபால்;
மெலிவுறூஉந் தகைத்தொருபால்;
விளர்ப்புவந் தடைந்தொருபால்;
பொலிவுசென் றகன்றொருபால்;
பொறைவந்து கூர்ந்தொருபால்;
காதலிற் கதிர்ப்பொருபால்;
கட்படாத் துயரொருபால்;
ஏதில்சென் றணைந்தொருபால்;
இயல்நாணின் செறிவொருபால்;

இவை இருசீர் ஓரடிப் பதினாறு அம்போதரங்கம்.

என ஆங்கு [தனிச்சொல்]

'இன்னதிவ் வழக்கம், இத்திறம் இவள்நலம்,
என்னவும், முன்னாள் துன்னா யாகிக்
கலந்த வண்மையை ஆயினும், நலந்தகக்
கிளையொடு கெழீஇத் தளைஅவிழ் கோதையைக்
கற்பொடு காணிய யாமே,
பொற்பொடு பொலிக!நும் புணர்ச்சி தானே'

– யா. கா. 32 மே.

[இது சுரிதகம்]

என வரும்.

வேற்றுத்தளை தட்டிவந்த வெண்கலிப்பாவிற்குச் செய்யுள் :

'ஏர்மலர் நறுங்கோதை எருத்தலைப்ப இறைஞ்சித்தண்
வார்மலர்த் தடங்கண்ணார் வலைப்பட்டு, வருந்தியஎன்
தார்வரை மகன்மார்பன் தனிமையை அறியுங்கொல்?
சீர்மலி கொடியிடை சிறந்து' – யா. கா. 32 மே.

எனவும்,

கலித்தளை தட்டுவந்த வெண்கலிப்பாவிற்குச் செய்யுள் :

'வாளார்ந்த மழைத்தடங்கண் வனமுலைமேல் வம்பனுங்க,
கோளார்ந்த பூணுகம் குழைபுரள கோட்டெருத்தின்
மாலைதாழ் கூந்தலார் வரன்முறையான் வந்தேத்த,
சோலைதாழ் பிண்டிக்கீழ்ச் சூழ்ந்தவர்தம் சொல்முறையான்,
மனையறமும் துறவறமும் மண்ணவர்க்கும் விண்ணவர்க்கும்
வினையறுக்கும் வகைதெரிந்து, வீடொடுகட் டிவையுரைத்த,
தொன்மைசால் மிகுகுணத்தெம் துறவரசைத் தொழுதேத்த
நன்மைசால் வீடெய்து மாறு' – யா. கா. 32 மே.

எனவும்,

வெண்தளை தட்டுவந்த கலிவெண்பாவிற்குச் செய்யுள் :

'சுடர்த்தொடீஇ! கேளாய்! தெருவில்நாம் ஆடும்
மணற்சிற்றில் காலில் சிதையா, அடைச்சிய
கோதை பரிந்து, வரிப்பந்து கொண்டோடி,
நோதக்க செய்யும் சிறுபட்டி, மேலோர்நாள்,
அன்னையும் யானும் இருந்தேமா, இல்லிரே!
உண்ணுநீர் வேட்டேன் எனவந்தாற்கு, அன்னை,
சுடர்பொன் சிரகத்தால் வாக்கிச், சுடரிழாய்!
உண்ணுநீர் ஊட்டிவா என்றாள், எனயானும்
தன்னை அறியாது சென்றேன்,மற் றென்னை,
வளைமுன்கை பற்றி நலியத் தெருமந்திட்டு,
அன்னாய் இவனொருவன் செய்ததுகாண்! என்றேனா,
அன்னை அலறிப் படர்தர, தன்னையான்
உண்ணுநீர் விக்கினான் என்றேனா, அன்னையும்,
தன்னைப் புறம்பழித்து நீவ,மற் றென்னைக்
கடைக்கண்ணால் கொல்வான்போல் நோக்கி, நகைக்கூட்டம்
செய்தான்; அக் கள்வன் மகன்.' – யா. கா. 32 மே; கலி. 51

எனவும் வரும்.

தனிச்சொல் இன்றிக் கலி அடியானே இற்ற தரவு கொச்சகக் கலிப்பாவிற்கு செய்யுள் :

'செல்வப்போர்......ஒளித்ததே' எனவும் – பக்கம் 154

தனிச்சொல் பெற்றுச் சுரிதகத்தால் இற்ற தரவு கொச்சகக்கலிப்பாவிற்குச் செய்யுள் :

'குடநிலைத் தண்புறவில்......சென்ற வாறே' – பக்கம் 154
எனவும் வரும்.

இடையிடைத் தனிச்சொல் பெற்றுச் சுரிதகத்தால் இற்ற தரவிணைக் கொச்சகக்கலிப்பாவிற்குச் செய்யுள் :

'வடிவுடை நெடுமுடி வானவர்க்கும் வெலற்கரிய
கடிபடு நறும்பைந்தார்க் காவலர்க்கும் காவலனும்
கொடிபடு வரைமாடக் கூடலார் கோமானே!'

இது தரவு.

என ஆங்கு [ தனிச்சொல் ]

'துணைவளைத்தோள் இவள்மெலியத் தொன்னலம்
தொலைப்புண்டாங்கு
இணைமலர்த்தார் அருளுமேல், இதுஇதற்கோர் மாறென்று,
துணைமலர்த் தடங்கண்ணார் துணையாகக் கருதாரோ?'

இது தரவு.

அதனால், [ தனிச்சொல் ]

'செவ்வாய்ப் பேதை இவள்திறத்து
எவ்வா றுங்கொலிஃ தெண்ணிய வாறே.' – யா. கா. 33 மே.
[ இது சுரிதகம் ]

என வரும்.

இடையிடைத் தனிச்சொல் பெற்றுவந்த சிஃறு ழிசைக் கொச்சகக்கலிப்பாவிற்குச் செய்யுள் :

'பரூஉத்தடக்கை மதயானைப் பணைஎருத்தின் மிசைத்தோன்றிக்
குரூஉக்கொண்ட வெண்குடைக்கீழ்க் குடைமன்னர் புடைசூழப்
படைப்பரிமான் தேரினொடும் பரந்துலவு மறுகினிடைக்
கொடித்தானை இடைப்பொலிந்தான் கூடலார் கோமானே.'

இது தரவு.

ஆங்கு ஒரு சார் [தனிச்சொல்]

'உச்சியார்க் கிறைவனாய் உலகமெலாம் காத்தளிக்கும்
பச்சையார் மணிப்பைம்பூண் புரந்தரனைப் பாவித்தார்;
வச்சிரம் காணாத காரணத்தான் மயங்கினரே.'

ஆங்கு ஒருசார் [தனிச்சொல்]

'அக்காலம் அணிநிரைகாத்து அருவரையால் பனிதவிர்த்து
வக்கிரனை வடிவழித்த மாயவனைப் பாவித்தார்;
சக்கரம் காணாத காரணத்தால் சமழ்த்தனரே.'

ஆங்கு ஒருசார் [தனிச்சொல்]

'மால்கொண்ட பகைதவிர்ப்பான் மாத்தடிந்து மயங்காச்செங்
கோல்கொண்ட சேவலங் கொடியவனைப் பாவித்தார்;
வேல்கொண்டது இன்மையால் விம்மிதராய் நின்றனரே.'

இவை மூன்றும் தாழிசை.

அஃதான்று [தனிச்சொல்]

'கொடித்தேர்த் தோன்றல், கொற்கைக் கோமான்,
நின்றபுகழ் ஒருவன், செம்பூட் சேஎய்!
என்றுநனி அறிந்தனர் பலரே; தானும்
ஐவருள் ஒருவனென் றறிய லாகா
மைவரை யானை, மடங்கா வென்றி
மன்னவன், வாழி,என் றேத்தத்
தென்னவன் வாழி! திருவொடும் பொலிந்தே' –

[இது சுரிதகம்]
– யா. கா. 33 மே.

என வரும்.

தனிச்சொல் இன்றிவந்த பஃறாழிசைக் கொச்சகக் கலிப்பாவிற்குச் செய்யுள் :

'தண்மதிஏர் முகத்தாளைத் தனியிடத்து நனிகண்டாங்கு
உண்மதியும் உடைநிறமும் உடன்தளர முன்னாள்கண்

கண்மதிலோர்ப் பிவையின்றிக் காரிகையை நிறைகவர்ந்து,
பெண்மதியின் மகிழ்ந்தநின் பேரருளும் பிறிதாமோ?'
[இது தரவு]

'இளநலம் இவள்வாட இரும்பொருட்குப் பிரிவாயேல்
தளநல முகைவெண்பல் தாழ்குழல் தளர்வாளோ?'

'தகைநலம் இவள்வாடத் தரும்பொருட்குப் பிரிவாயேல்
வகைநலம் இவள்வாடி வருந்திஇல் இருப்பாளோ?'

'அணிநலம் இவள்வாட அரும்பொருட்குப் பிரிவாயேல்
மணிநல மகிழ்மேனி மாசோடு மடிவாளோ?'

'நாம்பிரியேம் இனிஎன்று நறுநுதலைப் பிரிவாயேல்
ஓம்பிரியோம் எனஉரைத்த உயர்மொழியும் பழுதாமோ'

'குன்றளித்த திரள்தோளாய்! கொய்புனத்தில் கூடியநாள்
அன்றளித்த அருள்மொழியால் அருளியதும் பழுதாமோ?'

'சில்பகலும் ஊடியக்கால் சிலம்பொலிச்சீ றடிபரவிப்
பல்பகலும் தலையளித்த பணிமொழியும் பழுதாமோ?'
[இவை ஆறும் தாழிசை]

என ஆங்கு [தனிச்சொல்]

'அரும்பெறல் அமிழ்தினும் தரும்பொருள் அதனினும்
பெரும்பெறல் அரிதிவள் வெறுக்கையும் அற்றே;

அதனால்,

விழுமியது அறிமதி வாழி
கெழுமிய காதலின் தரும்பொருள் சிறிதே.' – யா. கா. 33 மே.
[இது சுரிதகம்]

கலிக்கு ஓதப்பட்ட ஆறு உறுப்பும் மிக்கும் குறைந்தும் பிறழ்ந்தும் வந்து மயங்கிய மயங்கிசைக் கொச்சகக்கலிப்பாவிற்குச் செய்யுள் :

'அணிகிளர் மணிமுடி மாயவனும் தம்முனும்போல்
தணிகிளர் நெடுங்கடலும் கானலும் தோன்றுமால்;
நுரைநிவந் தவையன்ன நொய்ப்பறைய சிறைஅன்னம்
இரைநயந் திறைகூரும் ஏமஞ்சால் துறைவ! கேள்,'

'மலையென மழையென மஞ்செனத் திரைபொங்கிக்
கனலெனக் காற்றெனக் கடிதுவந் திசைப்பினும்,
விழுமியோர் வெகுளிபோல், வேலாழி இறக்கலாது
எழுமுந்நீர் பரந்தொழுகும் ஏமஞ்சால் துறைவ! கேள்.'

[ *இவை இரண்டும் தரவு* ]

'கொடிபுரையும் நுழைநுசுப்பின் குழைக்கமர்ந்த திருமுகத்தோள்
தொடிநெகிழ்ந்த தோள்கண்டும் துறவலனே என்றியால்;'

'கண்கவரும் மணிப்பைம்பூண் கயில்கவைஇய திருமுகத்தோள்
தெண்பனிநீர் உகக்கண்டும் தெரியலனே என்றியால்;'

'நீர்பூத்த நிரைஇதழ்க்கண் நின்றெசிந்த புருவத்தோள்
பீர்பூத்த நுதல்கண்டும் பிரியலனே என்றியால்;'

'கனைவரல்யாற் றிகுகரைபோல் கைந்நில்லா துள்நெகிழ்ந்து
நினையுமென் நிலைகண்டும் நீங்கலனே என்றியால்;'

'வீழ்சுடரின் நெய்யேபோல் விழுமநோய் பொறுக்கல்லாது
ஆழும்என் நிலைகண்டும் அகல்கிலனே என்றியால்;'

'கலங்கவிழ்ந்த நாய்கன்போல் களைதுணை பிறிதின்றிப்
புலம்பும்என் நிலைகண்டும் போகலனே என்றியால்.'

[ *இவை ஆறும் தாழிசை* ]

அதனுல் [ *தனிச்சொல்* ]

'அடும்பமல் இறும்பின் நெடும்பனை மிசைதொறும்
கொடும்புற மடலிடை ஒடுங்கின குருகு;'

'செறிதரு செருவிடை எறிதொழில் இளையவர்
நெறிதரு புரவியின் மறிதரும் திமில்;'

'அரசுடை நிரைஅடை விரைசெறி முரைசென
நுரைவரு திரையொடு கரைபொருங் கடல்;'

'அலங்கொளி அவிர்சுடர் இலங்கெழில் மலர்தொறும்
கலந்தெறி காலொடு புலம்பின பொழில்;'

[ *இவை நான்கும் அராகம்* ]

'விடாஅது கழலும்என் வெள்வளையும் தவிர்ப்பாய்மன்;
கெடாஅது பெருகும்என் கேண்மையும் நிறுப்பாயோ?'
'ஒல்லாது கழலும்எண் ஒளிவளையும் செறிப்பாய்மன்;
நில்லாது பெருகும்என் நெஞ்சமும் நிறுப்பாயோ?'

'தாங்காது கழலும்என் தகைவளையும் தவிர்ப்பாய்மன்;
நீங்காது பெருகும்என் நெஞ்சமும் நிறுப்பாயோ?'

'மறவாத அன்பினேன் மனன்நிற்கு மாறுரையாய்;
துறவாத தமருடையேன் துயர்தீரு மாறுரையாய்;'

'காதலார் மார்பன்றிக் காமக்கு மருந்துரையாய்;
ஏதிலார் தலைசாய யான்உய்யு மாறுரையாய்;'

'இணைபிரிந்தார் மார்பன்றி இன்பக்கு மருந்துரையாய்;
துணைபிரிந்த தமருடையேன் துயர்தீரு மாறுரையாய்;'

[*இவை ஆறும் தாழிசை*]

என ஆங்கு [*தனிச்சொல்*]

பகைபோன்றது துறை;
பரிவாயின குறி;
நகைஇழந்தது முகம்;
நனிநாணிற்று உளம்;
தகைஇழந்தன தோள்;
தலைசிறந்தது துயர்;
புகைபரந்தது மெய்;
பொடியாயிற்றென் உயிர்;

இவை இருசீர் ஓர்அடி எட்டு அம்போதரங்கம்.

அதனால் [*தனிச்சொல்*]

'இனையது நிலையால், அனையது பொழுதால்,
நினையல், வாழி, தோழி, துனைவரல்
பனியொடு கழிக உண்கண்;
என்னொடு கழிக இத் துன்னிய நோயே.'

[*இது சுரிதகம்*]

என வரும்.

சுரிதகம் இடைஇடை வந்த கொச்சகச் செய்யுளும், வெண்பாவினோடும் ஆசிரியத்தினோடும் மயங்கி வந்த மயங்கிசைக் கொச்சகச் செய்யுளும் வந்துழிக் காண்க. (கலித்தொகை 39) (29)

விளக்கம்

நேரிசை ஒத்தாழிசைக் கலிப்பாவிற்குச் செய்யுள் :

'கொன்செய்த கலைஅங்குல் கொலைசெய்த மதர்வேற்கண்
மின்செய்த சிறுமருங்குல் பெருந்தேவி விழிகுளிர்ப்பப்
பொன்செய்த மணிமன்றில் நடம்செய்த புகழோய்!கேள்.'

[இது மூவடித் தரவு]

'முருகுயிர்க்கும் நறுந்தெரியல் மொய்குழலின் மையுண்கண்
பொருகயற்குன் திருமேனி புதுவெள்ளப் புணரியே.'

'தேன்மறிக்கும் வெறித்தொங்கல் அறற்கூந்தல் திருந்திழைகண்
மான்மறிக்குன் திருமேனி மலர்முல்லைப் புறவமே.'

'பிறையவிர்க்கும் சிறுநுதலப் பெண்ணமுதின் பேரமர்க்கண்
சிறைஅளிக்குன் திருமேனி தேனவிக்கும் பொதும்பரே.'

[இவை மூன்றும் தாழிசை]

அதனால் [தனிச்சொல்]

'மதுவிரி கோதை மடவரற் கம்ம
புதுவிருந் துண்ணா உண்ண
அதிசயம் விளைக்குநின் அற்புதக் கூத்தே.'

[இது மூவடி நேரிசை ஆசிரியச் சுரிதகம்]

– சி. செ. கோ. 51

அம்போதரங்க ஒத்தாழிசைக் கலிப்பாவிற்குச் செய்யுள் :

'பேதைமீர்! பேதைமீர்!
பூமன்னு திசைமுகனும் புயல்வண்ணப் பண்ணவனும்
காமன்னு புரந்தரனும் கடவுளரும் புடைநெருங்க
இருகோட்டுக் கிடைந்த இடுகிடையவர்பல் லாண்டிசைப்ப
ஒருகோட்டு மழகளிறும் இளங்கோவும் உடன்போத
அம்பொன்மணி மதிற்றில்லை நடராசன் அணிமறுகில்
செம்பொன்மணிப் பொலந்திண்டேர்த் திருவுலாப் போதுங்கால்'

[இஃது ஆறடித் தரவு]

'பாரித்த பேரண்டம் சிறுபண்டி கொளப்பெய்து
வாரித்தண் புனல்துஞ்சும் மாலுக்கு மால்செய்வீர்!
வேரித்தண் குழலார்கை வளைகொள்ள விழைந்தேயோ?
பூரித்து வீங்குவநும் புயமென்பார் சிலமாதர்.'

'சொன்மாலை தொடுத்தணிந்த தொண்டர்க்குத் துணைவராய்
நன்மாலைக் குழலியர்பால் நள்ளிருளில் செலவல்லீர்!
பன்மாதர் உயிர்கொள்ளல் பழியன்றே? பகைகொள்ளும்
வில்மாரன் உயிர்கொண்ட விழிக்கென்பார் சிலமாதர்.'

'அங்கமலன் முடைத்தலையே பலிக்கலனு ஐயமிடும்
மங்கையர்கள் நலங்கவர்வான் பலிக்குழலும் மாதவத்தீர்!
தங்கலர்தங் கியமும்மைப் புரமன்றே, தலையன்பின்
நங்கையர்தம் புரமுமது நகைக்கென்பார் சிலமாதர்.'
[ இவை மூன்றும் நான்கடித்தாழிசை ]

'அருங்கலை கவர்ந்துநீர் அளிக்கப் பெற்றநும்
இருங்கலை இனிதெமக் கென்பர் ஓர்சிலர்.'

'நன்னிறம் கவர்ந்துநீர் நல்கப் பெற்றநும்
பொன்னிறம் இனிதெனப் புகல்வர் ஓர்சிலர்.'

இவை இரண்டும் நாற்சீர் ஈரடி அம்போதரங்கம் [ பேரெண் ]

'தேரினை நோக்கியே திரிவர் சிற்சிலர்;
ஏரினை நோக்கியே எழுவர் சிற்சிலர்;
தாரினை நோக்கியே தளர்வர் சிற்சிலர்;
மாரினை நோக்கியே மருள்வர் சிற்சிலர்.'

இவை நான்கும் நாற்சீர் ஓர்அடி அம்போதரங்கம் [ அளவெண் ]

'நலனழிந்து நிற்பார் சிலர்;
நாண்துறந்து நிற்பார் சிலர்;
கலனழிந்து நிற்பார் சிலர்;
கண்கலுழ்ந்து நிற்பார் சிலர்;' [ இடை எண் ]

இவை முச்சீர் ஓரடி அம்போதரங்கள் 4.

'பாடுவார் சிலர்; ஆடுவார் சிலர்;
பரவுவார் சிலர்; விரவுவார் சிலர்;
வாடுவார் சிலர்; ஓடுவார் சிலர்;
மகிழுவர் சிலர்; புகழுவார் சிலர்;'

–இவை இருசீரடி அம்போதரங்கம் 8.

ஆங்கொருசார் [தனிச்சொல்]

'முதிரா இளமுலை மழலையந் தீஞ்சொல்
மங்கை மற்றிவள் நங்குலக் கொழுந்து
கணங்குழை யவரொடும் வணங்கினள் நிற்பச்
சோர்ந்தது மேகலை; நெகிழ்ந்தன தோள்வளை;
சாந்தமும் கரிந்தது; தரளமும் தீந்தன;
இவ்வா றுயினள் இவளே; செல்விதின்
ஆம்பல் பூவின் முல்லையும் முகைத்தில;
இளையோள் சாலவும் அம்ம;
முதியோள் போலும் காம நோய்க்கே.' [இது சுரிதகம்]

– சி. செ. கோ. 58

வண்ணக ஒத்தாழிசைக் கலிப்பாவிற்குச் செய்யுள் :
'தொல்லுலகம் படுசுடிகைச் சுடருமணி விளக்கேந்தும்
பல்பொறிய படஅரவும் அடுபுலியும் பணிசெய்ய,
அந்தரதுந் துபிமுழங்க, அமரர்மலர் மழைசிந்த,
இந்திரனும் மலரவனும் கரியவனும் ஏத்தெடுப்ப,
சூடகத் தளிர்ச்செங்கைத் துணைவிதுணைக் கண்களிப்ப,
ஆடகத் திருமன்றத் தனவரதம் நடஞ்செய்வோய்!

[தரவு]

'முன்மலையும் கொலைமடங்கல் ஈருரியும் மும்மதத்த
வன்மலையும் கடமலையின் முடையுடலின் வன்தோலும்
பொன்மலையின் வெண்முகிலும் கருமுகிலும் போர்த்தென்ன,
வின்மலையும் புயமலையின் புறமலைய விசித்தனையே.'

'கடநாக மெட்டும்,விடம் கால்நாகம் ஓரெட்டும்,
தடநாகம் அவைஎட்டும், தரித்துளபூந் துகிலொன்றும்,
உடனுக அடல்புரியும் கொடுவரியின் உடுப்பொன்றும்,
அடல்நாக அரவல்குற் கணிகலையா அசைத்தனையே.'

'வருநீலப் புயல்மலர மலர்இதழிக் கண்ணியையும்,
அருநீல முயற்களங்கம் அகன்றமதிக் கண்ணியையும்,
கருநீலக் கண்ணிஉமை செங்கைவரு கங்கையெனும்
திருநீலக் கண்ணியையும், செஞ்சடைமேல் செறித்தனையே.'
[தாழிசை 3]

'கறைவிட முகவெரி கனல்விழி யொடுமிளிர்
பிறையெயி றொடுமிடல் பெறுபக டொடுமடல்
எறுழ்வலி யொடுமுரு மிடியென வருமொரு
மறலிய துயிர்கொள மலர்தரு கழலினை.'

'உலகமொ டுயிர்களு முலைதர வலம்வரும்
மலர்மகள் கொழுநனும் மகபதி முதலிய
புலவரும் அடிகளொர் புகலென முறையிட
அலைகடல் விடமுனம் அமுதுசெய் தருளினை.'

'விசையிலெம் இறைவியும் வெருவர இரசத
அசலம தசைதர அடல்புரி தசமுக
நிசிசரன் மணிமுடி நெறுநெறு நெறுவென
வசையில்பொன் மலரடி மணிவிரல் நிறுவினை.'

'இலவிதழ் மதிநுதல் இரதியொ டிரதம
துலைவற நடவிடு மொருவனும் வெருவர
அலைகட லொடுமுர சதிர்தர எதிர்தரு
சிலைமத னனையடல் செயுநுதல் விழியினை.' [அராகம் 4]

'அருவமும் உருவமும் ஆகிநின்று மவ்
வருவமும் உருவமும் அகன்று நின்றனை;'

'சொல்லொடு பொருளுமாய்த் தோன்றி நின்றுமச்
சொல்லையும் பொருளையும் துறந்து நின்றனை;'
[ஈரடி அம்போதரங்கம் 2]

'அந்நலம் விழைந்தவர்க்கு அறமும் ஆயினை ;
பொன்னலம் விழைந்தவர் பொருளும் ஆயினை ;
இன்னலம் விழைந்தவர்க் கின்பும் ஆயினை ;
மெய்ந்நலம் விழைந்தவர் வீடும் ஆயினை.'

– [ஓரடி அம்போதரங்கம் 4]

'முத்தொழிலின் வினைமுதல் நீ ;
மூவர்க்கும் முழுமுதல் நீ ;
எத்தொழிலும் இறந்தோய் நீ ;
இறவாத தொழிலினை நீ ;
இருவிசும்பின் மேயோய் நீ ;
எழில்மலரின் மிசையோய் நீ ;
அரவணையில் துயின்றோய் நீ ;
ஆலின்கீழ் அமர்ந்தோய் நீ ;'

– [முச்சீரடி அம்போதரங்கம் 8]

'பெரியை நீ ; சிறியை நீ ; பெண்ணும் நீ, ஆணும் நீ ;
அரியை நீ ; எளியை நீ ; அறமும் நீ ; மறமும் நீ ;
விண்ணும் நீ ; மண்ணும் நீ ; வித்தும் நீ ; விளைவும் நீ ;
பண்ணும் நீ ; பயனும் நீ ; பகையும் நீ ; உறவும் நீ ;'

– [இருசீரடி அம்போதரங்கம் 16]

எனவாங்கு [தனிச்சொல்]

'கற்பனை கடந்தநின் பொற்கழல் இறைஞ்சுதும் ;
வெண்மதிக் கடவுள் மீமிசைத் தவழ்தரத்
தண்முகில் குழாங்கள் தாழ்வுறப் படிதலின்,
செங்கால் அன்னமும் வெண்மருப்பு ஏனமும்
கீழ்மேல் துருவ, ஆரழல் பிழம்பாய்
நின்றநின் தன்மையை உணர்த்தும்,
பொன்திகழ் புலியூர் மன்றுகிழ வோனே.' [சுரிதகம்]

– சி. செ. கோ. 59

வேற்றுத்தளை விரவிவந்த வெண்கலிப்பாவிற்குச் செய்யுள்.

'அற்புத மணிமன்றில் அடிகள்! நின் அடிஉன்னூர்
மைக்கடல் விடமென்னும், வடவைத்தீ எழஅஞ்சி,
நொ-என அடிவீழ்ந்தார்க் குதவிலர், நாணூர்கொல்,
கைத்தல அபயத்தர், வரதத்தர், கைசெய்யாச்
சித்திரம் அன்னர் சிலர்.' – சி. செ. கோ. 61

கலித்தளை தட்டுத் துள்ளல் ஓசைத்தாய் வந்த வெண்கலிப் பாவிற்குச் செய்யுள்:

'சேல்செய்த மதர்வேற்கண் சிலைசெய்த சுடிகைநுதல்
மால்செய்த குழற்கோதை மகிழ்செய்ய நடஞ்செய்யும்
தருணஇளம் பிறைக்கண்ணித் தாழ்சடைஎம் பெருமானின்
கருணைபொழி திருநோக்கின் கனியாத கல்நெஞ்சம்,
வாமஞ்சால் மணிக்கொங்கைக்கு ஓசிந்தொல்கு மருங்குலவர்
காமஞ்சால் கடைநோக்கின் கரைந்துருகா நிற்குமால்;
அவ்வண்ணம் மாறிநிற்பது அகமென்றால், அகம்அகம்விட்டு
எவ்வண்ணம் மாறிநிற்பது இன்று?' – 60

வெண்டளை தட்டு வந்த கலிவெண்பா :

'தொடலைக் குறுந்தொடித் தோகாய்! நம் பாவை
படலைச் சிறுமுச்சி உச்சிப் பசுங்கிள்ளை
பேதைக் குழாத்தொடு நென்னல் பொழுதின்கண்
வீதிக்கே நின்று விளையாட்டு அயருங்கால்,
அஞ்சனக் கண்ணாளும் தாமும், அணிதில்லைச்
செஞ்சடைக் கூத்தனார் வெள்விடைமேல் சேறலும்,
உள்நெக் குருக எதிர்ப்பட் டுடையானைக்
கண்ணில் பிணித்து, மனத்தில் கொடுபுக்கு,
இறைவளை சிந்த அணிதுகில் சோரப்
பிறர்அறியா வண்ணம் புணர்ந்தும் புணராள்போல்
மையுண்கண் ணீர்சோரச் சோர்தலும் வார்குழலார்
கைகோத் தெடுத்துக் கடிமனை கொண்டுய்ப்ப,

பைந்தண் குளிரி படுத்துக் கிடத்தலும்
செந்தீப் பிழம்பில் கிடத்திச் செருச்செய்வது
அந்தோ கொடிதுகொடிது என்செய்தீர்? அன்னைமீர்;
பொன்னஞ் சிலையே சிலையாப் புறமெய்தான்
தண்ணென் கடுக்கை கொணர்ந்தாரோ? தம்மினென,
மின்தந்த நுண்ணிடையாய்! எங்கோன் விரைத்தொங்கல்
தன்தந்தை தாளெறிந்தாற் கன்றித்தா ரானென்றேற்கு
அன்றே பகைநோக் களித்தாள்மற் றம்ம;
சிறியாள் பெரும்பித் தறிந்திருந்தும், செவ்வி
அறியா துரைத்தேன் அது.' – சி. செ. கோ. 62

[இது செப்பல் ஓசைத்தாய் 22 அடிகளை உடையதாய் ஒரு பொருள்நுதலி வந்த கலிவெண்பா.]

கலித்தளைதட்டுத் தனிச்சொல்லும் சுரிதகமும் பெறாது வந்த தரவு கொச்சகத்திற்குச் செய்யுள் :

'அடிகொண்ட குனிப்பன்றே; அரிபிரமர் முதலானோர்
முடிகொண்ட தலைவணக்கின் குனிப்பெல்லாம் முறைமுறைபோய்,
கடிகொண்ட பொழிற்றில்லை நடராசன் கழற்காலில்
குடிகொண்ட படிபோலும்; இடத்தாளில் குஞ்சிதமே.' – 63

தனிச் சொல்லும் சுரிதகமும் பெற்ற தரவு கொச்சகத்திற்குச் செய்யுள் :

'மல்லாண்ட திரள்திண்தோள் துழாய்முதலும், மணிநாவின்
சொல்லாண்ட மறைமுதலும், பலராங்குத் தொலைவெய்தப்
பல்லாண்டு செலச்செல்லா இளையோரும் பனிப்பெய்த,
அல்லாண்ட நள்ளிருளில் அழலாடும் தொழிலினையே.'

[தரவு]

அதனால் [தனிச்சொல்]

'பல்பே ரூழி செல்லினும் அடிகட்கு
ஒல்லையும் செல்லா தாகும், ஆகலின்,

அளவில் காலம் அலக்கணுற் றுழலுமென்
தளர்வு நோக்காய் போலும்; நோக்கின்
கருணைசெய் தருளா யல்லை;
அருள்நலம் பழுத்த ஆடல்வல் லோயோ.' – சி. செ. கோ. 64

தரவிணைக் கொச்சகத்திற்குச் செய்யுள் :

'குழைதூங்கு கழைமென்தோள் கோமாரி கொலைக்கண்கள்
இழைதூங்கு முலைக்கண்வைத் தேஎய்தா நாண்எய்த
உழைதூங்கு குயின்ஏங்க உருமுத்தீ உகநக்கு
மழைதூங்கு பொழில்தில்லை மணிமண்ணுள் நடஞ்செய்வோய்!'

'மீனேற்றின் துவசத்தான் தனிதுஞ்ச விழித்தோய், நின்
ஆனேற்றின் துவசமோ, அடலேற்றின் ஊர்தியோ,
கானேற்ற பைங்கூழின் கவளமாக் கணத்தின்கண்
வானேற்ற பகிரண்டம் வாய்மடுக்க வல்லதே.'

–[இரு தரவு]

எனவாங்கு, [தனிச்சொல்]

'பைந்துழாய் மவுலிப் பண்ணவன் உவப்ப
அந்தணர் பழிச்சவும் அறத்தின் புங்கவன்
முனியான் முனிவன் போலும்;
அனைய தன்றே, ஆன்றோர் கடனே.' [சுரிதகம்]

– சி. செ. கோ. 65

தரவு ஒன்றும் தாழிசை மூன்றும் இடைஇடைத் தனிச்சொல்லும் பெற்றுச் சுரிதகத்தால் இற்ற சிஃறாழிசைக் கொச்சகத்திற்குச் செய்யுள் :

'மறைதங்கு திருமன்றில் நடங்கண்டு மகிழ்பூத்துக்
கறைதங்கு படஅரவம் இமையாது கண்விழிப்பக்
குறைதங்கு கலைநிறையின் கோள்இழைக்குங் கொல்என்று
நிறைதங்கு தலைஉவவு நிரம்பாது நிரப்பெய்தும்
பிறைதங்கு சடைக்கற்றைப் பெரும்பற்றப் புலியூரோய்!'

[தரவு]

எனவாங்கு [தனிச்சொல்]

'வெள்ளருக்கும் கரும்பாம்பும் பொன்மத்தும் மிலைச்சிளமது
உள்ளிருக்கும் பெருமான்! நின் திருமார்பில் உறஅழுத்தும்
கள்ளிருக்கும் குழலுமையாள் முலைச்சுவட்டைக் கடுவொடுங்கும்
முள்ளெயிற்றுக் கறைஅரவம் முழைஎன்று நுழையுமால்.'

அதாஅன்று [தனிச்சொல்]

'சிலைக்கோடு பொருமருப்பின் புகர்முகன்நின், நின்திருமார்பில்
முலைக்கோடு பொருசுவட்டைக் கண்டு,நின் முடிவுத்தோள்
மலைக்கோடி விளையாடும் பருவத்து, மற்றுத்தன்
கொலைக்கோடு பட்டவெனக் குலைந்துமனம் கலங்குமால்.'

அதாஅன்று [தனிச்சொல்]

'விடமார்ந்த சுடரிலைவேல் விடலை,நின் மணிமார்பில்
வடமார்ந்த முலைச்சுவட்டைக் கண்டு,தன் மருப்பெந்தை
தடமார்பம் விடர்செய்யச் சமர்செய்தான் கொல்என்று,
கடமார்வெங் கவுள்சிறுகண் கயாசுரனை வியக்குமால்.'

அதனால் [தனிச்சொல்]

'சிலைமுகங் கோட்டுமச் சில்லரித் தடங்கண்
முலைமுகம் கோட்டினள், நகுமால்;
மலைமுகம் கோட்டுநின் மற்புயம் மறைந்தே.' [சுரிதகம்]
—66

பஃறாழிசைக் கொச்சகக் கலிப்பாவிற்குச் செய்யுள்:

'ஒருநோக்கம் பகல்செய்ய, ஒருநோக்கம் இருள்செய்ய,
இருநோக்கில் தொழில்செய்தும், துயில்செய்தும் இளைத்துயிர்கள்
கருநோக்கா வகைகருணைக் கண்ணோக்கம் செயுஞானத்
திருநோக்க அருள்நோக்கம் இருநோக்கும் செயச்செய்து,
மருநோக்கும் பொழில்தில்லை மணிமன்றுள் நடஞ்செய்வோய்.'
[தரவு]

'கடிக்கமலப் பார்வைவைத்தும் கண்ணனூர் காணுநின்
அடிக்கமலம்; முடிக்கமலம் அறியாதேம் அறிதுமே.'

'முத்தொழிலின் முதற்றொழிலோன் முடியிழந்தான் தனை இகழ்ந்த
அத்தொழிலிற் கெனில், தமியேம் அறிதொழிற்கும் வல்லமே.'

'இருக்கோல மிட்டுமின்னும் உணராதால், எந்தை! நின்
திருக்கோலம்; யாமுணர்ந்து சிந்திக்கக் கடவமே.'

'நான்மறைக்கும் துறைகண்டார் தோளிழந்தார் நாவிழந்திங்கு,
ஊன்மறைக்க மறைப்புண்டே, உய்த்துணர்வு பெரியமே.'

'தாமடிகள் மறந்துமறித் தலைகொண்டார் கலைவல்ல
மாமடிகள், யாமடிகள் மறவாமை உடையமே.'

'பலகலையும் குலமறையும் பயின்றுணர்ந்தும் பயன்கொள்ளாது
உலகலையும் சிலகலையும் உணராதேம் உணர்துமே.'

[இவை தாழிசை]

அதனால் [தனிச்சொல்]

'அம்மநின் தன்மை எம்மனோர் உணர்தற்கு
அரிதே, எளிதே யாதல்,
பெரிதே கருணை, சிறியேம் மாட்டே.' [சுரிதகம்] – 67

மயங்கிசைக் கொச்சகத்திற்குச் செய்யுள்:

'சூல்முகத்த சுரிமுகங்கள் நிரைத்தார்ப்பத் தொடுகடல்வாய்
வான்முகத்த மழைக்குலங்கள் மறிபுனல்வாய் மடுத்தெனனக்
கான்முகத்த மதுகரத்தின் குலமீண்டிக் கடிமலர்வாய்த்
தேன்முகக்கும் பொழில்தில்லைத் திருச்சிற்றம் பலத்துறைவோய்!'

'புற்புதமும் தொலைவெய்த நிலைஎய்தாப் புலைஉடம்பின்
இற்புதவு திறந்திறவா இன்பவீ டெய்தஒரு
நற்புதவு திறந்தன்ன, நறும்பொதுவில் நங்கையுடன்
அற்புதவும் ஆனந்த நடம்பயிலும் அறவோய்!கேள்.'

[இவை இரண்டும் தரவு]

'எவ்விடத்தில் எப்பொருளும் ஒருங்குண்ண இருக்கும்நீ
வெவ்விடத்தை எடுத்தமுது செய்ததுமோர் வியப்பாமே?'

'எண்பயிலா உலகடங்க ஒருநொடியில் எரித்திடும்நீ
விண்பயிலும் எயில்மூன்றும் எரித்ததும்ஓர் வீறாமே?'

'பெருவெள்ளப் பகிரண்டம் தரித்திடுநீ பெயர்த்துமலை
பொருவெள்ளப் புனற்கங்கை தரித்ததுமோர் புகழாமே?'

'மாயையினு லனைத்துலகும் மயக்கும்நீ மாமுனிவர்
சேயிழையார் சிலர்தம்மை மயக்கியதோர் சிறப்பாமே?'

'மேதக்க புவனங்கள் தொலைத்திடும்நீ வெகுண்டாய்போல்
மாதக்கன் பெருவேள்வி தொலைத்ததுமோர் வன்மையே?'

'ஓருருவாய் நிறைந்தநீ இருவர்க்கன் றுணர்வரிய
பேருருவொன் றுடையையாய் நின்றதுமோர் பெருமையே.'

[இவை ஆறும் தாழிசை]

'அறிவினில் அறிபவர் அறிவதை அலதொரு
குறியினில் அறிவுறு குறியி னையலை;'

'உளவயின் உளஅளவு உணர்வதை அலதுஉரை
அளவையின் அளவிடும் அளவி னையலை;'

'அருவெனின் உருவமும் உளை,உரு எனின்அரு
உருவமும் உளை,அவை உபய மும்அலை'

'இலதெனின் உளது,உளது எனின்இலது, இலதுஉளது
அலதுஎனின் நினதுஉரு அறிப வர்எவர்?'

[இவை நான்கும் அராகம்]

'எத்தொழிலும் கரணங்கள் இறந்தநினக் கிலை,ஐந்து
மெய்த்தொழில்செய் வதுமடிகேள் விளையாட்டு நிமித்தமே!'

'சீராட்டு நினக்கிலைஅச் சீராட்டுஞ் சிறுமருங்குல்
பேராட்டி விளையாட்டுன் பெயர்த்தாகி நடந்ததே!'

'மெய்த்துயர முயிர்க்கெய்தும் விளையாட்டும், உலகீன்ற
அத்திருவுக் கிலை;யதுவும் அவர்பொருட்டே யாமன்றே.'

'இன்னருளே மன்னுயிர்கட் கெத்தொழிலும், ஈன்றெடுத்த
அன்னைமுனி வதுந்தனையர்க் கருள்புரிதற் கேயன்றே!'

'எவ்வுருவும் நின்னுருவும் அவளுருவும் என்றன்றே,
அவ்வுருவும் பெண்ணுருவும் ஆணுருவும் ஆயவே!'

'நின்னலா தவளில்லை, அவளலால் நீ இல்லை,
என்னின் நீயேஅவனும் அவளுமாய் இருத்தியால்!'

[இவை ஆறும் தாழிசை]

அதனால் [தனிச்சொல்]

'தந்தைநீ, தாயும்நீ, தமரும்நீ, பிறரும்நீ,
சிந்தைநீ, உணர்வுநீ, சீவன்நீ, யாவும்நீ.

[இவை எட்டும் இருசீரடி அம்போதரங்கம்]

எனவாங்கு, [தனிச்சொல்]

'நெஞ்சகம் குழைந்து நெக்குநெக் குருக,நின்
குஞ்சித சரணம் அஞ்சலித் திறைஞ்சுதும்,
மும்மலம் பொதிந்த முழுமலக் குரம்பையில்
செம்மாந் திருப்பது தீர்ந்து,
மெய்ம்மையிற் பொலிந்த வீடுபெறல் பொருட்டே.' 68

[சுரிதகம்]

## ஒத்த நூற்பாக்கள்

'ஒத்தா ழிசைக்கலி இருவகைத் தாகும்.' – தொ. பொ. 443

'இடைநிலைப் பாட்டொடு தரவுபோக்கு அடையென
நடைநவின் றொழுகும் ஒன்றென மொழிப.' – 444

'அடைநிலைக் கிளவி தாழிசைப் பின்னர்
நடைநவின் றொழுகும் ஆங்கென் கிளவி.' – 447

'தரவியல் ஒத்தும் அதனகப் படுமே
புரைதீர் இறுதி நிலைஉரைத் தன்றே.' – 449

'ஏனை ஒன்றே,
தேவர்ப் பராஅய முன்னிலைக் கண்ணே.' – தொ. பொ. 450

'அதுவே, வண்ணகம் ஒருபோகு என இருவகைத்தே.' – 451

'வண்ணகம் தானே,
தரவே தாழிசை எண்ணே வாரமென்று
அந்நால் வகையின் தோன்றும் என்ப.' – 452

'எண் இடை ஒழிதல் ஏதம் இன்றே
சின்னம் அல்லாக் காலை யான.' – 458

'தரவின் றாகித் தாழிசை பெற்றும்
தாழிசை இன்றித் தரவுடைத் தாகியும்
எண்ணிடை யிட்டுச் சின்னம் குன்றியும்
அடக்கியல் இன்றி அடிநிமிர்ந்து ஒழுகியும்
யாப்பினும் பொருளினும் வேற்றுமை உடையது
கொச்சக ஒருபோகு ஆகும் என்ப.' – 461

'அம்போ தரங்கம் அறுபதிற் றடித்தே
செம்பால் வாரம் சிறுமைக் கெல்லை.' – 463

'எருத்தே கொச்சகம் அராகம் சிற்றெண்
அடக்கியல் வாரமோ டந்நிலைக் குரித்தே.' – 464

'ஒருபொருள் நுதலிய வெள்ளடி இயலான்
திரிபின்றி வருவது கலிவெண் பாட்டே.' – 465

'தரவும் போக்கும் பாட்டிடை மிடைந்தும்
ஐஞ்சீர் அடுக்கியும் ஆறுமெய் பெற்றும்
வெண்பா இயலான் வெளிப்படத் தோன்றும்.' – 466

'பாநிலை வகையே கொச்சகக் கலியென
நூல்நவில் புலவர் நுவன்றறைந் தனரே.' – 467

'தந்துமுன் நிற்றலின் தரவே தாழிசை
ஒத்தாழ்ந் திறினஃது ஒத்தா ழிசையே,'

'தனிதர நிற்றலின் தனிநிலை குளிதிரை
நீர்ச்சுழி போல நின்றுசுரிந் திறுதலின்
சோர்ச்சியில் புலவர் சுரிதகம் என்ப.'

'அம்பு வண்ணகம் இருமூன்று அடியின;
மூன்றடி சிறுமை; ஆறடி பெருமை
தந்துமுன் நிற்றலின் தரவா கும்மே.'

'இரண்டடி சிறுமை பெருமை இரட்டி
தரவடி அதனில் தாழ்ந்திறும் தாழிசை.'

'தனிநிலை சுரிதகம் வரைநிலை இலவே.'

'சிறுமை இரண்டடி பெருமைபொருள் முடிவே
சுரிதகம் என்ப தொன்மொழிப் புலவர்.'

'தரவே தாழிசை தனிநிலை சுரிதகம்
எனநான்கு உறுப்பினது ஒத்தா ழிசைக்கலி.' – காக்கை

'தன்னுடை அந்தமும் தாழிசை ஆதியும்
துன்னும் இடத்துத் துணிந்தது போலிசை
தன்னொடு நிற்றல் தரவிற் கியல்பே.' ,,

'தத்தமில் ஒத்துத் தரவின் அகப்பட
நிற்பன மூன்றும் நிரந்ததா ழிசையே.' ,,

'ஆங்கென் கிளவி அடையாத் தொடைபட
நீங்கி இசைக்கும் நிலையது தனிச்சொல்.' ,,

'ஆசிரியம் வெண்பா எனஇவை தம்முள்
ஒன்றாகி அடிபெற் றிறுதி வருவது
சுழியம் எனப்பெயர்ச் சுரிதக மாகும்.' ,,

'விட்டிசை முதற்பாத் தரவடி ஒத்தாங்கு
ஒட்டிய மூன்றிடைத் தாழிசை அதன்பின்
மிக்கதோர் சொல்லாத் தனிநிலை சுரிதகம்
ஆசிரி யத்தொடு வெள்ளை இறுதலென்று
ஓதினர் ஒத்தா ழிசைக்கலி குறுப்பே.' – அவிநயம்

'தரவுஒன் ருகித் தாழிசை மூன்ருய்
தனிச்சொல் இடைகிடந்து சுரிதகம் தழுவ
வைத்த மரபினது ஒத்தா ழிசைக்கலி.' — மயேச்சுரம்

'தரவின் அளவின் சுரிதகம் அயற்பா
விரவும் என்பர் ஆசிரியம் வெள்ளை.' ,,

'தரவொன்று தாழிசை மூன்றும் சமனய்த்
தரவிற் சுருங்கித் தனிநிலைத் தாகிச்
சுரிதகம் சொன்ன இரண்டினுள் ஒன்ருய்
நிகழ்வது நேரிசை ஒத்தா ழிசைக்கலி.' — யா. வி. 82

'ஈரடி இரண்டும் ஓரடி நான்கும்
முச்சீர் எட்டும் இருசீர் இரட்டியும்
அச்சீர் குறையினும் அம்போ தரங்கம்.'

'நீர்த்திரை போல நிரலே முறைமுறை
ஆக்கம் சுருங்கி அசையடி தாழிசை
விட்டிசை விரியத் தொடுத்துச் சுரிதகம்
தாக்கித் தழூவும் தரவினே டேனவும்
யாப்புற் றமைந்தன அம்போ தரங்கம்.' — காக்கை

'தரவே தாழிசை தனிச்சொல் சுரிதகம்
வருவன எல்லாம் தாழிசைக் கலியே.' — சிறு காக்கை

'சேர்த்திய தரவொடு தாழிசைப் பின்னர்
நீர்த்திரை போல நெறிமையின் சுருங்கி
மூவகை எண்ணும் முறைமையின் வழாஅ
அளவின எல்லாம் அம்போ தரங்கம்.' — சிறு காக்கை

'உரைத்த உறுப்பொடு தாழிசைப் பின்னர்
நிரைத்த அடியான் நீர்த்திரை போல
அசையடி பெறின்அவை அம்போ தரங்கம்.' — அவிநயம்

'தாழிசைக் கீருய் முறைமுறை யானே
ஒன்றினுக் கொன்று சுருங்கும் உறுப்பினது
அம்போ தரங்கஒத் தாழிசைக் கலியே.'

'தாழிசைப் பின்னர் தனிச்சொல் முன்னர்
ஆழ்புனல் திரைபுரை அம்போ தரங்கம்
உம்பர் மொழிந்த தாழி சைவழி
அம்போ தரங்கம் வண்ணக மாகும்.'

'அவையே,
தேவ பாணியென்று ஏவவும் படுமே.'

'வழிபடு தெய்வம் வழுத்தி வழிமொழியின்
தலைஇடை கடையென அம்போ தரங்கம்
நிலையின்அவ் வளவின் நிலையுங் காலை
அராகம் பேரெண் இடையெண் சிற்றெண்
விராக என்ப தாழிசைப் பின்னர்
கூறிய தரவே ஆறடித் தாகும்.'

'தரவின் வழிமுறை தாழிசை மூன்றும்
வரன்முறை பிறழா நாலடிக் குரிய
தந்துமுன் நீறீஇத் தரவினில் தாழிசை
உறுப்பினும் குணத்தினும் நெறிப்படப் புணரும்.'

'தாழிசைப் பின்னர் அராகஅடி இரண்டே
அராகத் திறுதி பேரெண் இரண்டு
விராக என்ப இரண்டிரண் டடியான்
பேரெண் வழியால் இடையெண் ணலடி
நேர வேண்டும் நெறியறி புலவர்.'

'பெற்ற நாலடி அரையடி முடிவின
சிற்றெண் பகுதி இருநான் காகும்.'

'மூவகை எண்ணின் பொருள்வகை முடிவும்
யாவகை எண்ணிற்கும் அகப்பட முடியும்.'

'சிற்றெண் அகத்தே சேர்க்கப் படுவோன்
பெற்றபுகழ் தொடுப்பினும் பிழைப்ப தில்லை.'

'அடக்கியல் உறுப்பும் ஆறடித் தாகத்
தொடுக்கு மாகின் தொல்லையோர் துணிவே.'

'கொள்ளப் பட்ட உறுப்போ டிருதலையும்
தள்ளாது வருவது தலையளவு ஆகும்.'

'உடையதம் உறுப்பின் ஒன்றுகுறை வின்றி
இடைஅளவு இலக்கணம் இருதலை உறுப்பும்
ஐயைந் தடியாய் அமைவுறு தாழிசை
மூன்றும் மூன்றடியான் மூன்றுமுடி வெய்திப்
பேரெண் அறுசீர் இடைஎண் முச்சீர்
சேரும் சிற்றெண் சீரும்ஓர் அசையும்
நேர வேண்டும் நெறிஅறி புலவர்.'

'கடையள வென்பது உடைஉறுப்பு எஞ்சாது
முடிவும் முதலும் நாலடித் தாகி
அடிவகை இரண்டின் தாழிசை மூன்ருய்ப்
பேரெண் இரண்டடி பெற்றபின் இடைஎண்
நேர்ப நான்கும் அரையடி முடிவில்
சிற்றெண் எட்டும் சீர்நா லிரட்டியும்
பெற்ற தாயி னதுகடை அளவே.'

'அம்மு அளவிற்கும் அராகஅடி இரண்டே
ஈறும் முதலும் எல்லா அளவிற்கும்
கூறிய முறைமையிற் கொள்ள வேண்டும்.'

'முந்திய தாழிசைக்கு ஈருய் முறைமுறை
ஒன்றினுக்கு ஒன்று சுருங்கும் உறுப்பினது
அம்போ தரங்கஒத் தாழிசைக் கலியே.' – யா. வி. 83

'அளவடி முதலா அனைத்தினும் நான்கடி
முதலா இரட்டியும் முடுகியல் நடக்கும்.'

'வண்ணகத் தியற்கை திண்ணிதின் கிளப்பின்
தரவொடு தாழிசை தலையவு எய்தித்
தாழிசைப் பின்னர்த் தனிநிலை எய்திப்
பேரெண் இட்ட எண்ணுடைத் தாகிச்

சிற்றெண் வழியா அராகஅடி நான்கும்
கீழளவு ஆகப் பேரளவு எட்டாச்
சீர்வகை நான்கு முதல்பதின் மூன்று
நேரப் பட்ட இடைநடு எனைத்தும்
சீர்வகை முறைமையின் அராகம் பெற்று
அம்போ தரங்கத்து அராகவடி யின்றி
மடக்கடி மேலே முச்சீர் எய்திக்
குறில்இணை பயின்ற அசைமிசை முடுகி
அடுக்கிசை முடுக்கியல் அராகம் என்னும்
உடைப்பெயர் மூன்றிற்கும் உரிமை எய்தி
விண்ணோர் விழுப்பமும் வேந்தரது புகழும்
வண்ணித்து வருதலின் வண்ணகம் என்ப.' – மயேச்சுரம்

'அந்தாதித் தொடையினும் அடிநடை உடைமையும்
முந்தையோர் கண்ட முறைமை என்ப.' – மயேச்சுரம்

'குறில்வயின் நிரைஅசை கூடிய அடிபெறினே
வண்ணக மாகும்.' – அவிநயம்

'அவற்றொடு முடுகியல் அடியுடை அராகம்
அடுப்பது வண்ணக ஒத்தா ழிசைக்கலி.' – யா. வி. 84

'கலியொலி கொண்டு தன்தளை விரவா
இறும்அடி வரினே வெண்கலி ஆகும்.' – மயேச்சுரம்

'தளைகலி தட்டன தன்சீர் வெள்ளை
களையுந இன்றிக் கடையடி குறையுந
விரவர வில்லா வெண்கலி ஆகும்.' – மயேச்சுரம்

'வெண்டளை தன்தளை என்றிரு தன்மையின்
வெண்பா இயலது வெண்கலி ஆகும்.' – காக்கை

'தன்தளை ஓசை தழுவிநின்று ஈற்றடி
வெண்பா இயலது கலிவெண் பாவே.' – யா. வி. 85

'ஓதப் பட்ட உறுப்புவகை எல்லாம்
ஏதப் படாமைக் கலிக்கியல்பு எய்தி

மிக்கும் குறைந்தும் பிறழ்ந்தும் உறழ்ந்தும்
வண்ணமும் அடியும் தொடையும் மயங்கியும்
அடுக்கியல் அந்தம் தொடுத்தன பல்கியும்
கலிவயின் கடிந்த சீர்இடை மிடைந்தும்
நாற்சீர் இறந்த சீரொடு சிவணியும்
முச்சீர் இருசீர் அம்போ தரங்கம்
அச்சீர் முடிவிடை அழிவில தழுவியும்
கொச்சகக் கலிவயின் கூறவும் படுமே.'

'தரவே ஆகியும் இரட்டியும் தாழிசை
சிலவும் பலவும் மயங்கியும் பாவேறு
ஒத்தா ழிசைக்கலிக்கு ஒவ்வா உறுப்பின
கொச்சகக் கலிப்பா ஆகும் என்ப.' – அவிநயம்

'தரவே தரவிணை தாழிசை சிலபல
வரன்முறை பிறழ அயற்பா மயங்கியும்
தனிச்சொல் பலவாய் இடைஇடை நடந்தவும்
ஒத்தா ழிசைக்கலி உறுப்பினில் பிறழ்ந்தவும்
வைத்தவழி முறையால் வண்ணகம் இறுவாய்
மயங்கி வந்தவும் இயங்குநெறி முறையின்
கொச்சகக் கலியெனக் கூறினர் புலவர்.' – மயேச்சுரம்

'எருத்தியல் இன்றி இடைநிலை பெற்றும்
இடைநிலை இன்றி எருத்துடைத் தாயும்
எருத்தம் இரட்டித்து இடைநிலை பெற்றும்
இடையது இரட்டித்து எருத்துடைத் தாயும்
இடையும் எருத்தும் இரட்டுற வந்தும்
எருத்தம் இரட்டித்து இடைநிலை ஆறாய்
அடக்கியல் காறும் அமைந்த உறுப்புக்
கிடக்கை முறைமையின் கிழமைய தாயும்
தரவொடு தாழிசை அம்போ தரங்கம்
முடுகியல் போக்கியல் என்றிவை எல்லாம்
முறைதடு மாற மொழிந்தவை இன்றி

இடைநிலை வெண்பாச் சிலபல சேர்ந்து
மற்றும் பிறபிற ஒப்புறுப்பு இல்லன
கொச்சகம் என்னும் குறியின ஆகும்.' — காக்கை

'தரவே தரவிணை தாழிசை தாமும்
சிலவும் பலவும் சிறந்தும் மயங்கியும்
மற்றும் விகற்பம் பலவாய் வருநவும்
கொச்சகம் என்னும் குறியின ஆகும்.' — யா. வி. 86

'தரவொன்று தாழிசை மூன்று தனிச்சொல் சுரிதகமாய்
நிரல்ஒன்றின் நேரிசை ஒத்தாழிசைக்கலி; நீர்த்திரைபோல்
மரபொன்று நேரடிமுச்சீர் குறள்நடுவே மடுப்பின்,
அரவொன்று மல்குல்! அம்போ தரங்கஒத் தாழிசையே.'

— யா. கா. 31

'அசையடி முன்னர் அராகம்வந் தெல்லா வுறுப்புமுண்டேல்
வசையறு வண்ணக ஒத்தாழிசைக்கலி; வான்தளை தட்டு
இசைதனதாகியும் வெண்பா இயைந்துபின், பால்மொழியாய்!
விசையறு சிந்தடி யாலிறு மாய்விடின், வெண்கலியே.' — 32

'தரவே தரவிணை தாழிசை தாமும் சிலபலவாய்
மரபே இயன்றும் மயங்கியும் வந்தன...கொச்சகமே.' — 33

'தரவொடு தாழிசை சுற்றும் அராகமம் போதரங்கம்
உரவுடை நற்றனி வாரமென் றுங்கலி; ஓர்ந்ததனை
வரவிசை நேரிசை அம்போ தரங்கம்பின் வண்ணகமே
விரவிய கொச்சகம் வெண்கலி என்று விகற்பிப்பரே.'

— வீ. சோ. 116

'வண்ணக ஒத்தா ழிசைக்கா றுறுப்பென்பர்; ஐந்துறுப்பு
நண்ணுவ தம்போ தரங்கவொத் தாழிசை; நான்குறுப்பாம்
எண்ணிய நேரிசை ஒத்தா ழிசைதான்; இறுதிசிந்தாய்த்
திண்ணிய நேரடி யால்வரும் வெண்கலி; தேமொழியே.'

— வீ. சோ. 117

'நிலவுஞ் தரவுந் தரவிணை யுந்நின்ற தாழிசைகள்
சிலவும் பலவும் சிறந்தும் மயங்கியும் சீர்விகற்பம்
பலவும் வரினும், பவளமும் சேலும் பனிமுல்லையும்
குலவும் திருமுகத்தாய்! கொண்டவான்பெயர் கொச்சகமே.'
– வீ. சோ. 118

'கலிமுதல் உறுப்பாம் தரவுதா ழிசையே
துணைஉறுப்பு எனக்கூன் சுரிதகம் வண்ணகம்
அம்போ தரங்கம் ஆம்இவை நான்கே.' – தொ. வி. 228

'தரவு தாழிசை தன்தளை வெண்டளை
இரண்டுஉறழ்ந் தனஅடி இரண்டும் பலவுமாம்.' ,, 229

'வண்ணகம் அளவடி வரைமுதல் பலவடி
நான்குஆதி எட்டுஈறாய் நடைமுடுகு அராகமாம்.' ,, 230

'அம்போ தரங்கம் அம்புஅளாம் திரைபோல்
அளவடி ஈரடி இரண்டும் பேரெண்
அளவடி ஓரடி நான்கும் அளவெண்
சிந்தடி ஓரடி எட்டும் இடையெண்
குறளடி ஓரடி நானன்கும் சிற்றெண்
எட்டும் நானன்கும் நான்கும் எட்டுமாய்ச்
சுருங்கவும் அந்நால் துணைஉறுப்பு உடைத்தே.' ,, 231

'சுரிதகம் என்ப சுரிந்தெனக் கூனின்
பின்அகவல் வெள்ளை யாக முடிவதே.' – 232

'நேரிசை அம்போ தரங்கம் வண்ணகம்
என்றுஒத் தாழிசை இவைமூன்று; இவற்றினுள்
தரவுஒன்று ஒருமுத் தாழிசை தனிநிலை
சுரிதகம் எனநால் துணைவரு நேரிசை;
தாழிசைக் கீழ்அம் போதரங்கம் சாரவும்
அம்போ தரங்கம்மேல் அராகம் அணையவும்
அம்போ தரங்கமே ஆம்,வண் ணகமாம்.' – 233

'கொச்சகக் கலிஐங் கூறு பாடென
தரவே தரவிணை தாழிசை சிலபல
சிலபிறழ்ந் துறழ்ந்தும் சிலமயங் கியுமாம்.' – தொ. வி. 234

'வெண்கலிக்கு அளவடி பலதளை பலதொடை
மண்டிஈற்று அசைச்சீர் வந்துசிந் தடியாம்
கலிவெண் பாவெண் கலிஎன நடப்பினும்
வலிவெண் டளைதவா வரவும் பலதொடை
நேரிசை வெண்பா நேரவும் பெறுமே.' – 235

'கட்டளைக் கலிப்பா காட்டுங் காலை
ஒருமா கூவிளம் ஒருமூன் று இயைய
நேர்பதி னைன் றுநிரை பன்னீ ரெழுத்தாய்
நடந்துஅடிப் பாதியாய் நான்கடி ஒத்தவாய்
வருவது இன் று வழங்கும் நெறியே.' – 236

'தரவு தாழிசை தனிச்சொல் சுரிதகம்
எனுநான்கு உறுப்பினது ஒத்தா ழிசைக்கலி.'

– மு. வீ. யா. செ. 35

'அளவடி சிந்தடி குறளடி ஆகும்
அசையடி ஆகிய அம்போ தரங்க
உறுப்பைத் தாழிசை தனிச்சொற்கு இடையில்
கொண்டு தரவு தாழிசை அம்போ
தரங்கம் தனிச்சொல் சுரிதகம் என்னும்
ஐந்துறுப் போடும்வரல் அம்போ தரங்க
ஒத்தா ழிசைக்கலி யாமுறை தரினே.' – 36

'தாழிசை அம்போ தரங்கக் கிடையே
அராகம் அடைந்துமுன் தரவு தாழிசை
அராகம்அம் போதரங்கம் தனிச்சொல்
சுரிதகம் ஆறொடு தோன் றுவ வண்ணக
ஒத்தா ழிசைக்கலி யாமுறை தரினே.' – 37

'தரவுகொச் சகமொரு தரவொடு போதரும்.' – 38

'*தரவிணைக் கொச்சகம் தான்இரு தரவொடு*
*தனிச்சொல் சுரிதகம் தழுவியும் வருமே.*' – *மூ.வீ.யா.செ. 39*

'*தரவொடு தாழிசை மூன்று தனிச்சொல்*
*சுரிதகம் நான்கின ஆகும்சிஃ றாழிசை.*' *– 40*

'*தரவொன்று தாழிசை ஆறு தனிச்சொல்*
*சுரிதகம் நான்கின ஆம்பஃ றாழிசை.*' *– 41*

'*மயங்கி வருவது மயங்கிசைக் கொச்சகக்*
*கலிப்பா என்மனர் கற்றுணர்ந் தோரே.*' *– 42*

'*கலித்தளை தட்டுக் கலியொலி விரவியும்*
*வெண்டளை தட்டு வெள்ளொலி தழுவியும்*
*ஈற்றடி சிந்தடி யாய்வரல் வெண்கலிப்*
*பாவாம் எனப்பெயர் பகரப் படுமே.*' *– 43*
*29*

## கலிப்பா இனம்

**739.** அடிஎனைத் தாகியும் ஒத்துவந்து அளவினில்
கடைஅடி மிகுவது கழித்தா ழிசையும்,
நெடில்அடி நான்காய் நெறிப்பட நிகழ்வது
கலித்துறை ஆதலும், கலிப்பா விருத்தம்
அளவுஅடி நான்கினது ஆதலும் விதியே.

இது மேல்கூறிய கலிப்பாவிற்கு இனம் ஆகிய தாழிசை துறை விருத்தங்கள் ஆமாறு கூறுகின்றது.

இ–ள் : அடிகள் பலவாயும் சிலவாயும் தம்முள் அளவு ஒத்துவந்து ஈற்றடி மிக்கு வருவது கலித்தாழிசை ஆதலும், ஐஞ்சீர் அடி நான்காய் ஒழுங்குபட நடப்பது கலித்துறை ஆதலும், நாற்சீர் அடி நான்கு உடையது கலிவிருத்தம் ஆதலும் இலக்கணமாம் என்றவாறு.

'நெறிப்பட' என்றதனானே, கலித்தாழிசை தம்முள் அளவு ஒவ்வாதும் வரும் எனவும், தனியே வரப்பெறும்

ஆயினும் ஒரு பொருள்மேல் மூன்று அடுக்கி வருவது சிறப்பு உடைத்து எனவும்,

கலித்துறை கட்டளைக் கலித்துறையும் கலிநிலைத் துறையும் என்று இருவகைத்தாய், அவற்றுள் நேர் அசை முதலாகிய கட்டளைக் கலித்துறை ஓர் அடிக்கு எழுத்துப் பதினாறும், நிரை அசை முதலாகிய கட்டளைக் கலித்துறை ஓர் அடிக்கு எழுத்துப் பதினேழுமாய் வரும் எனவும் கொள்க.

சீர் வரையறுத்திலாமையால் கலித்தாழிசை எனைத்துச் சீரானும் அடியாய் வரப்பெறும் என்பதூஉம் பெற்றாம்.

இரண்டு அடியாய் ஈற்றுஅடி மிக்கு ஒரு பொருள்மேல் மூன்று அடுக்கி வந்த சிறப்புடைக் கலித்தாழிசைக்குச் செய்யுள் :

'கொய்தினை காத்தும்; குளவி அடுக்கத்தெம்
பொய்தல் சிறுகுடி வாரல்,நீ ஐய; நலம்வேண்டின்;'

'ஆய்தினை காத்தும்; அருவி அடுக்கத்தெம்
மாசில் சிறுகுடி, வாரல்,நீ, ஐய! நலம்வேண்டின்;'

'மென்தினை காத்தும்; மிகுபூங் கமழ்சோலைக்
குன்றச் சிறுகுடி வாரல்,நீ, ஐய! நலம்வேண்டின்'

- யா. கா. 34 மே.

என வரும்.

பல அடியாய் ஈற்றுஅடி மிக்கு ஏனை அடி மூன்றும் தம்மில் அளவு ஒத்துத் தனியே வந்த கலித்தாழிசைக்குச் செய்யுள் :

'வாள்வரி வேங்கை வழங்கும் சிறுநெறிஎம்
கேள்வரும் போழ்தில் எழால்,வாழி, வெண்திங்காள்!

கேள்வரும் போழ்தில் எழாதாய்க் குருலியரோ
நீள்வரி நாகத்து எயிறே, வாழி, வெண்திங்காள்!'

– யா. கா. 34 மே.

என வரும்.

பல அடியாய் ஈற்றுஅடி மிக்கு இரண்டாம் அடி குறைந்து முதல் அடியும் மூன்றும் அடியும் தம்முள் அளவு ஒத்துத் தனியே வந்த கலித்தாழிசைக்குச் செய்யுள் :

'பூண்ட பறைஅறையப் பூதம் மருள
நீண்ட சடையான் ஆடுமே;
நீண்ட சடையான் ஆடும் என்ப,
மாண்ட சாயல் மலைமகள் காணவே காணவே'

– யா. கா. 34 மே.

என வரும்.

நேர் அசை முதலாகிய கட்டளைக் கலித்துறைக்குச் செய்யுள் :

'தேனூர் கமழ்தொங்கல் மீனவன் கேட்பத்தெண் ணீரருவிக்
கானூர் மலையத் தருந்தவன் சொன்னகன் னித்தமிழ்நூல்
யானு நடாத்துகின் றேனென் றெனக்கே நகைதருமால்
ஆனு அறிவி னவர்கட்கென் னுங்கொலென் ஆதரவே'

– யா. கா. 2

எனவும்,

நிரை அசை முதலாகிய கட்டளைக் கலித்துறைக்குச் செய்யுள் :

'அடிவரை இன்றி அளவொத்தும் அந்தடி நீண்டிசைப்பின்
கடிதலில் லாக்கலித் தாழிசை ஆகும்; கலித்துறையே
நெடிலடி நான்காய் நிகழ்வது ;நேரடி ஈரிரண்டாய்
விடின்அது வாகும் விருத்தம் ;திருத்தகு மெல்லியலே'

– யா. கா. 34

எனவும்,

**கலிநிலைக் கலித்துறைக்குச் செய்யுள் :**

**'யானும் தோழியும் ஆயமும் ஆடும் துறைநண்ணித்**
**தானும் தேரும் பாகனும் வந்தென் நலனுண்டான்;**
**தேனும் பாலும் போல்வன சொல்லிப் பிரிவானேல்,**
**கானும் புள்ளும் கைதையும் எல்லாம் கரிஅன்றே'**

**எனவும்,**

**கலி விருத்தத்திற்குச் செய்யுள் :**

**'வேய்தலை நீடிய வெள்ளி விலங்கலின்**
**ஆய்தலின் ஒண்சுடர் ஆழியி ஞன்தமர்**
**வாய்தலின் நின்றனர் வந்தென, மன்னன்முன்**
**நீதலை சென்றுரை; நீள்கடை காப்போய்!'** –யா. கா. 34 மே.
– சூளா. 127

**எனவும் வரும். பிறவும் அன்ன.** **(30)**

விளக்கம்

**சிதம்பரச் செய்யுட் கோவை :**

*ஒருபொருள் மேல் மூன்றடுக்கிய கலித்தாழிசைக்குச் செய்யுள் :*

*'செல்லார் பொழிற்றில்லைச் சிற்றம் பலத்தெங்கள்*
*பொல்லா மணியைப் புகழ்மினோ, வம்மின், புலவிர்காள்!'*

*'முத்தேவர் தேவை முகிலூர்தி முன்னனை*
*புத்தேளிர் போலப் புகழ்மினோ வம்மின், புலவிர்காள்!'*

*'ஆங்கற் பகக்கன் றளித்தருளும் தில்லைவனப்*
*பூங்கற் பகத்தைப் புகழ்மினோ, வம்மின், புலவிர்காள்!'*
*– சி. செ. கோ. 69*

*ஈற்றடிமிக்குத் தனியே வந்த கலித்தாழிசைக்குச் செய்யுள் :*

*'இருகூற் றுருவத் திருந்தண் பொழிற்றில்லை*
*ஒருகூற்றின் கூத்தை உணராய், மடநெஞ்சே!*
*ஒருகூற்றின் கூத்தை உணரா யெனின்மற்றப்*
*பொருகூற்றம் தோற்றப் புலம்பேல், வாழி, மடநெஞ்சே.'*
*– சி. செ. கோ. 70*

இரண்டாமடி குறைந்து இடைமடக்காய் ஈற்றடி மிக்கு வந்த கலித்தாழிசைக்குச் செய்யுள் :

'காளி ஆடக் கனல்உமிழ் கண்ணுதல்
மீளி ஆடுதல் பாருமே!
மீளி ஆடல் வியந்துஅவள் தோற்றெனக்
கூளி பாடிக் குனிப்பதும் பாருமே பாருமே!' –71

நெடிலடி நான்காய்வந்த கலித்துறைக்குச் செய்யுள் :

'பானல் கருங்கண் பசுந்தோகை யோகப் பயன்துய்ப்பஅத்
தேனக் கலர்கொன்றை சாரூப் பியந்தந்த செயலோர்கிலார்
ஊனக்க ணிதுபிளை ஒழுகும் புறக்கண், உளக்கண்ணதாம்
ஞானக்க ணேயாதல் நல்கும் பிரான்தில்லை நடராசரே.'
[இது கலிநிலைத்துறை எனவும் வழங்கப்பெறும்]
–72

நேரசை முதலாகிய கட்டளைக் கலித்துறைக்குச் செய்யுள் :

'செவ்வாய்க் கருங்கண்பைந் தோகைக்கும்
வெண்மதிச் சென்னியற்கும்,
ஒவ்வாத் திருவுரு ஒன்றே
உளதவ் உருவினை
மற்றெவ்வாச் சியமென் றெடுத்திசைப்பே
மின்னருட் புலியூர்ப்
பைவாய்ப் பொறியர வல்குலெந்
தாயென்று பாடுதுமே.' –73

நிரையசை முதலாகிய கட்டளைக் கலித்துறைக்குச் செய்யுள்:

'கரும்பும் சுரும்பும் அரும்பும் பொரும்படைக் காமர்வில்வேள்
இரும்பும் கரைந்துரு கச்செய்யு மாலிறும் பூதிதன்றே;
விரும்பும் பெரும்புலி யூரெம்பி ரானருள் மேவிலொரு
துரும்பும் படைத்தழிக் கும்மகி லாண்டத் தொகுதியையே.'
74

அளவடி நான்காய் வந்த கலிவிருத்தத்திற்குச் செய்யுள் :

'கூகா என்று குரைப்பதல் லால்,சமன்
வாவா என்னின், வரேம்என வல்லிரே
தேவே சன்பயில் தில்லையின் எல்லையில்
சேர்வி ரேல்,அது செய்யவும் வல்லிரே.' – சி. செ. கோ. 75

ஒத்த நூற்பாக்கள்

'அந்தடி மிக்குப் பலசில வாயடி
தந்தமில் ஒன்றிய தாழிசை யாகும்.' – காக்கை

'அந்த அடிமிக்கு அல்லா அடியே
தந்தமுள் ஒப்பன கலித்தா ழிசையே.' – சிறுகாக்கை

'ஈற்றடி மிக்குஅளவு ஒத்தன ஆகி
பலவும் சிலவும் அடியாய் வரினே
கலிப்பா இனத்துத் தாழிசை ஆகும்.' – அவிநயம்

'அடிபல ஆகியும் கடையடி சீர்மிகின்
கடிவரை இல்லை கலித்தா ழிசையே.' – மயேச்சுரம்

'அடிஎனைத் தாகியும் ஒத்துவந் தளவினில்
கடையடி மிகுவது கலித்தா ழிசையே.' – யா. வி. 87

'ஐஞ்சீர் முடிவின் அடித்தொகை நான்மையொடு
எஞ்சா மொழிந்தன எல்லாம் கலித்துறை.' – காக்கை

'ஐஞ்சீர் நான்கடி கலித்துறை ஆகும்.' – அவிநயம்

'நெடிலடி நான்காய் நிகழ்வது கலித்துறை.' – யா. வி. 88

'நாற்சீர் நாலடி வருவ தாயின்
ஒலியின் இயைந்த கலிவிருத் தம்மே.' – அவிநயம்

'ஐஞ்சீர் நாற்சீர் அடிநான்கு ஆயின்
எஞ்சாக் கலியின் துறையும் விருத்தமும்.' – மயேச்சுரம்

'நாலொரு சீரான் நடந்த அடித்தொகை
ஈரிரண் டாகி இயன்றவை யாவும்
காரிகை சான்ற கலிவிருத் தம்மே.' – காக்கை

'நாற்சீர் நாலடி கலிவிருத் தம்மே.' – சிறுகாக்கை

'அளவடி நான்கின கலிவிருத் தம்மே.' – யா. வி. 89

'அடிவரை இன்றி அளவொத் தந்தடி நீண்டிசைப்பின்
கடிதலில் லாக்கலித் தாழிசை யாகும்; கலித்துறையே
நெடிலடி நான்காய் நிகழ்வது; நேரடி ஈரிரண்டாய்
விடினது வாகும் விருத்தம்; திருத்தகு மெல்லியலே.'
– யா. கா. 34

'ஈரடி யாதி எனைத்தடி யானும்வந் தீற்றில்நின்ற
ஓரடி நீளின் கலித்தா ழிசை; ஒலி யோர்விருத்தம்
நேரடி நான்காய் நிகழுமென்றார்; நெடிலென் றுரைத்த
பேரடிநான்கு கலித்துறை யாமென்பர்; பெய்வளையே.'
– வீ. சோ. 123

'கலித்தா ழிசையே கடையடி மிக்குமற்று
அடிஎனைத் தாகியும் அளவுஒத்து ஒவ்வாது
ஒருமூன்று அடுக்கியும் ஒன்றுமாய் வருமே.' – தொ. வி. 245

'கலித்துறை நெடிலடி நான்குஒத்து அவற்றுள்
இடைநேர் வெண்சீர் இயற்சீர் முதல்நான்கு
இடைநிரை வெண்சீர் இறுதிச்சீர் மோனையாய்க்
கடையே கொண்டுஇறும் கட்டளைக் கலித்துறை.' – 241

'விருத்த விகற்பம் வரும்கலி அளவடி' – 248

'இரண்டடி யாயீற் றடிநீண் டிசைப்பது
கலித்தா ழிசையெனக் கருதப் படுமே.' – மு. வீ. யா. செ. 48

'ஒருபொருள் மேல்மூன் றடுக்கி யிரண்டடி
யாக வருவஃது அதன்சிறப் பாகும்.' – 49

'ஐஞ்சீ ரடிநான் காய்அள வொத்து
வருவது கலித்துறை யாம்வழுத் திடினே.' – 50

'அளவடி நான்காய் வரல்கலி விருத்தம்.' – 51

## வஞ்சிப்பா இலக்கணம்

740. தூங்கல் இசையன வஞ்சி; மற்றவை
ஆய்ந்த தனிச்சொலோடு அகவலின் இறுமே.

இது நிறுத்தமுறையானே வஞ்சிப்பாவிற்கு ஓசையும் ஈறும் ஆமாறு கூறுகின்றது.

இ-ள் : தூங்கல் ஓசையைத் தமக்கு ஓசையாக உடையனவாம் மேற் கூறிய குறள் அடி வஞ்சிப்பாவும் சிந்து அடி வஞ்சிப்பாவும்; அவ்விருவகை வஞ்சிப்பாவும் ஆராய்ந்த தனிச் சொல்லோடு புணர்ந்து ஆசிரியச் சுரிதகத்தான் இறும் என்றவாறு.

மற்று என்ற மிகையானே ஏந்திசைத் தூங்கலும் அகவல் தூங்கலும் பிரிந்திசைத் தூங்கலும் எனத் தூங்கல் ஓசை மூன்று வகைப்படும்.

'ஒன்றிய வஞ்சித் தளையே வரினும்
ஒன்றாத வஞ்சித் தளையே வரினும்
என்றிவை இரண்டும் பிறவும் மயங்கினும்
ஏந்தல் அகவல் பிரிந்திசைத் தூங்கலென்று
ஆய்ந்த நிரல்நிறை ஆகும் என்ப'

எனக் கூறுப ஆகலின்.

இவற்றிற்குச் செய்யுள் :

*ஏந்திசைத் தூங்கல் :*

'வினைத்திண்பகை விழச்செற்றவன்
வனப்பங்கய மலர்த்தாளிணை
நினைத்தன்பொடு தொழுதேத்துநர்
நாளும்
மயலாம் நாற்கதி மருவார்;
பெயரா மேற்கதி பெறுகுவர் விரைந்தே' – *யா. கா. 22 மே.*

எனவும்,

*அகவல் தூங்கல் :*

'வானோர்தொழ வண்டாமரைத்
தேனார்மலர் மேல்வந்தருள்
ஆனாஅருள் கூர்அறிவனைக்
காணார்
மலர்கொண் டேத்தி வணங்குநர்,
பலர்புகழ் முத்தி பெறுகுவர்; விரைந்தே' – *யா. கா.* 22 *மே.*

எனவும்,

*பிரிந்திசைத் தூங்கல் :*

'மந்தாநிலம் வந்தசைப்ப
வெண்சாமரை புடைபெயர்தரச்
செந்தாமரை நாண்மலர்மிசை
யெனவாங்கு,
இனிதி னொதுங்கிய விறைவனை
மனம்மொழி மெய்களின் வணங்குதும் மகிழ்ந்தே'
– *யா. கா.* 22 *மே.*

எனவும் முறையே காண்க.

தனிச்சொல் பெற்று ஆசிரியச் சுரிதகத்தால் இற்ற குறள் அடி வஞ்சிப்பாவிற்குச் செய்யுள் :

'சுறமறிவன துறையெல்லாம்
இறவீன்பன இல்லெல்லாம்
மீன்திரிவன கிடங்கெல்லாம்
தேன்தாழ்வன பொழிலெல்லாம்
மெனவாங்கு,
தண்பணை தழீஇய இருக்கை
மண்கெழு நெடுமதில் மன்ன னூரே' – *யா. கா.* 23 *மே.*

எனவும்,

தனிச்சொல் பெற்று ஆசிரியச் சுரிதகத்தால் இற்ற சிந்தடி வஞ்சிப்பாவிற்குச் செய்யுள் :

'தொன்னலத்தின் புலம்பலைப்பத் தொடித்தோள்மேல்
பன்னலத்த கலந்தொலையப் பரிவெய்தி

**என்னலத்தகை இதுவென்னென எழில்காட்டிச்**
**சொன்னலத்தகைப் பொருள்கருத்தி னிற்சிறந்தாங்கு**
**எனப்பெரிதுங்,**
**கலங்கஞ ரெய்தி விடுப்பவுஞ்**
**சிலம்பிடைச் செலவுஞ் சேணிவந் தற்றே'** – யா.கா. 23 மே.
**எனவும் வரும்.** **(31)**

விளக்கம்

*பொதுச்சீர் பதினறும் வஞ்சிச்சீர் நான்கும் வந்த குறளடி வஞ்சிப்பாவிற்குச் செய்யுள் :*

*'வையமீன்ற மறைக்கிழவனும்*
*கொய்துழாய்மவுலிக் குணக்கொண்டலும்*
*தருவார்நீழல் தார்வேந்தனும்*
*வரன்முறைதாழ்ந்து வாழ்த்திசைப்ப*
*மைதீர்உணர்வின் மழமுனிவனும்*
*பையரவரசும் பணிந்திறைஞ்ச*
*இமயம்பயந்த இளங்கொடியொடும்*
*தமனியப்பொதுவில் தாண்டவம்புரி*
*தில்லைவாண! நின் திருவடிக்கீழ்ச்*
*சொல்லுவதொன்றிது ; சொலக்கேண்மதி ;*
*கமலலோசனன் கண்படுக்கும்*
*அமளியைநின்மருங் காதரித்தனை ;*
*செங்கேழ்நறுநுதல் திருமகளோடும்*
*அங்கவ னுறைதரும் ஆழிச் சேக்கையைப்*
*புலிக்கால்முனிவரன் புதல்வனுக்கு*
*நலத்தகுகருணையின் நயந்தளித்தனை ;*
*அதனல்,*
*பாயலும் அமளியும் இன்றி மன்றநின்*
*வாயிலின் நெடுநாள் வைகினன் அணையொடும்*
*அத்திரு மனையவற் களித்தி; நின்*
*மெய்த்தொழில் அன்றே வீடுநல் குவதே.'*

*இப்பாடலில் 'அங்கவன் உறைதரும் ஆழிச் சேக்கையை' என்பது ஆசிரிய அடி.* *– சி. செ. கோ. 76*

சிந்தடி வஞ்சிப் பாவிற்குச் செய்யுள் :

'கடித்தாமரைக் கண்ணன்விழிக் கமலந்தர
அடித்தாமரைச் சுடர்ப்பருதி அளித்தருளினை ;
அதனால்,
புதுமலர்ப் பொழில்தில்லை வாண !
உதவியின் வரைத்தோ ? அடிகள்கைம் மாறே.'

– சி. செ. கோ. 77

## ஒத்த நூற்பாக்கள்

'தூங்கல்ஓசை வஞ்சி ஆகும்' – தொ. பொ. 396

'தன்தளை பாதம் தனிச்சொல் சுரிதகம்
என்றிவை நான்கும் அடுக்கிய தூங்கிசை
வஞ்சி எனப்பெயர் வைக்கப் படுமே'. – காக்கை

'தூங்கல் இசையாய்த் தனிச்சொல் சுரிதகம்
தான்பெறும் அடிதளை தழீஇவரை வின்றாய்
எஞ்சாது அமைவது வஞ்சிப் பாவே.' – அவிநயம்

'தூங்கல் ஓசை நீங்கா தாகி
நாற்சீர் நிரம்பா அடியிரண்டு உடைத்தாய்
மேற்சீர் ஓதிய ஐஞ்சீர் பெற்றுச்
சுரிதகம் ஆசிரியம் உரியதனின் அடுத்து
வந்த தாயின் வஞ்சிப் பாவே.' – மயேச்சுரம்

'மன்னவ னென்ப தாசிரி யம்மே
வெண்பா முதலா நால்வகைப் பாவும்
எஞ்சா நாற்பால் வருணர்க் குரிய.' – வாய்ப்பியம்

முழுதும் – யா. வி. 90

'தனிச்சொல் வந்து, மறைதலில் வாரத்தினால் இறும்வஞ்சி.'
– யா. கா. 35

'சிந்தும் குறளும் அடிஎன்பர் வஞ்சிக்குச் சீர்தனிச்சொல்
அந்தம் சுரிதகம் ஆசிரியத்தான் மருவும்.' – வீ. சோ. 119

'வஞ்சிக்கு ஓசை வழங்கும் தூங்கலே;
தன்சீர் தன்தளை தவிர்ந்து பிறபெறும்
குறளடி சிந்தடி கொண்டு மூவடி
குறையா மூன்றனமேல் கூறில் பெருகத்
தனிச்சொலும் அகவலும் தழுவலோடு இறுமே.'
— தொ. வி. 237

'தூங்கல் இசையன வஞ்சி மற்றவை
குறளடி சிந்தடி கொடுவரும் எனலே.' — மு. வீ. யா. செ. 52

'தூங்கல் ஏந்திசை பிரிந்திசை அகவல்
ஆகும் என்மனர் அறிந்திசி னோரே.' — 55

'ஒன்றிய வஞ்சித் தளையான் ஒழுகுவது
ஏந்திசைத் தூங்கல் எனப்படும் எனலே.' — 56

'ஒன்றாத வஞ்சித் தளையான் வருவது
பிரிந்திசைத் தூங்கல் எனப்பெயர் பெறுமே.' — 57

'இவ்விரு தளையும் பிறவும் விரவித்
தொடருவது அகவல் தூங்கல் எனலே.' — 58

'இருசீ ரடிஎனைத் தானும் வந்து
தனிச்சொல் பெற்றக வற்சுரி தகத்தால்
வருவது குறளடி வஞ்சி ஆகும்.' — 53

'சிந்தடி யாகத் தனிச்சொல் பெற்றே
அகவல் சுரிதகத் தாலே முடிவது
சிந்தடி வஞ்சியாம் செப்புங் காலே.' — 54

31

## வஞ்சிப்பா இனம்

741. குறள்அடி நான்மையின் கோவை மூன்றாய்
வருவன வஞ்சித் தாழிசை ஆதலும்,
ஆங்குஅவை தனிவரின் அதன்துறை ஆதலும்,
பாங்குஅமை சிந்தடி நான்காய் நடப்பது
வஞ்சி விருத்தம் ஆதலும் மரபே.

இது மேல்கூறிய வஞ்சிப்பாவிற்கு இனம் ஆகிய தாழிசை துறை விருத்தங்கள் ஆமாறு கூறுகின்றது.

இ-ள் : இருசீரான் ஆகிய நாலடி உடைய செய்யுள் ஒரு பொருள்மேல் மூன்றாய் வருவன வஞ்சித்தாழிசை ஆதலும், இருசீர் அடி நான்காய்த் தனியே வருவது வஞ்சித்துறை ஆதலும், முறை அமைந்த முச்சீர் அடி நான்காய் நடப்பது வஞ்சிவிருத்தம் ஆதலும், இலக்கணமாம் என்றவாறு.

வஞ்சித்தாழிசைக்குச் செய்யுள் :

'மடப்பிடியை மதவேழம்
தடக்கையான் வெயில்மறைக்கும்
இடைச்சுரம் இறந்தார்க்கே
நடக்கும்என் மனனேகாண்.'

'பேடையை இரும்போத்துத்
தோகையான் வெயில்மறைக்கும்
காடகம் இறந்தார்க்கே
ஓடும்என் மனனேகாண்'

'இரும்பிடியை இகல்வேழம்
பெருங்கையான் வெயில்மறைக்கும்
அருஞ்சுரம் இறந்தார்க்கே
விரும்பும்என் மனனேகாண்' யா. கா. 35 மே.

எனவும்,

வஞ்சித் துறைக்குச் செய்யுள் :

'மைசிறந்தன மணிவரை
கைசிறந்தன காந்தளும்
பொய்சிறந்தனர் காதலர்
மெய்சிறந்திலர் விளங்கிழாய்' - யா. கா. 35 மே.

எனவும்,

**வஞ்சி விருத்தத்திற்குச் செய்யுள் :**

**'சோலை ஆர்ந்த சுரத்திடைக்**
**காலை ஆர்கழல் ஆர்ப்பவும்**
**மாலை மார்பன் வருமாயின்**
**நீலை உண்கணிவள் வாழுமே.'** – யா. கா. 25 மே.

**எனவும் வரும்.** (32)

விளக்கம்

*குறளடி நான்காய் ஒரு பொருள் மேல் மூன்றடுக்கி வந்தமையால் வஞ்சித்தாழிசை ஆயினதற்குச் செய்யுள் :*

*'பிணியென்று பெயராமே*
*துணிநின்று தவம்செய்வீர் ;*
*அணிமன்றல் உமைபாகன்*
*மணிமன்று பணியிரே.'*

*'என்னென்று பெயராமே*
*கன்னின்று தவம்செய்வீர் ;*
*நன்மன்றல் உமைபாகன்*
*பொன்மன்று பணியிரே.'*

*'அரிதென்று பெயராமே*
*வரைநின்று தவம்செய்வீர் ;*
*உருமன்றல் உமைபாகன்*
*திருமன்று பணியிரே.'* – *சி. செ. கோ. 78*

*குறளடி நான்காய்த் தனித்து வந்தமையாலான வஞ்சித்துறைக்குச் செய்யுள் :*

*பொன்செய் மன்றில்வாழ்*
*கொன்செய் கோலத்தான்*
*மின்செய் தாள்தொழார்,*
*என்செய் கிற்பரே?'* – *சி. செ. கோ. 79*

சிந்தடி நான்காய் வந்தமையால் ஆன வஞ்சிவிருத்தத்திற்குச் செய்யுள் :

'ஒன்றி னம்பர லோகமே
ஒன்றி னம்பர லோகமே;
சென்று மேவருந் தில்லையே
சென்று மேவருந் தில்லையே.' —சி. செ. கோ. 80

## ஒத்த நூற்பாக்கள்

'ஒன்றினை நான்மை உடைத்தாய்க் குறளடி
வந்தன வஞ்சித் துறையெனல் ஆகும்.' — காக்கை

'குறளடி நான்கிவை கூடின ஆயின்
முறைமையின் அவ்வகை மூன்றிணைந்து ஒன்றி
வருவன வஞ்சித் தாழிசை ஆகும்.' — காக்கை

'எஞ்சா இருசீர் நாலடி மூன்றெனில்
வஞ்சித் தாழிசை; தனிவரின் துறையே.' — சிறுகாக்கை

'இருசீர் நாலடி மூன்றிணைந்து இறுவது
வஞ்சித் தாழிசை; தனிவரின் துறையே.' — அவிநயம்

'இருசீர் நாலடி மூன்றிணைந்து ஒன்றி
வருவது வஞ்சித் தாழிசை; தனி நின்று
ஒருபொருள் முடிந்தது துறைஎன மொழிப.' — மயேச்

'குறளடி நான்மையின் கோவை மூன்றாய்
வருவன வஞ்சித் தாழிசை; தனிவரின்
துறைஎன மொழிப, துணிந்திசி னோரே.' — யா. வி. 91

'முச்சீர் நாலடி ஒத்தவை வரினே
வஞ்சி விருத்தம் என்றனர் கொளலே.' — சிறுகாக்கை

'தன்சீர் நிலையின் தளைதம தழீஇய
இன்பா என்ப இயல்புணர்ந் தோரே
ஏனவை விரவின் இடைஎனப் படுமே
தானிடை இல்லது கடைஎனப் படுமே.' — மயேச்சுரம்

*'சிந்தடி நான்காய் வருவது வஞ்சியது*
*எஞ்சா விருத்தம் என்மனூர் புலவர்.'* – *யா. வி. 92*

*'குறளடி நான்கின மூன்றொரு தாழிசை; நோதில் வஞ்சித்*
*துறைஒரு வாது தனிவரு மாய்விடின்; சிந்தடி நான்கு*
*அறைதரு காலே அமுதே! விருத்தம்.'* – *யா. கா. 35*

*'துன்னுங் குறளடி நான்குவஞ் சித்துறை; சிந்தடிநான்கு*
*உன்னும்விருத்தம்; துறைமூன் றுஒருபொருள் தாழிசையாம்.'*
– *வீ. சோ. 125*

*'வஞ்சித் தாழிசை வருங்குறள் அடிநான்கு*
*ஆகித்தான் மூன்றாய் அடுக்கும்ஓர் பொருளே.'*
– *தொ. வி. 246*

*'வஞ்சித் துறைகுறள் அடிநான்கு ஒத்ததே.'* – *242*
*'விருத்த இலக்கணம் வஞ்சி சிந்தடி.'* – *248*

*'குறளடி நான்காய் ஒருபொருள் மேல்மூன் று*
*அடுக்கி வருவது வஞ்சித் தாழிசை.'* –*மு.வீ.யா.செ. 58*

*'இருசீர் அடிநான் காய்வரல் வஞ்சித்*
*துறையாம் எனப்பெயர் சொல்லப் படுமே.'* – *59*

*'சிந்தடி நான்காய்ச் செய்வது வஞ்சி*
*விருத்தம் என்மனூர் மெய்யுணர்ந் தோரே.'* – *60*
*32*

## தளை முதலியன கெடுவழி அலகிடும் முறைமை

**742.** **தளைசீர் வண்ணம் தாம்கெட வரினே**
**குறுகிய இகரமும் குற்றியல் உகரமும்**
**அளபெடை ஆவியும் அலகுஇயல் பிலாமையும்,**
**ஐகான் குறுகின் குறில்இயல்பு எய்தலும்,**
**ஆய்தமும் ஒற்றும் அளவுஎழூஉ நிற்புழி**
**வேறுஅலகு எய்தும் விதியின ஆதலும்,**
**ஒற்றுஅளபு எழாவழிப் பெற்றஅலகு இன்மையும்,**
**பெற்றிஎன்று உரைப்பர் கற்றுணர்ந் தோரே.**

நிறுத்த முறையானே எழுத்து முதலிய அறுவகை உறுப்பு இலக்கணமும், பாவும் பாஇனமும் ஆகிய இருவகைச் செய்யுள் இலக்கணமும் உணர்த்தி, அவற்றின் ஒழிபு இலக்கணம் உணர்த்துவான் புகுந்தவற்றுள் இஃது ஒரு சார் எழுத்துக்கட்கு ஆவது ஓர் இலக்கணம் கூறுகின்றது.

இ–ள் : தளையும் சீரும் ஓசையும் மேற்கூறிய இலக்கணத்தொடு மாறுகொள்ள வருவழிக் குற்றிய லிகரமும் குற்றியலுகரமும் உயிரளபெடையும் அலகு காரியம் பெருமையும்,

ஐகாரம் குறுகிய இடத்துக் குற்றெழுத்தே போலக் கொண்டு அலகிடப்படுதலும்,

ஆய்தமும் ஒற்றும் அளபு எடுத்து நிற்புழி ஓர் அலகு பெறும் தன்மைய ஆதலும்,

ஒற்றுக்கள் அளபு எழாவழி முற்கூறிய அலகு பெருமையும் இலக்கணம் என்று கூறுவர் கற்றோர் என்றவாறு.

'ஒற்று அளபு எழாவழிப் பெற்ற அலகு இல' எனவே அவ்வொற்றின்பாற்படும் ஆய்தமும் அளபு எழாவழி அலகு பெருமையும் பெற்றும்.

நிரை நிரை நேர் நிரை
'குழ,லினி தியா,ழினி தென்பதம் மக்கள்
மழலைச்சொற் கேளா தவர்' – குறள் 66

எனவும்,

நிரைநேர்நேர் நேர் நிரை
'அருளல்ல தியாதெனின் கொல்லாமை கோறல்
பொருளல்ல தவ்வூன் தினல்' – குறள் 254

எனவும் வரும்.

இவற்றுள் குற்றியலிகரம் வந்து முறையே ஆசிரியத்தளையும் கலித்தளையும் தட்டு வெள்ளையுள் பிறதளை விரவா என்னும் இலக்கணத்தோடு மாறுபட்டு வெண்பா அழிய நிற்றலின், ஈண்டுக் குற்றியலிகரத்தை இவ் விலக்கணத்தான் அலகு பெறாது என்று களைய வெண்தளையாம்.

நேர் நிரை நேர் நேர் நேர் நேர்

'சிறுநன்றி இன்,றிவர்க்,கியாம், செய்தக்கால் நாளைப்
பெறுநன்றி பின்னும் பெரிதென் – றுறுநன்றி
தானவாய்ச் செய்வதூஉம் தானமன் றென்பவே;
வானவாம் உள்ளத் தவர்' – யா. கா. 38 மே.

இதனுள் 'இன்றிவர்க்கியாஞ் செய்தக்கால்' என்புழிக் குற்றிய லிகரம் வந்து வஞ்சி உரிச்சீராய் வெள்ளையுள் நிரை ஈற்று உரிச்சீர் விரவா என்னும் இலக்கணத்தோடு மாறுபட்டு வெண்பா அழிய நிற்றலின், ஈண்டுக் குற்றிய லிகரத்தை இவ்விலக்கணத்தான் அலகு பெறாது என்று களைய வெண்சீராம்.

நேர் நேர் நேர் நேர் நேர் நேர்

'கொன்,று, கோ, டு, நீ, டு, குருதிபாயவும்,
சென்,று, கோ, டு, நீ, டு, செழுமலைபொருவன
வென்,று, கோ, டு, நீ, டு, விறல்வேழம்,
என்,று, மூ, டு, நீ, டு, பிடியுளபோலும்,
அதனால்,
இண்டிடை இரவிவண் நசைஇவரின்
வண்டுண் கோதை உயிர்வா ழலளே' – யா. கா. 38 மே.

என இக்குறளடி வஞ்சிப்பாவினுள் குற்றுகரம் வந்து ஆறசைச்சீர் ஆயின, அவ்வாறு வருக என்னும் ஓத்து இலாமையால் ஆண்டுக் குற்றுகரங்களை இவ்விலக்கணத் தான் அலகுபெறா என்று களையச் சீர் சிதையாதாம்.

'இடைநுடங்க ஈர்ங்கோதை பின்தாழ வாட்கண்
புடைபெயரப் போழ்வாய் திறந்து - கடைகடையின்
நேர் நேர்
உப்,போஒஒ, எனஉரைத்து மீள்வாள் ஒளிமுறுவற்
கொப்போநீர் வேலி உலகு' – யா. கா. 38 மே.

இதனுள் உப்போஒஒ என்புழிப் பண்டமாற்றின்கண் அளபெடை வந்து கலித்தளைதட்டு வெண்பா அழிய வந்தமையான் ஈண்டு உயிர்அளபெடையை இவ் விலக்கணத்தான் அலகு பெறாது என்று நெட்டெழுத்தே போலக் கொண்டு அலகிடத் தளை சிதையாதாம்.

நேர் நேர் நேர்
'பிண்,ணுக், கோஒஒ, என்னும் பிணுவின் முகத்திரண்டு
கண்நாக் குடையனபோல் கட்டுரைக்கும்; – பிண்ணுக்குக்
கொள்ளீரோ? என்பாள்தன் கூரெயிறு, காளையரை
உள்ளீர்வ போல உள' - யா. வி. 34 மே.

எனவும்,

'பல்லுக்குத் தோற்ற பனிமுல்லை; பைங்கிளிகள்
சொல்லுக்குத் தோற்றின்னம் தோற்றிலவால்;-நெல்லுக்கு
நேர் நேர் நேர்
நூ,றேஒஒ,நூ, றென்பாள் நுடங்கிடைக்கும் மென்முலைக்கும்
மாறேமா லன்றளந்த மண்' – யா. கா. 38 மே.

எனவும்,

நிரை நேர் நேர்
'களிச்,சாத்,தாஅஅ, என்றியான் கண்காண நின்று
விளித்தாலும் வாரான் விரைந்து' – யா. வி. 4 மே.

எனவும் வரும்.

இவற்றுள் பண்டமாற்றின்கண்ணும் விளித்தற் கண்ணும் அளபெடைகள் வந்து வெண்பாவினுள் நாலசைச்சீராய் வண்ணம் அறுக்குங்கால்,

'செப்பல் இசையன வெண்பா' - இ. வி. செ. 19

என்னும் இலக்கணத்தோடு மாறுகொண்டு செப்பல் ஓசை அழியநிற்கும் ஆகலின், ஆண்டு உயிர்அளபெடைகளை இவ்விலக்கணத்தான் அலகுபெரு என்று களைய வண்ணம் சிதையாதாம்.

'இயல்' என்ற மிகையானே அலகிடும் இடத்துக் குற்றியலிகரக் குற்றியலுகரங்கள் ஒற்று இயல்பின-வாயும், உயிர் அளபெடை நெட்டெழுத்து இயல்பிற்ருயும் நிற்றல் கொள்க.

இனி 'எதிர் மறுத்தல்' என்னும் இலக்கணத்தான் சீரும் தளையும் திருந்தின் அலகுபெறும் என்பதாயிற்று. அங்ஙனம் அலகு பெறும் இடத்துத் 'தளைசீர் வண்ணம்' என முறை பிறழக்கூறிய அதனுல் குற்றுகரக் குற்றிகரங்கள் குற்றெழுத்தின் பயத்தவாய் அலகு பெறும் எனக் கொள்க.

உயிரளபெடை அலகு பெறுமாறு மேல் பெறப்படும். குற்றிகரக் குற்றுகரங்கள் குற்றெழுத்தின் பயத்தவாய் அலகு பெறுமாறு :

நேர்நிரை
'வந்,துநீ, சேரின் உயிர்வாழும்; வாராக்கால்
நேர் நிரை
முந்,தியாய் பெய்த வளைகழலும்; — முந்தியாம்
கோளானே கண்டனம்; கோல்குறி யாய்!இன்னும்ஓர்
நாளானே நாம்புணரு மாறு' - யா. கா. 38 மே.

இதனுள் வந்துநீ என்புழியும் முந்தியாய் என்புழியும் காண்க.

'நடைக் குதிரை ஏறி, நறுந்தார் வழுதி
நிரை நேர் நேர்
அடைப்,பை,யாய், கோரு எனலும், – அடைப்பையான்

சுள்ளல் சிறுகோல் கொடுத்தான்; தனைப்பெறினும்
செல்லா தியாங்காண் டலே' – யா. கா. 38 மே.

எனவும்,

நேர் நிரை நேர்
'கெண், டைஅய, யே வென்ற கிளரொளி உண்கணுள்
நேர் நிரை நேர்
பண், டைய, ளே அல்லள் படி' – யா. கா. 38 மே.

எனவும்,

நேர் நிரை நேர்
'அன், னையை,யான், நோவ தெவன்?மாண் அணியிழாய்!
நேர் நிரை நேர்
புன், னையை,யான் நோவன் புலந்து' – யா. கா. 38 மே.

எனவும் வரும் இவற்றுள் ஐகாரக்குறுக்கம் குற்றெழுத்தே போல நின்று குறிலோடும் நெடிலோடும் கூடி நிரைஅசை ஆயினவாறு காண்க.

நேர் நேர்
'எஃ,ஃ, கிலங்கிய கையராய், இன்னுயிர்
நேர் நேர்நேர்
வெஃ,ஃ, கு வார்க்கில்லை வீடு' – யா. கா. 38 மே.

எனவும்,

நேர் நேர்
'கண்,ண் கருவிளை, கார்முல்லை கூரெயிறு,
பொன்,ன் பொறிசுணங்கு, போழ்வாய் இலவம்பூ,
மின்,ன் நுழைமருங்குல், மேதகு சாயலாள்,
என்,ன்? பிறமகளா மாறு' – யா. கா. 38 மே.

எனவும் ஆய்தமும் ஒற்றும் அளபு எழுந்து ஓர் அலகு பெற்றவாறு காண்க.

'உணர்ந்தார்க் குணர்வரி யோன்தில்லைச் சிற்றம் பலத்தொருத்தன்
குணந்தான் வெளிப்பட்ட கொவ்வைச் செவ்வாயிக் கொடி
யிடைதோள்

புணர்ந்தால், புணருந் தொறும்,பெரும் போகம்;பின்னும் புதிதாய்,
மணந்தாழ் புரிகுழ லாளல்குல் போல, வளர்கின்றதே'

— கோவை 9

என இவ்வாறு ஈரொற்று உடன்நிலையாய் நிற்பினும் அளபு எழாமையின் குற்றெழுத்தின் பயத்தவாய் அலகு பெறுமை காண்க.

'ஈர்ஒற்று ஆயினும் மூஒற்று ஆயினும்
ஓர்ஒற்று இயல என்மனார் புலவர்'

என்றார் பிறரும் எனக் கொள்க. (33)

விளக்கம்

'*தளைசீர் வண்ணம் தாம்கெட வரினே
குறுகிய இகரமும் குற்றிய லுகரமும்
அளபெடை ஆவியும் அலகியல் பிலவே.*' — *யா. வி. 4*

'*சீர்தளை சிதைவுழி ஈருயிர்க் குறுக்கமும்
நேர்தல் இலவே உயிரளபெடையும்.*' — *மயேச்சுரம்*

'*இஉ இரண்டன் குறுக்கம் தளைதப
நிற்புழி ஒற்றாம் நிலையின ஆகும்.*'

'*உயிரள பேழும் உரைத்த முறையான்
வருமெனின் அவ்வியல் வைக்கப் படுமே.*' — *காக்கை*

'*உயிரள பெடையும் குறுகிய உயிரின்
இகர உகரமும் தளைதபின் ஒற்றாம்;
சீர்தப வரினும் ஒற்றியற் றாகும்.*' — *அவிநயம்*

'*ஐந்தா றசையி னருகி உகரத்தின்
வந்தசீர் ஒன்றிரண்டு ஒப்பித்து — நந்துவித்தால்
வஞ்சிப்பா விற்கியலு நாலசைச்சீர், வண்ணுரிச்சீர்
தங்கி விரவத் தகும்.*'

'*அளபெடை அசைநிலை ஆகலும் உரித்தே.*'

— *தொ. பொ. 329*

'ஒற்றள பெடுப்பினும் அற்றென மொழிப.' – தொ. பொ. 330

'ஆய்தமும் ஒற்றும் அளபெழூஉ நிற்புழி
வேறலகு எய்தும் விதியின ஆகும்.' – காக்கை

'ஒற்றளபு எழாவழிப் பெற்றஅலகு இலவே.'

'சீரும் தளையும் சிதையின் சிறியஇஉ அளபோடு
ஆரும் அறிவர் அலகு பெருமை; ஐ காரம்நைவேல்
ஓரும் குறிலியல், ஒற்றள பாய்விடின் ஓரலகாம்;
வாரும் வடமுந் திசழும் முகிழ்முலை வாணுதலே.'
- யா. கா. 38

'தனிநிலை ஒற்றிவை தாம்அலகு இலவே
அளபெடை அல்லாக் காலை யான.' – யா. வி. 3; மே.
– யா. கா. 38 மே.

'ஈரொற் றுயினும் மூவொற் றுயினும்
ஓரொற் றியல என்மனர் புலவர்.' ,,

'அளபெழின் அல்லதை ஆய்தமும் ஒற்றும்
அலகியல்பு எய்தா என்மனர் புலவர்.' – அவிநயம்

'தளையும் சீரும் தபவரின் குறுகிய
இஉ ஐயும் இசைபெறு என்ப.' – மு. வி. யா. ஒ. 1

'அளபெடை ஆவியும் அவற்றோ ரற்றே' – 2

'ஆய்தமும் ஒற்றும் அளபெழ நிற்புழி
வேறலகு எய்தும் விதியின ஆகும்.' – 3
33

## விட்டிசையும் அளபெடையும்

743. விட்டிசைத் தன்றி முதற்கண் தனிக்குறில்
நேர்ஆ காமையும், நெட்டெழுத்து அளபுஎழின்
நேர்நேர் ஆதலும், குறில்நெடில் அளபுஎழின்
நிரைநேர் ஆதலும், நெறிஎனப் படுமே.

**இது நிறுத்தமுறையானே ஒருசார் அசைகட்கு ஆவது ஓர் இலக்கணம் கூறுகின்றது.**

இ-ள் : மேல் பொதுவகையான் தனிக்குறில் நேர்அசையாம் என்றார் ஆயினும் விட்டுஇசைத்து நின்ற இடத்து அல்லது மொழிமுதற்கண் நின்ற குற்றெழுத்து நேர்அசை ஆகாமையும்,

நெட்டெழுத்து அளபு எடுத்துவரும் எனின் அவ்விரண்டும் நேர்நேர் ஆதலும், குற்றெழுத்தோடு புணர்ந்த நெட்டெழுத்து அளபு எழுந்தால் அவ்விரண்டும் நிரைநேர் ஆதலும் முறை எனப்படும் என்றவாறு.

எனப்படும் என்ற மிகையானே, விட்டு இசைத்து வருவது குறிப்பின் கண்ணும் ஏவற்கண்ணும் தற்சுட்டின் கண்ணும் வினாவின்கண்ணும் சுட்டின்கண்ணும் எனவும், விட்டுஇசைத்து நின்ற இடத்து மற்றொன்றினோடு கூடி நிரைஅசை ஆகாது எனவும் கொள்க.

'உண்ணான் ஒளிநிறான், ஓங்கு புகழ்செய்யான்
துன்னருங் கேளிர் துயர்களையான், — கொன்னே
நேர் நேர்
வழங்கான், பொருள்காத் திருப்பானேல், அ, ஆ
இழந்தானென் றெண்ணப் படும்' – நாலடி. 9

இதனுள் அஆ என்புழி அருளின்கண் குறிப்பின் விட்டு இசைத்து வந்த குற்றெழுத்து மொழி முதற்கண் நேர்அசை ஆயினவாறு காண்க.

'வெறிகமழ் தண்புறவின் வீங்கி உகளும்
மறிமுலை உண்ணாமை வேண்டிப் — பறிமுன்கை
நேர் நேர்
அ, உ அறியா அறிவில் இடைமகனே!
நேர் நிரை நேர்
நொ, அலை, யல்; நின்ஆட்டை நீ' - யா. கா. 39 மே.

எனத் தற்சுட்டின்கண்ணும், ஏவற்கண்ணும்,

நேர் நிரை நேர் நேர் நிரை நேர் நேர் நிரை நேர்
'அ,அவ,னும் இ,இவ,னும் உ,உவ,னும் கூடியக்கால்
நேர் நிரை நேர்
எ,எவ,னே வெல்வார் இகல்?' – யா. கா. 39 மே.

எனச் சுட்டின்கண்ணும் வினாவின்கண்ணும் விட்டு இசைத்துவந்த குற்றெழுத்துக்களும் அன்ன.

விட்டு இசையாதவழி மொழிமுதற்கண் தனிக்குறில் குறிலோடும் நெடிலோடும் கூடி நிரைஅசையாம் என்பதாயிற்று.

நிரை நேர்
'யர,ல வழள இடையினமாம் ஏனே
மரபு பிழையாத வைப்பு' – யா. வி. 7 மே.

எனவும்,

நிரை நேர் நேர்
'அம,ருந்,து, தானே அதியர்தம் கோவே
நிரை நேர் நேர்
தும,ருந்,து தூயனவே கொண்டு' – யா. வி. 7 மே.

எனவும் வரும். இவற்றுள் தற்சுட்டின் கண்ணும் ஏவற்கண்ணும் குற்றெழுத்தினோடு கூடி நிரை அசை ஆயினவாறு காண்க. [து – உண் – இது ஏவல்]

இனி நெட்டெழுத்து அளபு எழின் நேர் நேர் ஆதற்கும் குறில்நெடில் அளபுஎழின் நிரைநேர் ஆதற்கும் செய்யுள்:

நேர் நேர் நிரை நேர் நேர்
'ஏ,எர் சிதைய அழாஅல்; எலா,அ,நின்,
சேயரி சிந்தின கண்' – யா. கா. 39 மே.

எனவரும்.

உரையின் கோடலான் பின்பு நின்ற குற்றெழுத்தினோடு கூடி நிரைஅசை ஆகாது எனக்கொள்க.

'தனிநிலை அளபெடை நேர்நேர் இயற்றே'
'இறுதிநிலை அளபெடை நிரைநேர் இயற்றே'

என்றார் பிறரும் எனக் கொள்க. இன்னும் அதனானே

நே நே நே
'தூ,உ,உ,த் தீம்புகைத் தொல்விசும்பு போர்த்தது கொல்'
– மலைபடு. இறுதி வெண்பா

நிரை நேர் நேர்
'இலா,அ,அர்,க் கில்லை தமர்' – நாலடி 283
நிரை நேர் நேர்
'செரு,அ,அய் வாழி என் நெஞ்சு' – குறள் 1200

எனவும் சிறுபான்மை நேர் நேர் நேர் ஆதலும், நிரை நேர்நேர் ஆதலும் கொள்க. (34)

## ஒத்த நூற்பாக்கள்

*'தற்சுட்டு ஏவல் குறிப்புஇவை அவ்வழி*
*முற்றுத் தனிக்குறில் முதலசை ஆகா.'* – பல்காயம்

*'ஏவல் குறிப்பே தற்சுட்டு அல்வழி*
*யாவையும் தனிக்குறில் முதலசை ஆகா;*
*சுட்டினும் வினவினும் உயிர்வரு காலை*
*ஒட்டி வருஉம் ஒருசாரும் உளவே.'* – மயேச்சுரம்

*'ஒற்றின் றாகியும் குறிப்பே ஏவல்*
*தற்சுட்டு அல்வழி முதல்தனி நேராம்.'*
*'குறிப்பே ஏவல் தற்சுட்டு அல்வழி*
*தனிக்குறில் மொழிமுதல் தனியசை இலவே.'* – யா. வி. 7

*'விட்டிசைத் தல்லால் முதற்கண் தனிக்குறில் நேரசையென்று*
*ஒட்டப் படாததற் குண்ணென் உதாரணம்; ஓசைகுன்று*
*நெட்டளஈ பாய்விடின் நேர்நேர்; நிரையொடு நேரசையாம்*
*இட்டத்தி றற்குறில் சேரின்; இலக்கியம் ஏர்சிதைவே.'*
– யா. கா. 93

'விட்டிசைத் தல்லா விடின்முதல் தனிக்குறில்
நேரசை ஆகா தென்மனூர் புலவர்.' – மு. வீ. யா. ஒ. 4

'முதல்நிலை அளபெடை நேர்நே ராங்கடை
நிலையள பெடைநிரை நேரா கும்மே.' – 5

34

## சீர்தளைகட்கு ஆவதோரிலக்கணம்

744. நிரைநடு ஆகிய வஞ்சி உரிச்சீர்
கலியினொடு அகவலின் கடிதலும், கலிவயின்
நேர்ஈற்று இயற்சீர் நிலவுதல் இன்மையும்,
ஏனைய எல்லாம் எவ்வகைச் சீரொடும்
தாம்மயங் குதலும், தளையொடு மயங்கலும்,
வெள்ளையுள் நிரைஈற்று உரிச்சீர் விரவா
சொல்லிய வெள்ளையுள் பிறதளை தொடரா
என்றலும், ஒன்றிய இலக்கணம் என்ப.

இஃது ஒருசார் சீர்தளைகட்கு ஆவது ஓர் இலக்கணம் கூறுகின்றது.

இ-ள் : நிரை நடுவாகிய வஞ்சி உரிச்சீர் இரண்டும் கலிப்பாவினுள்ளும் ஆசிரியப்பாவினுள்ளும் வாரா என வரைதலும்,

நேர்நேரும் நிரைநேரும் ஆகிய நேர் ஈற்று இயற்சீர் இரண்டும் கலிப்பாவினுள் வருதல் இன்மையும்,

ஒழிந்த சீர் எல்லாம் எவ்வகைப்பட்ட சீரோடும் விரவி எல்லாப் பாவினுள்ளும் பா இனத்துள்ளும் வருதலும்,

தத்தம் தளையோடு பிறதளை விரவி எல்லாப் பாவினுள்ளும் பா இனத்துள்ளும் வருதலும்,

எல்லாச் சீரும் எல்லாத் தளையும் எல்லாப் பாவினுள்ளும் பா இனத்துள்ளும் புக்கு மயங்கும் எனப் பட்டனவேனும் ‘வெண்பாவினுள் வஞ்சி உரிச்சீர் வந்து மயங்கா’ என வரைந்து ஓதிய வெண்பாவினுள், தனக்கு ஓதிய தளையே அன்றி வேற்றுத்தளை வந்து விரவா என்று சொல்லுதலும், பொருந்திய இலக்கணமாம் என்று கூறுவர் ஆசிரியர் என்றவாறு.

தாம் என்ற மிகையானே, நேர்ஈற்று இயற்சீர் வெண்கலியுள்ளும் கொச்சகக்கலியுள்ளும் வருதலும், நிரை நடுவாகிய வஞ்சி உரிச்சீர் கொச்சகத்து அருகி வருதலும் கொள்க.

விலக்கியன வாராமையும் விதித்தன வருதலும் மேல்காட்டிய செய்யுளகத்தும் பிற சான்றோர் செய்யுளகத்தும் கண்டு கொள்க.

‘குலாவணங்கு வில்எயினர் கோன்கண்டன் கொல்லி
நிலாவணங்கு வெண்மணல்மேல் நின்று,-புலாலுணங்கல்
நே நே நே நேர்
கொள்ளும்புள் காக்கின்ற கோ,வின்,மை,யோ, நீபிறர்
உள்அம்புக் காப்ப துரை’ – *யா. கா.* 40 மே

[கோவின்மையோ என்பதனைத் தேமாந்தண் பூவாகவும் தேமாங்கனியாகவும் கொள்ளலாம்.]

என்றல் தொடக்கத்து ஒருசார் வெண்பாவினுள் வஞ்சி உரிச்சீர் வந்ததேனும் திருவள்ளுவப் பயனும் நாலடி நானூறும் முதலாகிய கீழ்க்கணக்கினுள்ளும் முத்தொள்ளாயிரம் முதலாகிய பிறசான்றோர் செய்யுளுள்ளும் வஞ்சி உரிச்சீர் வந்திலாமையானும், வேற்றுத்தளை வெண்பாவினுள் விரவுக என ஓத்து இலாமையானும், இத் தொடக்கத்தன குற்றம் அல்லது குணம் ஆகா என்பதே தொல்லாசிரியர் துணிவு. அதுவே இந்நூலார்க்கும் உடன்பாடு. (35)

### விளக்கம்

'காமர் கடும்புனல் கலந்தெம்மோ டாடுவாள்' என்ற குறிஞ்சிக் கலியுள் 'காமர்' என்ற மாஞ்சீர் வந்தது. 'திரைந்து திரைந்து திரைவரத்திரள் முத்தங்கரை வாங்கி' என்னும் கொச்சகக் கலியுள் சிறுநுளைச்சியர் என நிரை நடுவாகிய வஞ்சி உரிச்சீர் வந்தது. [யாப் - *16* – உரை]

### ஒத்த நூற்பாக்கள்

'விரவியும் அருகியும் வேறும் ஓரோவழி
மருவியும் பெறுதும் வழங்குமன் அவையே.' – யா. வி. *15*

'நிரைநடு வியலா வஞ்சி உரிச்சீர்
கலியினு டகவலில் கடிவரை இலவே.' – யா. வி. *16*

'நாலசைச்சீர் வெண்பாவில் நண்ணா அயற்பாவில்
நாலசைச்சீர் நேரீற்று நாலிரண்டாம் – நாலசைச்சீர்
ஈறுநிரை சேரின் இருநான்கும் வஞ்சிக்கே
கூறினர் தொல்லோர் குறித்து.'

'இயற்சீர் உரிச்சீர் எனுமிரு சீரும்
மயக்கம் உண்மையின் நால்வகைப் பாவும்
இனத்தின் மூன்றும் இனிதின் ஆகும்.' – காக்கை

'உரிச்சீர் விரவ லாயும் இயற்சீர்
நடக்குந ஆசிரி யத்தொடு வெள்ளை
அந்தந் தனியா இயற்சீர் கலியொடு
வஞ்சி மருங்கின் மயங்குதல் இலவே.' ,,

'நாலசை யானடை பெற்றன வஞ்சியும்
ஈரொன்று இணைதலும், ஏனுழி ஒன்றுசென்று
அந்தம் இணையசை வந்தன கூறிய
வஞ்சிக் குரைத்தன ஆதலும்,
ஆகுந என்ப, அறிந்திசி னோரே.' ,,

'இணைநடு இயலா வஞ்சி உரிச்சீர்
இணையுள ஆசிரி யத்தன ஆகா.' – காக்கை

'நடுநேர் இயலா வஞ்சி உரிச்சீர்
உரிமை உடைய ஆசிரியத் துள்ளே.' – சிறுகாக்கை

'நேரீற்று இயற்சீர் கலிவயின் இலவே
வஞ்சி மருங்கினும் இறுதியின் இலவே.' – நற்றத்தம்

'ஓசையின் ஒன்றி வரினும்வெண் சீரும்
ஆசிரிய அடியின் குறுகும் என்ப.' – பல்காயம்

'அதனுள் தன்சீர் வெண்சீர் ஒருங்கு
புகலின் கலியுள் பொருந்தும் என்ப.' ,,

'வஞ்சியுள் ஆயின் எஞ்சுதல் இலவே.' ,,

'இயற்சீர் இறுதி நேர்உற்ற காலை
வஞ்சி யுள்ளும் வந்த தாகா
ஆயினும் ஒரோவிடத்து ஆகும் என்ப.' ,,

'கலித்தளை அடிவயின் நேர்ஈற்று இயற்சீர்
நிலைக்குரித் தன்றே தெரியு மோர்க்கே.' – தொ. பொ. 337

'வஞ்சி மருங்கினும் இறுதி நில்லா.' – 338

'உரிமையின் இயற்சீர் மயங்கியும் பாநான்கு
இருமை வேறியல் வெண்பா ஆகியும்
வருமெனும் வஞ்சிக் கலியின்நே ரீற்ற
இயற்சீர் ஆகா என்மனார் புலவர்.' – அவிநயம்

'நிரைஇறு நாலசை வஞ்சியுள் அல்லால்
விரவினும் நேர்ஈற்று அல்லவை நில்லா.' – அவிநயம்

'நேர்நடு இயலா வஞ்சி உரிச்சீர்
ஆசிரி யத்தியல் உண்மையும் உடைய.' – அவிநயம்

'நேர்ஈற்று இயற்சீர் கலிவயின் நேரா
நிரையின் நின்ற நாலசை எல்லாம்
வரைதல் வேண்டும் வஞ்சியின் வழியே.' – மயேச்சுரம்

'நிரைநடு இயலா வஞ்சி உரிச்சீர்
வரைதல் வேண்டும் ஆசிரிய மருங்கின்.' – மயேச்சுரம்

'மாஞ்சீர் கலியுள் புகா,கலிப் பாவின் விளங்கனிவந்து
ஆஞ்சீர் அடையா,அகவ லகத்தும்,அல் லாதவெல்லாம்
தாஞ்சீர் மயங்கும், தளையுமதே, வெள்ளைத் தன்மைகுன்றிப்
போம்சீர் கனிபுகின், புல்லா தயற்றளை ; பூங்கொடியே.'
– யா. கா. 40

'மாஞ்சீர் கலியுள் வரப்பெறு என்ப.' – மு. வி. யா. ஒ. 6
'விளங்கனி கலிப்பா வினுட்புகா எனலே.' – 7
'அகவ லிடத்தும் அடையப் பெறுவே.' – 8
'இவை நீங்கியசீர் எல்லாம் மயங்கும்.' – 9
'எல்லாத் தளைகளும் இவற்றோ ரற்றே.' – 10
'வெண்பாவில் வஞ்சி விரவப் பெறுவே.' – 11
'வெண்பா அயற்றளை விரும்பா தொழுகும்.' – 12
35

## அடி மயக்கம்

745. இயற்சீர் வெள்ளடி வஞ்சி அடிஇவை
மயக்கப் படுதலும், வெண்சீர் வெள்ளடி
கலிஅடி ஒரோவழி அகவலுள் கலத்தலும்,
வெள்ளடி அகவல் கலியுளும், அகவலும்
கலியும் ஒரோவழி வெண்பா அடியும்
வஞ்சியுள் மயங்கி வருதலும், ஐஞ்சீர்
அடிகலி அகவலொடு அருகிவந்து அடுத்தலும்,
கடிநிலை இன்றே கருதுங் காலே.

இது நிறுத்தமுறையானே அடி மயங்குமாறு கூறுகின்றது.

இ-ள் : ஆசிரியப்பாவினுள் இயற்சீர் வெண்டளை யான்வந்த வெண்பா அடியும் வஞ்சி அடியும் வந்து மயங்குதலும், அவ்விருவகை அடியுமே அன்றி வெண்சீர் வெண்டளையான்வந்த வெண்பா அடியும் கலி அடியும் ஒரோவழிவந்து மயங்குதலும்,

கலிப்பாவினுள் வெண்பா அடியும் அகவல் அடியும் வந்து மயங்குதலும்,

வஞ்சிப்பாவினுள் அகவல் அடியும் கலி அடியும் வந்து மயங்குதலும் இவ்விருவகை அடியுமே அன்றி ஒரோவழி வெண்பா அடி வந்து மயங்குதலும்,

ஒருசார் கலிப்பாவினுள்ளும் ஆசிரியப்பாவினுள்ளும் ஐந்துசீர்அடியும் அருகிவந்து அடுத்தலும் நீக்கும் நிலைமை இன்று ஆராயும் இடத்து என்றவாறு.

இயற்சீர் வெள்ளடி மயங்கிய ஆசிரியப்பாவிற்குச் செய்யுள் :

'எறும்பி அளையில் குறும்பல் சுனைய
உலைக்கல் அன்ன பாறை ஏறிக்
கொடுவில் எயினர் பகழி மாய்க்கும்
கவலைத்து என்பஅவர் தேர்சென்ற ஆறே ;
அதுமற்று அவலம் கொள்ளாது
நொதுமல் கழறும்இவ் வழுங்கல் ஊரே'

– யா. கா. 41 மே ; குறுந். 12

என வரும்.

'எறும்பி அளையில் குறும்பல் சுனைய
குறுந்தொடி யாம்செல் சுரம்'

என உச்சரித்து வெள்ளடி ஆமாறு கண்டுகொள்க.

வஞ்சியடி மயங்கிய ஆசிரியப்பாவிற்குச் செய்யுள் :

'இருங்கடல் தானையொடு பெருநிலம் கவைஇ
உடைஇலை நடுவணது இடைபிறர்க் கின்றி
தாமே ஆண்ட ஏமம் காவலர்
இடுதிரை மணலினும் பலரே ; சுடுபிணக்
காடு பதியாகப் போகித் தத்தம்
நாடு பிறர்கொளச் சென்றுமாய்ந் தனரே ;
அதனால்,

நீயும் கேண்மதி! அத்தை, வீயாது
உடம்பொடு நின்ற உயிரும் இல்லை;
மடங்கல் உண்மை மாயமோ அன்றே;
கள்ளி வேய்ந்த முள்ளியம் புறங்காட்டு,
வெள்ளில் போகிய வியலுள் ஆங்கண்,
உப்பிலா அவிப்புழுக்கல்
கைக்கொண்டு பிறக்குநோக்காது
இழிபிறப்பினோன் ஈயப்பெற்று,
நிலங்கல னாக விலங்குபலி மிசையும்
இன்னா வைகல் வாரா முன்னே,
செய்ந்நீ முன்னிய வினையே;
முந்நீர் வரைப்பகம் முழுதுடன் துறந்தே'

– யா. கா. 48 மே; புறநா. 363

என வரும். இதனுள்,

'உப்பிலா அவிப்புழுக்கல்' எனவும் 'கைக்கொண்டு பிறக்குநோக்காது' எனவும் 'இழிபிறப்பினோன் ஈயப் பெற்று' எனவும் வஞ்சிஅடி மயங்கி வந்தவாறு காண்க.

வெண்சீர் வெள்ளடி மயங்கிய ஆசிரியத்திற்குச் செய்யுள்:

'அங்கண் மதியம் அரவின்வாய்ப் பட்டெனப்
பூசல் வாயாப் புலம்புமனைக் கலங்கி,
ஏதில் மாக்களும் நோவர், தோழி,
ஒன்றும் நோவார், இல்லை;
தெண்கடல் சேர்ப்பர் உண்டஎன் நலக்கே' – யா. கா. 41 மே.

என வரும். இதனுள்,

'அங்கண் மதியம் அரவின்வாய்ப் பட்டெனப்
பொங்கிய பூசல் பெரிது'

என்று உச்சரித்து வெள்ளடி ஆமாறு காண்க.

கலிஅடி மயங்கிய ஆசிரியப்பாவிற்குச் செய்யுள்:

'குருகுவெண் டாளி கோடுபுய்த் துண்டென
மாவழங்கு பெருங்காட்டு மழகளிறு காணாது

மருள்பிடி திரிதரும் சாரல்
அருளான் ஆகுதல், ஆயிழை! கொடிதே.' – யா. கா. 41 மே.

எனவரும் இதனுள்,

'மாவழங்கு பெருங்காட்டு மழகளிறு காணாது
தீவழங்கு சுழல்விழிக்கண் சீயம்சென் றுழலுமே'

என்று உச்சரித்துக் கலிஅடி ஆமாறு காண்க.

வெண்பா அடியும் ஆசிரிய அடியும் மயங்கிய கலிப்பாவிற்குச் செய்யுள் :

'காமர் கடும்புனல் கலந்தெம்மோ டாடுவாள்'

என்னும் குறிஞ்சிக்கலியான் (3) உணர்க. இம்மயங்கிசைக் கொச்சகத்துள் வெண்பா அடியும் ஆசிரிய அடியும் மயங்கிவந்தவாறு கண்டுகொள்க.

'நேரிழை மகளிர் உணங்குணாக் கவரும்' – பட். 22

என ஆசிரிய அடியும்,

'வயலாமைப் புழுக்குண்டு வறளடும்பின் மலர்மலைந்து'
– பட். 65-6

எனக் கலி அடியும்,

'கோழி எறிந்த கொடுங்கால் கனங்குழை' – பட். 23

என வெள்ளடியும் பட்டினப்பாலை என்னும் வஞ்சி நெடும்பாட்டினுள் மயங்கி வந்தவாறு காண்க.

ஐஞ்சீர் அடியான் வந்த கலிப்பாவிற்குச் செய்யுள் :

'அணிகிளர் பொறிஅவிர் துத்திமா நாகத் தெருத்தேறித்
துணிஇரும் பனிமுந்நீர் தொட்டுழந்து மலைந்தனையே'
– யா. கா. 42 மே.

எனவும்,

ஐஞ்சீர்அடியான் வந்த ஆசிரியப்பாவிற்குச் செய்யுள் :

'உமணர்ச் சேர்ந்து கழிந்த மருங்கின் அகன்துறை
ஊர்பாழ்த் தன்ன ஓமையம் பெருங்காட்டு

**இன்னு என்றி ராயின்,**
**இனியவோ? பெரும! தமியோர்க்கு மனையே'**

– யா. கா. 42 மே; குறுந். 142

**என வரும். பிறவும் அன்ன. (36)**

## விளக்கம்

*'காமர் கடும்புனல்' என்ற மயங்கிசைக் கொச்சகம்:*

*'காமர் கடும்புனல் கலந்தெம்மோ டாடுவாள்*
*தாமரைக்கண் புதைத்தஞ்சித் தளர்ந்ததனோ டொழுகலான்*
*நீணைக நறும்பைந்தார் தயங்கப்பாய்ந் தருளினால்*
*பூணைகம் உறத்தழீஇப் போதந்தான் அகனகலம்*
*வருமுலை புணர்ந்தன என்பதனால் என்தோழி*
*அருமழை தரல்வேண்டின் தருகிற்கும் பெருமையளே.'*

*'அவனுந்தான்,*
*ஏனல்இதணத் தகிற்புகை உண்டியங்கும்*
*வானூர் மதியம் வரைசேரின் அவ்வரைத்*
*தேனின் இறாலென ஏணி இழைத்திருக்கும்*
*கானக நாடன் மகன்.'*

*'சிறுகுடி யீரே! சிறுகுடி யீரே!*
*வள்ளிகீழ் வீழா; வரைமிசைத் தேன்தொடா;*
*கொல்லை குரல்வாங்கி ஈனா; மலைவாழ்நர்*
*அல்ல புரிந்தொழுக லான்.'*

*'காந்தள் கடிகமழும் கண்வாங்கு இருஞ்சிலம்பின்*
*வாங்கமை மென்தோள் குறவர் மடமகளிர்*
*தாம்பிழையார் கேள்வர்த் தொழுதெழலால் தம்மையரும்*
*தாம்பிழையார் தாம்தொடுத்த கோல்;'*

*'எனவாங்கு,*
*அறத்தொடு நின்றேனைக் கண்டு திறப்பட*
*என்னையர்க் குய்த்துரைத்தாள் யாய்.'*

'அவரும்,
தெரிகணை நோக்கிச் சிலைநோக்கிக் கண்சேந்து
ஒருபக லெல்லாம் உருத்தெழுந் தாறி
இருவர்க்கண் குற்றமும் இல்லையால் என்று
தெருமந்து சாய்த்தார் தலை.'

'தெரியிழாய்! நீயும்நின் கேளும் புணர,
வரைஉறை தெய்வம் உவப்ப, உவந்து,
குரவை தழீஇயாம் ஆடக் குரவையுள்
கொண்டுநிலை பாடிக் காண்.'

'நல்லாய்,
நன்னாள் தலைவரும் எல்லை நமர்மலைக்கண்
தம்நாண் தான் தாங்குவார் என்னோற் றனர்கொல்!'

'புன வேங்கைத் தாதுறைக்கும் பொன்னறை முன்றில்,
நனவில் புணர்ச்சி நடக்குமா மன்றோ;'

'நனவின் புணர்ச்சி நடக்கலும் ஆங்கே
கனவிற் புணர்ச்சி கடியுமா மன்றோ;'

'விண்தோய்கல் நாடனும் நீயும் வதுவையுள்
பண்டறியா தீர்போல் படர்கிற்பீர் மற்கொலோ?'
பண்டறியா தீர்போல் படர்ந்தீர் பழங்கேண்மை
கண்டறியா தேன்போல கரக்கிற்பேன் மற்கொலோ?'

'மைதவழ் வெற்பன் மணஅணி காணமல்
கையால் புதைபெறூஉம் கண்களும் கண்களோ?'

'என்னைமன், நின்கண்ணால் காண்பென்மன்யான்;
நெய்தல் இதழுண்கண் நின்கண்ணா கென்கண்மன்;'

'எனவாங்கு,
நெறியறி செறிகுறி புரிதிரி பறியா அறிவனை முந்துறீஇத்
தகைமிகை வகைதொகை அறியும் சான்றவர் இனமாக
வேய்புரை மென்தோள் பசலையும் அம்பலும்

மாயப் புணர்ச்சியும் எல்லாம் உடன்நீங்கச்
சேயுயர் வெற்பனும் புகுந்தனன்;
போதெழில் உண்கண் பொலிகமா இனியே.'
[கலி - குறிஞ் - 3]

இக்கலியுள் ஆசிரிய அடியும் வெண்பா அடியும் பலவாக அமைந்துள்ளன.

## ஒத்த நூற்பாக்கள்

'இயற்சீர் வெள்ளடி ஆசிரிய மருங்கின்
நிலைக்குரி மரபின் நிற்கவும் பெறுமே.' - தொ. பொ. 374

'வஞ்சி விரவல் ஆசிரியம் உடைத்தே;
வெண்பா விரவினும் கடிவரை இன்றே.' - பல்காயம்

'அகத்திணை அல்வழி ஆங்கதன் மருங்கின்
வகுத்தன சொற்சீர் வஞ்சியொடு மயங்கும்.'

'இயற்சீர் வெள்ளடி வஞ்சி அடிஇவை
அகப்பட வரூஉம் அகவலும் உளவே.' - யா. வி. 29

'வஞ்சி விரவினும் ஆசிரியம் உரித்தே
வெண்பா விரவினும் கடிவரை இன்றே.' - நத்தத்தம்

'வெள்ளடி கலியினுள் விரவவும் பெறுமே.' - யா. வி. 30

'அகத்திணை மருங்கின் அளவு மயங்கி
விதப்ப மற்றவை வேறு வேண்டி
வஞ்சி அடியின் யாத்திலர், வஞ்சி
அகத்திணை மருங்கின் அணையு மாறே.' - பன்னிருபடலம்

'அகத்திணை அகவயின் நிற்ப வஞ்சி
சிறப்பில எனினும் சிலவிடத் துளவே' - மாபுராணம்

'அகப்பா அகவலுள் வஞ்சி,சொற் சீரடி,ஆயிரண்டும்
புகப்பாலனவல்ல என்பதொல் லோர்கள்; புகரில்வஞ்சி
அகப்பாப் பொருளணையா என்பர், நாவலர், ஆங்குஅருகிப்
புகப்பான் மையுமொரு சார்புல வாணர் புகன்றனரே.'
- நாலடி நாற்பது

'ஆசிரியப் பாவில் அயற்பா அடிமயங்கும்,
ஆசிரியம் வெண்பாக் கலிக்கணும், – ஆசிரியம்
வெண்பாக்கலி விரவும் வஞ்சிக்கண், வெண்பாவில்
ஒண்பா அடிவிரவா உற்று.' – நாலடி நாற்பது

'சீர்வண்ணம் வெள்ளைக் கலிவிரவும், வஞ்சியுள்
ஊரும் கலிப்பா சிறுச்சிறிதே, – பாவினுள்
வெண்பா ஒழித்துத் தளைவிரவும், செய்யுளாம்
வெண்பா கலியுள் புகும்.' – நாலடி நாற்பது

'வஞ்சியுள் அகவல் மயங்கினும் வரையார்.' – யா. வி. 31

'வெண்டளை விரவியும் ஆசிரியம் விரவியும்
ஐஞ்சீர் அடியும் உளவென மொழிப.' – தொ. பொ. 375

'ஐஞ்சீர் அடுத்தலும் மண்டிலம் ஆகலும்
வெண்பா யாப்பிற் குரிய அல்ல.'

'இயற்றளை வெள்ளடி வஞ்சியின் பாதம் அகவலுள்ளான்
மயக்கப் படா வல்ல ; வஞ்சி மருங்கின் எஞ்சா அகவல்
கயற்கணல் லாய் ,கலிப் பா தமும் நண் ணும் ; கலியினுள்ளான்
முயக்கப் படும்முதல் காலிரு பாவும், முறைமையினே .'
– யா. கா. 41

'இயற்றளை வெள்ளடி வஞ்சியின் பாதம்
அகற் பாவினுள் அடையப் பெறுமே.' – மு. வீ. யா. ஒ. 13

'வஞ்சியுள் அகவல் அடிகலி அடியும்
விரவி வரப்பெறும், விளம்புங் காலே.' – 14

'கலியினு மகவ லினுமைஞ் சீரடி
வருவதும் உளவென வகுத்தனர் புலவர்.' – 15

## பாக்களுக்கு அடிவரையறை

746. ஈரடி வெண்பாச் சிறுமை, மூஅடி
ஆசிரி யத்தொடும் வஞ்சி, எஞ்சியது
ஒருநான்கு ஆகும் இழிபே; பெருமை
முந்நான்கு, ஆயிரம், ஆயிரம், முடிவிலது,
என்று வரூஉம் இயல்பினது என்ப.

இது நான்கு பாவிற்கும் சிறுமை பெருமைக்கு எல்லை ஆகிய அடிவரையறை உணர்த்துகின்றது.

இ–ள்: இரண்டடி வெண்பாவிற்குச் சிற்றெல்லை என்றும் மூன்றடி ஆசிரியப்பாவிற்கும் வஞ்சிப்பாவிற்கும் சிற்றெல்லை என்றும், ஒழிந்த கலிப்பாவிற்கு நான்கடி சிற்றெல்லை என்றும்,

இவற்றிற்கு முறையே பன்னிரண்டு அடி வெண்பா விற்கும், ஆயிரம் அடி ஆசிரியப்பாவிற்கும் வஞ்சிப் பாவிற்கும் பேரெல்லை என்றும், அடிவரையறை இல்லை என்று சொல்ல வருகின்ற தன்மையை உடைத்துக் கலிப்பாவிற்கு என்றும் கூறுவர் ஆசிரியர் என்றவாறு.

'படைப்போர் குறிப்பினை நீக்கிப் பெருமை
வரைத்துஇத் துணையென வைத்துவரை இல்என்று
உரைத்தனர் மாதோ உணர்ந்திசி னோரே'

என்ப ஆகலின் ஈண்டுப் பெருமைக்கு எல்லை கூறியவாறு என்னை எனின், அங்ஙனம் கூறிய காக்கைபாடினியார் பொதுமையே கூறி ஒழிந்தமையான், இவர் அஃது ஒழித்து,

'ஆசிரியப் பாவின் அளவிற்கு எல்லை
ஆயிரம் ஆகும் இழிபுமூன்று அடியே.' – தொ. பொ. 469

எனவும்,

'ஆசிரிய நடைத்தே வஞ்சி என்ப' – தொல். பொ. 420

எனவும்,

'நெடுவெண் பாட்டே முந்நான்கு அடித்தே' - 470

எனவும்,

'கலிவெண் பாட்டே கைக்கிளைச் செய்யுள்
செவியறி வாயுறை புறநிலை எனஇவை
தொகைநிலை வகையான் அளவில என்ப' - 472

எனவும்,

'முடிபொருள் அல்லாது அடிஅளவு இலவே'
– யா. வி. 32 மே.

எனவும், ஆசிரியர் தொல்காப்பியனுர் பொதுவும் சிறப்பும் உடன் கூறினமையான் அக்கருத்தே பற்றிக் கூறியவாறு என்று உணர்க.

ஈரடியான் வந்த வெண்பாவிற்குச் செய்யுள் :

'அறத்தா றிதுவென வேண்டா; சிவிகை
பொறுத்தானே டூர்ந்தா னிடை.' - யா. கா. 15 மே; குறள் 37

எனவும்,

மூன்று அடியான் வந்த ஆசிரியப்பாவிற்குச் செய்யுள் :

'முதுக்குறைந் தனளே, முதுக்குறைந் தனளே,
மலையன் ஒள்வேல் கண்ணி
முலையும் வாரா; முதுக்குறைந் தனளே.' – யா. கா. 15 மே.

எனவும்,

மூன்று அடியான் வந்த வஞ்சிப்பாவிற்குச் செய்யுள் :

'செங்கண்மேதி கரும்புழக்கி
அங்கண்நீலத் தலரருந்தி
பொழிற்காஞ்சி நிழற்றுஞ்சும்
செழுநீர்

நல்வயல் கழனி ஊரன்
புகழ்தல் ஆனுப் பெருவண் மையனே.' – யா. கா. 15 மே.

எனவும்,

நான்கு அடியான் வந்த கலிப்பாவிற்குச் செய்யுள் :

'செல்வப்போர்க் கதக்கண்ணன் செயிர்த்தெறிந்த சினவாழி
முல்லைத்தார் மறமன்னர் முடித்தலையை முருக்கிப்போய்
எல்லைநீர் வியன்கொண்மூ இடைநுழையும் மதியம்போல்
மல்லலோங் கெழில்யானை மருமம்பாய்ந் தொளித்ததே.'
– யா. கா. 15 மே.

எனவும் வரும்.

வாளா ஆசிரியம் என்னுது ஆசிரியத்தோடு எனப் பிரித்து ஓதியமையான், ஆசிரியம் சுரிதகமாய் வரும் இடத்து இரண்டு அடியானும் வரும் என்றும்,

வஞ்சியை முற்கூறினமையான் வஞ்சிப்பா இரண்டு அடியானும் வரும் என்றும் காண்க.

இரண்டு அடியாய்ச் சுருங்கி வந்த வஞ்சிக்குச் செய்யுள் :

'பூந்தண்சினை மலர்மல்கிய பொழிற்பிண்டி
வேந்தன்புகழ் பரவாதவர் வினைவெல்லார் ;
அதனுல்,
அறிவன தடியிணை பரவப்
பெருகுவர் யாவரும் பிறவா நெறியே.' – யா. கா. 14 மே.

என வரும். ஏனைப் பெருமைக்குச் செய்யுள் வந்துழிக் காண்க. (37)

## ஒத்த நூற்பாக்கள்

'ஒருதொடை ஈரடி வெண்பாச் சிறுமை ;
இருதொடை மூன்றும் அடியின் இழிந்து
வருவன ஆசிரியம் இல்லென மொழிப ;
வஞ்சியும் அப்பா வழக்கின வாகும்.' – காக்கை

'நான்காம் அடியினும் மூன்றுந் தொடையினும்
தாழ்ந்து கலிப்பாத் தழுவுத லிலவே.' – காக்கை

'உரைப்போர் குறிப்பினை அன்றிப் பெருமை
வரைத்தித் துணையென வைத்துரை இல்லென்று
உரைத்தனர் மாதோ உணர்ந்திசி னோரே.' – காக்கை

'ஒன்றும் இரண்டும் மூன்றும்ஓர் இரண்டும்
என்றிம் முறையே பாவின் சிறுமை;
தங்குறிப் பினவே தொடையின் பெருமை.' – அவிநயம்

'ஆசிரியப் பாவின் சிறுமைக் கெல்லை
மூவடி ஆகும் பெருமை ஆயிரம்,
ஈரடி முதலா ஒன்றுதலை சிறந்து
ஏழடி காறும் வெண்பாட் டுரிய,
வாயுறை வாழ்த்தே செவியறி வுறூஉவே
கைக்கிளை மயக்கம் கலிவெண் பாட்டே
தத்தம் குறிப்பின அளவென மொழிப.' – நத்தத்தம்

'ஏழடி இறுதி ஈரடி முதலா
ஏறிய வெள்ளைக் கியைந்தன அடியே,
மிக்கடி வருவது செய்யுள்கட் குரித்தே,
மூவடிச் சிறுமை ஆயிரம் ஆகும்
ஆசிரி யத்தின் பெருமை அளவே.' – சங்கயாப்பு

'ஆயிரம் இறுதி மூவடி இழிபா
ஆசிரியப் பாட்டின் அடித்தொகை அறிப;
ஈரடி முதலா ஏழடி காறும்
திரிபில வெள்ளைக்கு அடித்தொகை தானே.' – பல்காயம்

ஐயிரு நூறடி ஆசிரியம் வஞ்சிச்
செய்யுள் நடப்பினும் சிறப்புடைத் தென்ப.' – மயேச்சுரம்

'பேணும் பொருள்முடிபே பெருமைக் கெல்லை
காணுங் காலை, கலியலங் கடையே.' – மயேச்சுரம்

'கலியுறுப்பு எல்லாம் கட்டளை உடைமையின்
நெறியின் முறைவழி நிறுத்தல் வேண்டும்.' ,,

'கொச்சகக் கலிவயின் குறித்தபொருள் முடிவாம்
தாழிசை பலவும் தழுவுதல் முடிபே.' – மயேச்சுரம்

'வஞ்சி ஆசிரியம் என்றிரு பாட்டும்
எஞ்சா மூவடி இழிவுஉயர்வு ஆயிரம்.' – பரிமாணம்

ஆசிரியம் என்பது அகவலின் வழாஅது
கூறிய சீரொடும் தளையொடும் தழீஇ
முச்சீர் அடியான் ஈற்றயல் நின்று
அச்சீர் அடிஇடை ஒரோவழித் தோன்றியும்
அவ்வியல் பின்றி மண்டிலம் ஆகியும்
மூவடி முதலா முறைசிறந்து ஏறித்
தொள்ளா யிரத்துத் தொண்ணூற் றெண்ணிரண்டு
எய்தும் என்ப இயல்புணர்ந் தோரே.' ,,

வஞ்சி தானே அடிவரம்பின்றி
எஞ்சா இசைநிலை தூங்கல் எய்தியும்
ஆசிரியம் ஆகியும் முடியும் என்ப.' ,,

செப்பல் ஓசையின் சீர்தளை சிதையாது
மெய்ப்படக் கிளந்த வெண்பா விரிப்பின்
குறள்நேர் நெடிலென மூன்றாய் அவற்றின்
இறுதி அடியே முச்சீர்த் தாகி
அதன்ஈற் றசைச்சீர் எய்தி அடிவகை
ஓரிரண்டு முதலா முறைசிறந்து ஈராறு
ஏறும் என்ப இயல்புணர்ந் தோரே.' ,,

'ஈரடி வெண்பாச் சிறுமை மூவடி
ஆசிரி யத்தொடு வஞ்சி எஞ்சியது
ஈரிரண் டடியே இழிபென மொழிப.' – யா. வி. 32

'வெள்ளைக் கிரண்டடி, வஞ்சிக்கு மூன்றடி, மூன்றகவற்கு,
எள்ளப் படாக்கலிக் கீரிரண் டாகுமிழிபு; உரைப்போர்
உள்ளக் கருத்தின் அளவே பெருமை.' – யா. கா. 14

'வெள்ளைக்கு இரண்டடி சிறுமை ஆகும்.'–மு.வீ.யா.ஒ. 19

'அகவற்கு ஒருமூன் று அடிச்சிறு மையே.'– மு. வீ. யா. ஒ. 20

'வஞ்சிப் பாவும் அவற்றோ ரற்றே.' – 21

'கலிப்பா விற்கொரு நாலடி சிறுமை
ஆகும் என்மனார் அறிந்திசி னோரே.' – 22

'பெருமை உரைப்போன் பெற்றித்து ஆகும்.' – 23

37

## கலி உறுப்புக்களுக்கு அடி வரையறை

747. வண்ணகம் அம்போ தரங்க ஒத்தாழிசை
நண்ணிய தரவின் அடிஇரு மூன்றும்,
ஏனைய தரவுஅடி இழிபுஒரு மூன்றும்,
பேணிய பெருமை பெரும்பொருள் முடியும்,
இரண்டுஅடி இழிபும் இரட்டிமூன்று ஆக்கமும்
ஒன்றிய தாழிசை உறுதலும், உறுங்கால்
தரவில் சுருங்கல் தகுதிஎன்று உரைத்தலும்,
அளவடி முதலா அனைத்துஅடி யானும்
வருவது வண்ணகம், வருங்கால் சிறுமை
நாலடி பெருமை நாலிரண்டு ஆகி
நடத்தலும், நெறியென நாட்டினர் புலவர்.

**இது கலி உறுப்பாகிய தரவு தாழிசைகட்கு அடி வரையறையும் அராகத்திற்குச் சீர் வரையறையும் அடி வரையறையும் கூறுகின்றது.**

இ–ள் : வண்ணக ஒத்தாழிசைக் கலியும், அம்போ தரங்க ஒத்தாழிசைக்கலியும் பொருந்திய தரவுஉறுப் பிற்குப் பெருக்கச் சுருக்கம் இன்றி அடிவரையறை ஆறும்,

ஒழிந்த கலிப்பாவின் தரவுஅடிக்கு வரையறைச் சுருக்கம் மூன்றும் பெருக்கம் பொருள் முடிவும்,

தாழிசைக்கு வரையறை சிறுமை இரண்டுஅடியும் பெருமை நான்கு அடியும் மூன்று அடியும் பொருந்து தலும், பொருந்தும் இடத்து முன்னர் நின்ற தரவு அடியின் தாழிசை அடி சுருங்கி வருதல் இயல்பு என்று சொல்லுதலும்,

வண்ணக உறுப்பு அளவடியானும் நெடிலடியானும் கழிநெடிலடியானும் வரப்பெறும்; அப்படி வருங்கால் அராக அடிக்கு வரையறை சிற்றெல்லை நான்கும் பேரெல்லை எட்டுமாய் நடத்தலும் - இலக்கணமாக அமைத்தனர் அறிவுடையோர் என்றவாறு.

அராகம் எனினும் வண்ணகம் எனினும் ஒக்கும். வண்ணக உறுப்பிற்குச் சீர் விதந்து ஓதினமையின் ஓதாத தரவு தாழிசைகட்குச் சீர் வரையறை பொது வகையான் கலிக்கு ஓதிய அளவடியே கொள்க. ஈண்டு ஓதாத அம்போதரங்க உறுப்பிற்குச் சீர் வரையறையும் எல்லை வரையறையும் அவ்வுறுப்புடைக் கலிக்கு ஓதிய விதியானே பெற்றும்.

எனவே, தனிச்சொல் உறுப்பு எவ்வகைச் சீரானும் வரப்பெறும் என்பதூஉம், சொல் என்றமையான் எல்லை இன்று என்பதூஉம், ஏனை இருவகைச் சுரிதக உறுப்பிற்குச் சீர் வரையறையும் எல்லை வரையறையும் தத்தம் விதியானே வரப்பெறும் என்பதூஉம் பெறப் பட்டன.

'ஏனைய தரவுஅடி இழிபு ஒருமூன்று'

என்றுரேனும் தரவுகொச்சகம் சிறுமை நான்கு அடியானே வரும்;

'எஞ்சியது ஒருநான்கு ஆகும் இழிபு' – இ. வி. செ. 37
என முற்கூறினமையின். இவற்றிற்கு இலக்கியம் மேல் காட்டிய கலிப்பாவினுள்ளும் பிறவற்றுள்ளும் கண்டு கொள்க. (38)

## ஒத்த நூற்பாக்கள்

*'தரவே தானும் நாலடி இழிபாய்*
*ஆறிரண்டு உயர்வு ஏறவும் படுமே.'* – தொ. பொ. 445

*'இடைநிலைப் பாட்டு,*
*தரவுஅகப் பட்ட மரபினது என்ப.'* – 446

*'தரவே தானும்,*
*நான்கும் ஆறும் எட்டும் என்ற*
*நேரடி பற்றிய நிலைமைத்து ஆகும்.'* – 453

*'தாழிசை,*
*தரவில் சுருங்கித் தோன்றும் என்ப.'* – 455

*'அளவடி முதலா அனைத்தினும் நான்கடி*
*முதலா இரட்டியும் முடுகியல் நடக்கும்.'*

*'சுருங்கிற்று மூன்றடி ஏனைத் தரவுஇரு மூன்றடியே*
*தரங்கக்கும் வண்ணகக் குந்தர வாவது, தாழிசைப்பா*
*சுருங்கிற் றிரண்டடி, ஓக்கம் இரட்டி.'* – யா. கா. 44

*'தரவு தாழிசை தன்தனை வெண்டளை*
*இரண்டுஉறழ்ந் தனஅடி இரண்டும் பலவுமாம்.'*
– தொ. வி. 229

*'வண்ணகம் அளவடி வரைமுதல் பலவடி*
*நான்குஆதி எட்டுஈறாய் நடைமுடுகு அராகமாம்.'* – 230

*'அம்போ தரங்கம் அம்புஅளாம் திரைபோல்*
*அளவடி ஈரடி இரண்டும் பேரெண்*
*அளவடி ஓரடி நான்கும் அளவெண்*
*சிந்தடி ஓரடி எட்டும் இடையெண்*

குறளடி ஓரடி நாலுன்கும் சிற்றெண்
எட்டும் நாலுன்கும் நான்கும் எட்டுமாய்ச்
சுருங்கவும் அந்நால் துணைஉறுப்பு உடைத்தே.'
– தொ. வி. 231

'அம்போ தரங்க வண்ணகஒத் தாழிசைக்
கலியல் லாத கலிப்பா வினுக்குத்
தரவு மூன்றடி சிறுமை, பெருமை
உரைப்போன் குறிப்பின ஆம்அள வின்றே.'
– மு. வீ. யா. ஒ. 19

'அம்போ தரங்க வண்ணகக் குஞ்சிறுமை
பெருமை தரவுஇலை, பேசுங் காலை
ஆறடி என்மனூர், அறிந்திசி னோரே.' – மு. வீ. யா. ஒ. 20
38

## சில தொடை விகற்பங்கள்

748. வருக்கமும் நெடிலும் இனமும் வரினும்
திறப்படும் எதுகையும் மோனையும் ஆதலும்,
உயிரும் யரலழ ஆசும் இடையிட்டும்
இரண்டடி மூன்றும் எழுத்துஒன்றி வரினும்
எதுகை ஆதலும், இரணத் தொடைக்கும்
கடையே கடையிணை பின்கடைக் கூழை
இடைப் புணர்பு இசைதலும் இசையும் என்ப.

**இஃது ஒருசார் தொடைகட்கு எய்தியதோர் இலக்கணம் கூறுகின்றது.**

**இ–ள் : வருக்க எழுத்தும் நெடில் எழுத்தும் இன எழுத்தும் எதுகையும் மோனையுமாய் வந்தாலும் கூறுபட வரும் வருக்க எதுகையும் வருக்க மோனையும் நெடில் எதுகையும் நெடில் மோனையும் இன எதுகையும் இன மோனையும் ஆதலும்,**

உயிரும் யரலழ என்னும் ஒற்றுக்களிடையே ஆசிட்டும் இடையிட்டும் இரண்டடியும் மூன்றும் எழுத்துத் தம்முள் ஒன்றிவரினும் எதுகை ஆதலும்,

முரண் தொடைக்கும் கடை முரணும் கடை இணை முரணும் பின் முரணும் கடைக்கூழை முரணும் இடைப்புணர் முரணும் பொருந்துதலும் பொருந்தும் என்று கூறுவர் ஆசிரியர் என்றவாறு.

முரண்தொடை என்னும் இரணத்தொடை எனினும் ஒக்கும்.

வருக்க எதுகைக்குச் செய்யுள் :

[டகர வருக்கம்]

'நீடிணர்க் கொம்பர்க் குயிலாலத் தாதூதிப்
பாடும்வண் டஞ்சி அகலும் பருவத்துத்
தோடார் தொடிநெகிழ்த்தார் உள்ளார்; படலொல்லா
பாடமை சேக்கையுள் கண்' - *யா. கா.* 43 மே.

எனவும்,

வருக்க மோனைக்குச் செய்யுள் :

[பகர வருக்கம்]

'பகலே, பல்பூங் கானல் கிள்ளை ஓப்பியும்,
பாசிலைக் குளவியொடு கூதளம் விரைஇப்
பின்னுப்பிணி அவிழ்ந்த நன்னெடுங் கூந்தல்
பீர்ங்கப் பெய்து, தேம்படத் திருகிப்
பூனையீ ரோதி செய்குறி நசைஇப்,
பூந்தார் மார்ப! புனத்துள் தோன்றப்
பெருவரை அடுக்கத் தொருவே லேந்தி,
பேயு மறியா மாவழங்கு பெருங்காட்டுப்
பைங்கண் உழுவைப் படுபகை வெரீஇப்
பொங்குசினம் தணியாப் பூநுதல் ஒருத்தல்

போகாது வழங்கும் ஆரிருள் நடுநாள்,
பௌவத் தன்ன பாயிருள் நீந்தி,
இப்பொழுது வருகுவை ஆயின்,
நற்றூர் மார்ப! தீண்டலஎம் கதுப்பே' – யா. கா. 43 மே.

எனவும்,

நெடில் எதுகைக்குச் செய்யுள் :

ஆவா என்றே அஞ்சினர் ஆழ்ந்தார் ஒருசாரார் ;
கூகூ என்றே கூவிளி கொண்டார் ஒருசாரார் ;
மாமா என்றே மாய்ந்தனர் நீந்தார் ஒருசாரார் ;
ஏகீர் நாய்கீர், என்செய்தும் என்றூர், ஒருசாரார்'
– யா. கா. 43 மே.

எனவும்,

நெடில் மோனைக்குச் செய்யுள் :

'ஆர்கலி உலகத்து மக்கட் கெல்லாம்
ஓதலின் சிறந்தன்று ஒழுக்க முடைமை'
– யா. கா. 34 மே; முதுமொழி 1

எனவும் வரும்.

இன எதுகை மூன்று வகைப்படும்; வல்லின எதுகையும் மெல்லின எதுகையும் இடையின எதுகையும் என. அவற்றுள், வல்லின எதுகைக்குச் செய்யுள் :

'தக்கார் தகவிலர் என்பத அவரவர்
எச்சத்தாற் காணப் படும்' – குறள் 114

எனவும், [ககர ஒற்றும் சகர ஒற்றும்]

மெல்லின எதுகைச் செய்யுள் :

'அன்பீனும் ஆர்வ முடைமை; அதுஈனும்
நண்பென்னும் நாடாச் சிறப்பு.' – குறள் 74

எனவும், [னகர ஒற்றும் ணகர ஒற்றும்]

இடையின எதுகைக்குச் செய்யுள் :

'எல்லா விளக்கும் விளக்கல்ல சான்றோர்க்குப்
பொய்யா விளக்கே விளக்கு' – குறள் 299

எனவும் வரும். [*லகர ஒற்றும் யகர ஒற்றும்*]

இனமோனையும் மூன்று வகைப்படும்; வல்லின மோனையும் மெல்லின மோனையும் இடையின மோனையும் என. அவற்றுள் வல்லின மோனைக்குச் செய்யுள் :

'கயலேர் உண்கண் கலுழ, நாளும்
சுடர்புரை திருநுதல் பசலை பாயத்
திருந்திழை அமைத்தோள் அரும்படர் உழப்பப்
போகல்; வாழியர் ஐய! பூத்த
கொழுங்கொடி அணிமலர் தயங்கப்
பெருந்தண் வாடை வரூஉம் பொழுதே' – *யா. கா. 43 மே.*

என வரும். [*க-ச-த-ப-மோனை*]

மெல்லின மோனையும் இடையின மோனையும் வந்துழிக் கண்டு கொள்க. [*யா. வி. 37 உரை*]

உயிரெதுகைக்குச் செய்யுள் :

'துளியொடு மயங்கிய தூங்கிருள் நடுநாள்,
அணிகிளர் தாரோய்! அருஞ்சுரம் நீந்தி,
வடிவமை எஃகம் வலவயின் ஏந்தித்
தனியே வருதி, நீஎனின்,
மைஇருங் கூந்தல் உய்தலோ அரிதே' – *யா. கா. 43 மே.*

எனவும், [*இகர உயிர்*]

யகர ஆசிடை எதுகைக்குச் செய்யுள் :

'காய்மாண்ட தெங்கின் பழம்வீழக் கமுகின் எற்றிப்
பூமாண்ட தீந்தேன் தொடைகீறி, வருக்கை போழ்ந்து,
தேமாங் கனிசிதறி, வாழைப் பழங்கள் சிந்தும்
ஏமாங் கதமென் றிசையாற் றிசைபோய துண்டே'
– *சிந்தா 31*

எனவும்,

ரகர ஆசுஇடை எதுகைக்குச் செய்யுள் :

'மாக்கொடி யால்லையும் மௌவல் பந்தரும்
கார்க்கொடி முல்லையும் கமழ்ந்து, மல்லிகைப்
பூக்கொடிப் பொதும்பரும், கான ஞாழலும்,
தூக்கடி கமழ்ந்து,தான் துறக்கம் ஒத்ததே' – சூளா. நா. 29

எனவும்,

லகர ஆசுஇடை எதுகைக்குச் செய்யுள் :

'ஆவே றுருவின ஆயினும் ஆபயந்த
பால்வே றுருவின அல்லவாம் ; – பால்போல்
ஒருதன்மைத் தாகும் அறநெறி ; ஆபோல்
உருவு பலகொளல் ஈங்கு' – நாலடி 118

எனவும்,

ழகர ஆசுஇடை எதுகைக்குச் செய்யுள் :

'அந்தரத் துள்ளே அகங்கை புறங்கையாம் ;
மந்தாமே போலும் மனைவாழ்க்கை – மந்தரத்து
வாழ்கின்றேம் என்று மகிழன்மின் ; வாழ்நாளும்
போகின்ற பூளையே போன்று' – யா. கா. 43 மே.

எனவும் வரும்.

'ஆர்கலி உலகத்து மக்கட் கெல்லாம்
ஓதலின் சிறந்தன்று ஒழுக்கம் உடைமை' – முதுமொழி 1

இது ரகரஒற்று ஆசுஇடையிட்ட வல்லின எதுகை. பிறவும் வந்துழிக் காண்க. [க-த-வல்லின எதுகை]

இடையிட்ட எதுகைக்குச் செய்யுள் :

'தோடார் எல்வளை நெகிழ நாளும்,
நெய்தல் உண்கண் பைதல கலுழ,
வாடா அவ்வரி புதைஇப் பசலையும்
வைகல் தோறும் பைபயப் பெருகின ;
நீடார் இவரென நீமனங் கொண்டார்

கேளார் கொல்லோ? காதலந், தோழி!
வாடாப் பௌவம் அறமுகந் தெழிலி
பருவம் பொய்யாது வலனேர்பு வளைஇ,
ஓடா மலையன் வேலின்
கடிது மின்னும்;இக் கார்மழைக் குரலே' – யா. கா. 143 மே.

என வரும்.

இரண்டடி எதுகைக்குச் செய்யுள் :

துவைக்கும் துளிமுந்நீர்க் கொற்கை மகளிர்
அவைப்பதம் பல்லிற்கு அழகுஒவ்வா முத்தம்;
மணங்கமழ்தார் அச்சுதன் மண்காக்கும் வேலின்
அணங்கும், அமுதமும், அந்நலார் பாடல்' –யா. கா. 143 மே.

என வரும்.

ஒன்று என முடித்தலான் இரண்டடிமோனையும் வரும்; அதற்குச் செய்யுள் :

'ஆகங் கண்டக ராலற்ற ஆடவர்
ஆகங் கண்டகத் தாலற்ற அன்பினர்,
பாகங் கொண்டு பயோதரம் சேர்த்தினர்;
பாகங் கொண்டு பயோதரம் நண்ணினர்' - யா. கா. 43 மே.

என வரும்.

மூன்றும் எழுத்து ஒன்று எதுகைக்குச் செய்யுள் :

'பவழமும் பொன்னும் குவைஇய முத்தின்
திகழரும் பீன்றன புன்னை' – யா. கா. 43 மே.

என வரும். [ழகரம் எதுகை]

இங்ஙனம் ஒருசார் உயிர்எதுகை முதலாயின வருதல் உளவாயினும் பெரியதொரு சிறப்பில எனக் கொள்க.

'திறப்பட' என்ற மிகையானே தலையாகு எதுகை, இடையாகு எதுகை, கடையாகு எதுகை என்றும், தலையாகுமோனை, இடையாகுமோனை, கடையாகுமோனை என்றும் வேண்டலும் ஒன்று;

'சீர்முழுது ஒன்றின் தலையாகு எதுகை
ஓர்எழுத்து ஒன்றின் இடைகடை பிறவே'

என்ப ஆகலின். மோனைக்கும் இஃது ஒக்கும்.

தலையாகு எதுகைக்குச் செய்யுள் :

'சிலைவிலங்கு நீள்புருவம் சென்றொசிய நோக்கி
முலைவிலங்கிற் றென்று முனிவாள் – மலைவிலங்கு
தார்மாலை மார்ப தனிமை பொறுக்குமே
கார்மாலை கண்கூடும் போது' – யா. கா. 48 மே.

எனவும்,

இடையாகு எதுகைக்குச் செய்யுள் :

'அகர முதல எழுத்தெல்லா மாதி
பகவன் முதற்றே உலகு' – குறள் 1

எனவும்,

கடையாகு எதுகைக்குச் செய்யுள் : (வல்லின எதுகை)

'தக்கார் தகவிலர் என்பது அவரவர்
எச்சத்தால் காணப் படும்' – குறள் 114

எனவும்,

தலையாகு மோனைக்குச் செய்யுள் :

'பற்றுக பற்றற்றான் பற்றினை அப்பற்றைப்
பற்றுக பற்று விடற்கு' – குறள் 350

எனவும்,

இடையாகுமோனைக்குச் செய்யுள் :

'மாவும் புள்ளும் வதிவயின் படர,
மாநீர் விரிந்த பூவும் கூம்ப,

மாலை தொடுத்த கோதையும் கமழ,
மாலை வந்த வாடை
மாயோள் இன்னுயிர்ப் புறத்திறுத் தற்றே' – யா. கா. 43 மே.

எனவும்,

[அடிதோறும் முதலெழுத்து ஒத்துவரும் அடிமோனை இடையாகுமோனை ஆயிற்று. வருக்கமோனை கடையாகுமோனை]

கடையாகுமோனைக்குச் செய்யுள் :

'பகலே, பல்பூங் கானல் கிள்ளை ஓப்பியும்
பாசிலைக் குளவியொடு கூதளம் விரைஇப்
பின்னுப்பிணி அவிழ்ந்த நன்னெடுங் கூந்தல்
பீர்ங்கப் பெய்து தேம்படத் திருகி,
.........தீண்டலெங் கதுப்பே' – பக்கம் 241

எனவும் வரும்.

இன்னும் அதனானே விட்டிசை வல்லொற்று எதுகை என்றும் விட்டிசைமோனை என்றும் கோடலும் ஒன்று.

விட்டிசை வல்லொற்று எதுகைக்குச் செய்யுள் :

'பற்றிப் பலகாலும் பால்மறி உண்ணுமை
நொ-அலையல் நின்ஆட்டை நீ' – யா. கா. 43 மே.

['பற்'றென வல்லொற்றால் விட்டிசைத்ததுபோல நொ என்பது விட்டிசைத்தமை காண்க.]

எனவும்,

விட்டிசை மோனைக்குச் செய்யுள் :

'அஅவனும் இஇவனும் உஉவனும் கூடியக்கால்
எஎவனை வெல்வார் இகல்' – யா. கா. 43 மே.

[முதலெழுத்து ஒவ்வாதேனும் விட்டிசைத்தல் மாத்திரையே ஒத்தபடி.]

எனவும் வரும். இவை வல்லொற்று அடுத்தாற்போல விட்டிசைத்துக் குற்றெழுத்தினோடு புணர்ந்தமையான்

விட்டிசை வல்லொற்று எதுகையும், இரண்டடிக் கண்ணும் முதலெழுத்து விட்டிசைத்து வந்தமையான் விட்டிசை மோனையும் ஆயின. இவை இங்ஙனம் வரினும் சிறப்பில எனக் கொள்க.

இன்னும் அதனானே பா இனங்கள் எல்லாத் தொடையானும் வரப்பெறுமேனும் பெரும்பான்மையும் தலையாகு மோனையில் தீர்ந்தும் தலையாகு எதுகையில் தீர்ந்தும் வாரா என்பதூஉம், செந்தொடை ஒழிந்த எல்லாத்தொடைக்கும் இன எழுத்து வரத்தொடுப்பதும் வழிஎதுகை வரத்தொடுப்பதும் வழி முரண் வரத்தொடுப்பதும் சிறப்புடைய என்பதூஉம், இன எழுத்துப் பெற்று மோனை முதலாகிய தொடையும் தொடை விகற்பமும் போலாமை வேறுபடத் தொடுப்பது மருட் செந்தொடையாம் என்பதூஉம் கண்டு கொள்க.

இன எழுத்தாவன : அகர ஆகார ஐகார ஔகாரங் களும், இகர ஈகார எகர ஏகாரங்களும், உகர ஊகார ஒகர ஓகாரங்களும், ஞகர நகரங்களும், மகர வகரங்களும் சகர தகரங்களும் தம்முள் இனமாம். இவற்றை அநு என்பாரும் உளர் ;

'அகரமோ டாகாரம் ஐகாரம் ஔகான்
இகரமோ டீகாரம் எஏ ; – உகரமொ(டு)
ஊகாரம் ஒஓ ; ஞந,மவ, தச்சகரம்
ஆகாத அல்லா அநு' – *யா. கா.* 43 மே.

என்ப ஆகலின்.

இன எழுத்துப் பெற்ற மருட் செந்தொடைக்குச் செய்யுள் :

'ஈத்துவக்கும் இன்பம் அறியார்கொல் தாமுடைமை
வைத்திழக்கும் வன்கண் ணவர்' – *குறள்* 228

எனவும், [ ஈ – இ – இனமோனை ]

'அமிழ்தினும் ஆற்ற இனிதேதம் மக்கள்
சிறுகை அளாவிய கூழ்' – *குறள்* 64

*[ 'கண்ணுதல் காட்சி கிடைத்த விழிக்கில்லை*
*வெல்கூற்றின் தோற்றம் கொளல்'*

*என்பது சிதம்பரச் செய்யுட் கோவையின் மூன்றும் செய்யுள்.]*

எனவும் வரும். பிறவும் அன்ன.

வழி எதுகைக்குச் செய்யுள் :

'மண்டலம் பண்டுண்ட திண்டேர்
வரகுணன் தொண்டியின்வாய்க்
கண்டலந் தண்டுறைக் கண்டதொன்
றுண்டு கனமகர
குண்டலம் கெண்டை இரண்டொடும்
தொண்டையும் கொண்டொர்திங்கள்
மண்டலம் வண்டலம் பக்கொண்டல்
தாழ வருகின்றதே' – *யா. கா.* 43 *மே.*

எனவும்,

'கொங்கு தங்கு கோதை ஓதி மாத ரோடு
கூடும் நீடும் ஓடை நெற்றி
வெங்கண் யானை வேந்தர் போந்து, வேத கீத
நாத! என்று நின்று தாழ,
அங்க பூர்வம் ஆதி யாய ஆதி நூலின்
நீதி ஓதும் ஆதி யாய
செங்கண் மாலைக் காலை மாலை சேர்நர், சேர்வர்
சோதி சேர்ந்த சித்தி தானே' – *யா. கா.* 43 *மே.*

எனவும் வரும். *இதனை வடநூலார் அநுப்பிராசம்* என்பர்.

*வழி முரணுக்குச் செய்யுள் :*

'செய்யவாய்ப் பசும்பொன் ஓலைச் சீறடிப் பரவை அல்குல்
ஐயநுண் மருங்குல் நோவ அடிக்கொண்ட குவவுக்கொங்கை
வெய்யவாய்த் தண்ணென் நீலம் விரிந்தென விலங்கிநீண்ட
மையவாம் மழைக்கண் கூந்தல் மகளிரை வருக என்றான்'
– *சூளா. சீய.* 101

எனவும்,

'ஒருமால் வரைநின் றிருசுட ரோட்டிமுந் நீர்க்கிடந்த
பெருமா நிலனுஞ் சிறுவிலைத் தாவுண்டு; பேதையர்கண்
பொருமா தவித்தொங்கல் எங்கோன் புரவலன் பூம்பொதியில்
கருமா விழிவெண்பல் செவ்வாய் பசும்பொற் கனங்குழைக்கே'
— யா. கா. 43 மே.

எனவும்,

கடை முரண் தொடைக்குச் செய்யுள் :

'கயல்மலைப் பன்ன கண்இணை கரிதே;
தடமுலைத் திவழும் தனிவடம் வெளிதே;
நூலின் நுண்ணிடை சிறிதே;
ஆடமைத் தோளிக்கு அல்குலோ பெரிதே'- யா. கா. 42 மே.

எனவும் வரும். இஃது அடிதோறும் கடைச்சீர் மறுதலைப்படத் தொடுத்தமையால் கடைமுரண் ஆயிற்று.

கடைஇணை முரண் தொடைக்குச் செய்யுள் :

'மீன்தேர்ந்து வருந்திய கருங்கால் வெண்குருகு
தேனார் ஞாழல் விரிசினைக் குழூஉம்
தண்ணந் துறைவன் தவிர்ப்பவும் தவிரான்;
தேரோ காணலம்; காண்டும்.
பீரேர் வண்ணம்என் சிறுநுதல் பெரிதே.' - யா. கா. 42 மே.

என வரும். இஃது அடிதோறும் கடை இருசீரும் மறுதலைப்படத் தொடுத்தமையான் கடைஇணை முரண் ஆயிற்று.

பின் முரண் தொடைக்குச் செய்யுள் :

'சாரல் ஓங்கிய தடந்தாள் தாழை
கொய்ம்மலர் குவிந்து, தண்ணிழல் விரிந்து,
தமியம் இருந்தன மாக, நின்றுதன்
நயனுடைப் பணிமொழி நன்குபல, பயிற்றி,
வீங்கு தொடிப் பணைத்தோள் நெகிழத்
துறந்தோன், நல்லன்; எம் மேனியோ தீதே.'- யா. கா. 42 மே.

என வரும். இது கடைச்சீரும் இரண்டாம் சீரும் மறுதலைப்படத் தொடுத்தமையால் பின் முரண் ஆயிற்று.

கடைக்கூழை முரண் தொடைக்குச் செய்யுள் :

'காவியங் கருங்கண் செவ்வாய்ப் பைந்தொடி
பூவிரி சுரிமென் கூந்தலும்,
வேய்புரை தோளும், அணங்குமால் எமக்கே'

– யா. கா. 42 மே.

என வரும். இது முதல்அடி நான்கு சீரினும் முதற்சீர் ஒழித்து ஒழிந்த மூன்று சீர்க்கண்ணும் மறுதலைப்படத் தொடுத்தமையான் கடைக்கூழை முரண் ஆயிற்று.

இடைப்புணர் முரண் தொடைக்குச் செய்யுள் :

'போதுவிரி குறிஞ்சிப் பெருந்தண் மால்வரைக்
கோதையில் தாழ்ந்த ஓங்குவெள் அருவி
காந்தளஞ் செங்குலைப் பைங்கூ தாளி
வேரல் விரிமலர் முகையொடு விரைஇப்
பெருமலைச் சீறூர் இழிதரும் நலங்கவர்ந்(து)
இன்னு ஆயின இனியோர் நாட்டே' – யா. கா. 42 மே.

என வரும். இஃது இடை இருசீர்க்கண்ணும் முரணத் தொடுத்தமையான் இடைப்புணர் முரண் ஆயிற்று.

இரணத்தொடைக்கும் என்ற உம்மையால் ஒழிந்த தொடைக்கும்,

கடைமோனை கடைஇணைமோனை பின்மோனை கடைக்கூழைமோனை இடைப்புணர்மோனை எனவும்,

கடை இயைபு கடைஇணைஇயைபு பின்இயைபு கடைக்கூழைஇயைபு இடைப்புணர்இயைபு எனவும்,

கடைஎதுகை கடைஇணைஎதுகை பின்எதுகை கடைக்கூழைஎதுகை இடைப்புணர் எதுகை எனவும்,

கடைஅளபெடை கடைஇணைஅளபெடை பின் அளபெடை கடைக்கூழைஅளபெடை இடைப்புணர் அளபெடை எனவும் இவ்வாறு கோடலும் ஒன்று. இவற்றிற்கு இலக்கியம் வந்துழிக் காண்க. (39)

## ஒத்த நூற்பாக்கள்

'ஆயிரு தொடைக்கும் கிளைஎழுத்து உரிய.'
– தொ. பொ. 406

'வருக்க நெடிலினம் வரையார் ஆண்டே.' – யா. வி. 37

'அடிதொறும் முதலெழுத்து அடைவதை முதற்றொடை
இடையதன் முன்னொன் றியைவதை எதுகை
நெடிய பிறவும் இனத்தினும் ஆகும்.'

'சீர்முழு தொன்றின் தலையா கெதுகை
ஓரெழுத் தொன்றின் இடைகடை பிறவே.'

'யரலழ என்னும் ஈரிரண்டு ஒற்றும்
வரன்முறை பிறழாது வந்திடை உயிர்ப்பின்
ஆசிடை எதுகை என்று அறிந்தனர் கொளலே.'

'விட்டிசை மோனையும் இடையிட் டெதுகையும்
ஒட்டி வரூஉம் ஒருசாரும் உளவே.'

'நிரைநேர் மறுதலை அடையா தம்முளும்
எதுகை முதலசை என்மனார் புலவர்.'

'யாவகை எதுகையும் அசைமுறை பிறழாப்
பாவகை நான்காம் பாட்டி னுள்ளே.'

'முதலெழுத் தொன்றின் மோனை ஆகும்
அஃதொழித் தொன்றின் எதுகை ஆகும்
ஆயிரு தொடைக்கும் கிளையெழுத் துரிய.' – நத்தத்தம்

'முதலெழுத் தொன்றின் மோனை எதுகை
முதலெழுத் தளவோ டொத்து முதலா
அஃதொழித் தொன்றின் ஆகும் என்ப
இவ்விரு தொடைக்கும் கிளைஎழுத்து உரிய.' – பல்காயம்

'முதலெழுத் தொன்றி முடிவதுமோனை
ஏனையது ஒன்றின் எதுகைத் தொடையே.' – சிறுகாக்கை

'உறுப்பின் ஒன்றின் விகற்பமும் அப்பால்
நெறிப்பட வந்தன நேரப் படுமே.' – சிறுகாக்கை

'இரண்டடி எதுகை திரண்டொருங் கியன்றபின்
முரண்ட எதுகை இரண்டில வரையார்.'

'அகரமோ டாகாரம் ஐகாரம் ஔவாம்
இகரமோ டீகாரம் எஏ – உகரமோ
டூகாரம் ஒஓ ஞநமவ தச்சகரம்
ஆகாத அல்லா அநு.'

'கடையிணை பின்முரண் இடைப்புணர் முரணென
இவையும் கூறுப ஒருசா ரோரே.' – யா. வி. 39

'வருக்க நெடிலினம் வந்தால் எதுகையு மோனையுமென்று
ஒருக்கப் பெயரான் உரைக்கப் படும்உயிர் ஆசிடையிட்டு
இருக்கும் ஒருசார் இரண்டடி மூன்றும் எழுத்தொன்றின்
நிரக்கும் எதுகையென் றுலும் சிறப்பில; நேரிழையே. 43

'கருதின் கடையே, கடையிணை, பின்கடைக் கூழையுமென்று,
இரணத் தொடைக்கும் மொழிவர், இடைப்புணர்
என்பதுவே.' – 42

'ஏன்று முதலள வொத்திரண் டாமெழுத் தொன்றிவரின்
சான்று ரதனை எதுகையென் றோதுவர்; தன்மைகுன்று
மூன்றுவ தொன்ற விரண்டடி ஒன்றல் முழுதுமொன்றல்
ஆன்று இனமுயி ராசிடை யாய்வரும், ஆங்கதுவே.'
– வீ. சோ. 111

'தலையாகு எதுகை தன்சீர் முழுதுறல்
இடைகடை அவ்வவ் வெழுத்துஒன் றுவதே.'
– தொ. வி. 215

'மூன்றும் எழுத்தொன்றல் ஆசுஇனம் தலையாகு
இடைகடை ஆறும் எதுகை வகையே.' – 214

'மோனைக்கு இனமே அஆ ஐஔவும்
இஈ எஏவும் உஊ ஒஓவும்
சதவும் ஞநவும் மவவும் எனலே.' – தொ. வி. 213

'வருக்க நெடிலினம் வந்தால் எதுகையும்
மோனையும் ஆமெனமொழியப் படுமே.' – மு.வீ.யா.ஒ. 17

'யரலழ இடையுறின் ஆசெனப் படுமே.' – 18

39

## மருட்பா இலக்கணம்

749\. வழிபடு தெய்வம் நிற்புறம் காப்பப்
பழிதீர் செல்வமொடு வழிவழி சிறந்து
பொலிமின் என்னும் புறநிலை வாழ்த்தும்,
ஒருதலைக் காமம் உற்றகைக் கிளையும்,
வேம்பும் கடுவும் போல்வன வெஞ்சொல்
தாங்குதல் இன்றி வழிநனி பயக்குமென்று
ஓம்படைக் கிளவியின் வாயுறுத் திடூஉம்
வாயுறை வாழ்த்தும், பொங்குதல் இன்றிப்
புரையோர் நாப்பண் அவிதல் கடனெனச்
செவியறி வுறுத்தும் செவியறி வுறூஉவும்,
ஆகிய பொருண்மையில் அமைந்தநால் வகைமேல்
வெள்ளை முதலா ஆசிரியம் இறுதி
கொள்ளத் தொடுப்பது மருட்பா ஆகும்.

இது மருட்பா ஆமாறு கூறுகின்றது.

இ–ள்: நினக்குத் தொழுகுலமாகிய தெய்வம் நின்னைப் பாதுகாப்பக் குற்றம் தீர்ந்த செல்வத்தோடு புதல்வரைப் பயந்து, புதல்வரும் அப்பெற்றியராகி எல்லீரும் நீடு வாழ்வீர் என்று தெய்வத்தைப் புறம் நிறுத்தி வாழ்த்தும் புறநிலை வாழ்த்தும்,

ஒருதலைக் காமத்தைப் பொருந்திய கைக்கிளையும்,

முற்பருவத்துக் கைத்தும் துவர்த்தும் பிற்பருவத்து உறுதி பயக்கும் வேம்பும் கடுவும் போல வெய்யவாய சொல்லினைத் தடையின்றிப் பிற்பயக்கும் எனக் கருதிப் பாதுகாத்துக் கிளக்கும் கிளப்பினால் மெய்யாக அறிவுறுத்தும் வாயுறைவாழ்த்தும்,

வியப்புஇன்றிப் பெரியோர் நடுவண் அடங்கி வாழ்தல் கடப்பாடு எனச்சொல்லிச் செவிக்கு அறிவுறுத்தும் செவி அறிவுறூஉவும்,

ஆகியபொருள்தன்மையின் அமைதிபெற்ற நான்குகூற்றின்கண் வெண்பா முதலாக ஆசிரியம் இறுதியாகக் கொள்ளும்படி தொடுப்பது மருட்பாவாம் என்றவாறு.

வெள்ளை முதலாக ஆசிரியம் இறுதியாகத் தொடுப்பது என்னது 'கொள்ள' என்றதனானே கைக்கிளைப் பொருள்மேல் இறுதிக்கண் வரும் ஆசிரிய அடி இரண்டாய்வந்து ஈற்று அயல்அடி முச்சீரான் வரும் என்றும், வெண்பா அடியும் ஆசிரிய அடியும் ஒத்து வருவதனைச் சமநிலை மருட்பா என்றும், ஒவ்வாது வருவதனை வியனிலை மருட்பா என்றும் வழங்கப்படும் என்றும் கொள்க.

இன்னும் அதனானே, புறநிலை வாழ்த்தும், செவியறிவுறூஉவும் வாயுறை வாழ்த்தும் இவ்வாறன்றி வெண்பாவேயாயும் ஆசிரியமேயாயும் வரப்பெறும் எனவும், கலியும் வஞ்சியுமாய் வரப்பெறா எனவும் கைக்கிளை எல்லாப் பாவுமாய் வரப்பெறும் எனவும் கொள்க. மருட்பாவாகவே இவை வருதல் வேண்டும் என்னும் யாப்புறவு இல்லை.

புறநிலை வாழ்த்து மருட்பாவிற்குச் செய்யுள் :

'தென்றல் இடைபோழ்ந்த தேனார் நறுமுல்லை
முன்றில் முகைவிரியும் முத்தநீர்த் தண்கோளூர்க்
குன்றமர்ந்த கொல்லேற்றான், நிற்காப்ப – என்றும்
தீரா நண்பின் தேவர்
சீர்சால் செல்வமொடு, பொலிமதி சிறந்தே' – யா. கா. 36 மே.

எனவும்,

கைக்கிளை மருப்பாவிற்குச் செய்யுள் :

'திருநுதல் வேர்வரும்பும்; தேங்கோதை வாடும்
இருநிலம் சேவடியும் தோயும்; – அரிபரந்த
போகிதழ் உண்கணும் இமைக்கும்;
ஆகும் மற்றிவள் அகலிடத் தணங்கே' – பு. வெ. கை. 3

எனவும்,

வாயுறை வாழ்த்து மருட்பாவிற்குச் செய்யுள் :

'பலமுறை ஓம்பப் படுவன கேண்மின்!
சொலல்முறைக்கண் தோன்றிச் சுடர்மணித்தேர் ஊர்ந்து
நிலமுறையின் ஆண்ட நிகரிலார் மாட்டும்
சிலமுறை அல்லது செல்வங்கள் நில்லா;
விலங்கும் எறிபடையும் வீரமும் அன்பும்
கலந்ததங் கல்வியும் தோற்றமும் ஏனைப்
பொலஞ்செய் புனைகலனே டிவ்வாறி னாலும்
விலங்கிவருங் கூற்றை விலக்கலு மாகா(து);
அனைத்தாதல் நீயிரும் காண்டிர்; – நினைத்தக்க
கூறிய மெய்ம்மொழி பிழையாது,
தேறிநீர் ஒழுகின், சென்றுபயன் தருமே' – யா. கா. 36 மே.

எனவரும்.

செவியறிவுறூஉ மருட்பாவிற்குச் செய்யுள் :

'பல்யானை மன்னர் முருங்க அமருழந்து,
கொல்யானைத் தேரொடும் கோட்டந்து – நல்ல
தலையாலங் கானம் பொலியத் – தொலையாப்

படுகளம் பாடுபுக் காற்றிப் பகைஞர்
அடுகளம் வேட்டோன் மருக! – அடுதிறல்
ஆழி நிமிர்தோள் பெருவழுதி! எஞ்ஞான்றும்
ஈரம் உடையையாய், என்வாய்ச் சொற்கேட்டி;
உரிய உழவரை நெஞ்சனுங்கக் கொண்டு
வருங்கால் உழவர்க்கு வேளாண்மை செய்யல்;
மழவர் இழைக்கும் வரைக்கால் நிதிஈட்டம்
காட்டும் அமைச்சரை ஆற்றத் தெளியல்;
அமைத்த அரும்பொருள் ஆறன்றி வெளவல்;
இனத்தைப் பெரும்பொருள் ஆசையி னுற்சென்று
மன்றம் மறுக அகழாதி; – என்றும்
மறப்புற மாக மதுரையார் ஓம்பும்
அறப்புறம் ஆசைப்ப டேற்க; – அறத்தால்
அவையார் கொடுநாத் திருத்தி, – நவையாக
நட்டார் குழிசி சிதையாதி; – ஒட்டார்
செவிபுதைக்கும் தீய கடுஞ்சொல் – கவிபடைத்தாய்!
கற்றூர்க் கினனாகிக் கல்லார்க் கடிந்தொழுகி,
செற்றூர்ச் செறுத்துநிற் சேர்ந்தாரை ஆக்குதி;
அற்றம் அறிந்த அறிவினாய்! – மற்றும்
இவைஇவை வீயா தொழுகின், நிலையாப்
பொருகடல் ஆடை நிலமகள்
ஒருகுடை நீழல் துஞ்சுவள் மன்னே' – *யா. கா. 36 மே.*

என்வும் வரும். பிறவும் அன்ன. (40)

விளக்கம்

*புறநிலை வாழ்த்துச் சமனிலை மருட்பாவிற்குச் செய்யுள் :*

*'அரசியல் கோடா தரனடியார்ப் பேணும்*
*முரசியல் தானைவேல் மன்னர் – பரசோன்*
*கழலிணை பொதுவில்காப் பாக,*
*வழிவழி சிறந்து வாழியர் பெரிதே.' – சி. சே. கோ. 81*

கைக்கிளைப்பொருளதாகிய வியனிலைமருட்பாவிற்குச் செய்யுள்:

'பருந்தளிக்கும் முத்தலைவேல் பண்ணவற்கே அன்றி,
விருந்தளிக்கும் விண்ணோர் பிறர்க்கும்; – திருந்த
வலனுயர் சிறப்பின் மன்ற வாணன்அக்
குலமுனி புதல்வனுக் கீந்த
அலைகட லாகுமிவ் வாயிழை நோக்கே.' – சி.செ.கோ. 82

வாயுறை வாழ்த்து மருட்பாவிற்குச் செய்யுள் :

'வம்மின் நமரங்காள்! மன்றுடையான் வார்கழல்கண்டு
உய்ம்மின், உறுதி பிறிதில்லை, – மெய்ம்மொழிமற்று
என்மொழி பிழையா தாகும்;
பின்வழி நுமக்குப் பெரும்பயன் தருமே.' – 83

செவியறிவுறூஉ மருட்பாவிற்குச் செய்யுள் :

'வாழ்த்துமின் தில்லை, நினைமின் மணிமன்றம்,
தாழ்த்துமின் சென்னி தலைவற்கு, – வீழ்த்த
புறநெறி ஆற்றுது அறனெறி போற்றி,
நெறிநின் றொழுகுதிர் மன்ற;
துறைஅறி மாந்தர்க்குச் சூழ்கடன் இதுவே.' – 84

## ஒத்த நூற்பாக்கள்

'மருட்பா ஏனை இருசார் அல்லது
தான்இது என்னும் தனிநிலை இன்றே.' – தொ. பொ. 937

'புறநிலை வாயுறை செவியறி வுறூஉவென
திறனிலை மூன்றும் திண்ணிதின் தெரியின்
வெண்பா இயலினும் ஆசிரிய இயலினும்
பண்புற முடியும் பாவின என்ப.' – 473

'வழிபடு தெய்வம் நிற்புறம் காப்பப்
பழிதீர் செல்வமொடு வழிவழி சிறந்து
பொலிமின் என்னும் புறநிலை வாழ்த்தே
கலிநிலை வகையும் வஞ்சியும் பெறாஅ.' – 422

'வாயுறை வாழ்த்தே அவையடக் கியலே
செவியறி வுறூஉவென அவையும் அன்ன.' –தொ. பொ. 423

'வாயுறை வாழ்த்தே வயங்க நாடின்
வேம்பும் கடுவும் போல வெஞ்சொல்
தாங்குதல் இன்றி வழிநனி பயக்குமென்று
ஓம்படைக் கிளவியின் வாயுறுத் தற்றே.' – 424

'செவியுறை தானே
பொங்குதல் இன்றிப் புரையோர் நாப்பண்
அவிதல் கடனெனச் செவியுறுத் தன்றே.' – 426

'கைக்கிளை தானே வெண்பா ஆகி
ஆசிரிய இயலான் முடியவும் பெறுமே.' – 431

'வெள்ளை முதலா ஆசிரியம் இறுதி
கொள்ளத் தொடுப்பது மருட்பா ஆகும்.'

'இருதலைக் காமம் அன்றிக் கைக்கிளை
ஒருதலைக் காமம் ஆகக் கூறிய
இலக்கண மரபின் இயல்புற நாடின்,
அதர்ப்பட மொழிந்தனர் புலவர் அதுவே
பெறுதி வெண்பா உரித்தாய் மற்றதன்
இறுதி எழுசீர் ஆசிரி யம்மே.' – கடியநன்னியம்

'கைக்கிளை மருட்பா ஆகி வருகால்
ஆசிரியம் வருவ தாயின் மேவா
முச்சீர் எருத்திற் ருகி, முடியடி
எச்சீ ரானும் ஏகாரத்து இறுமே.' ,,

'புறநிலை வாயுறை செவியறி வுறூஉவே
அறநிலை வஞ்சியும் கலியும் ஆகாஅ,
வெண்பா ஆசிரிய இயலான் வருமே,
வஞ்சி கலிஅவற்று இயலா; அவற்றுள்
இடைஇரு செய்யுளும் கைக்கிளைப் பாட்டும்
கடையெழு சீரிரண்டு அகவியும் வருமே.' – நல்லாதம்

'வேதவாய் மேன்மகனும் வேந்தன் மடமகளும்
நீதியால் சேர்ந்து நிகழ்ந்த நெடுங்குலம்போல்
ஆதிசால் பாவும் அரசர் வியன்பாவும்
ஓதியவாறு ஒன்ற மருட்பாவாய் ஓங்கிற்றே.'

'கங்கா யமுனை சங்கமம் போலவும்
சங்கர நாரணர் சட்டகம் போலவும்
வெண்பாவும் ஆசிரி யமுமாய் விராஅய்ப்
பண்பார் புறநிலை......

'பண்ணும் திறமும் போல் பாவும் இனமுமாய்
வண்ண விகற்ப வகைஇன்றிப் – பண்ணின்
திறம்விளரிக் கில்லதுபோல், செப்பல் அகவல்
இசைமருட்கும் இல்லை, இனம்.'

'பண்பார் புறநிலை,பாங்குடைக் கைக்கிளை,வாயுறை வாழ்த்து,
ஒண்பாச் செவியறி என்றிப் பொருள்மிசை, ஊனமில்லா
வெண்பா முதல்வந் தகவல்பின் னாக விளையுமென்றால்
வண்பால் மொழிமடவாய் ! மருட்பா வெனும் வையகமே.'

– யா. கா. 36

'வெள்ளை, முந்திஇறுதி அகவலதாகி முடியுமென்றால்,
இந்து நுதல்மடவாய்! மருட்பா வென்றியம்புவரே.'

– வீ. சோ. 119

'மருட்பா வெண்டளை வந்தபின் அகவல்
ஈற்றின் மருளும் இயல்புடைத்து என்ப.' – தொ. வி. 238

'புறநிலை கைக்கிளை என்றிப் பொருள்மிசை
வெண்பா முதல்வந் தகவல்பின் வருவது
மருட்பா எனப்பெயர் வைக்கப் படுமே.'

– மு. வீ. யா. செ. 61

## குறள் வெண்பாவின் இனம்

750. ஒழுகிய ஓசையின் ஒத்துஅடி இரண்டாய்
விழுமிய பொருள்தரும் வெண்செந் துறையும்,
அந்தடி குறைநவும் செந்துறைச் சிதைவும்
சந்தழி குறளுமாம் தாழிசைக் குறளும்,
குறட்பா இனமாம் கூறுங் காலே.

இது குறள் வெண்பாவிற்கு இனமாமாறு கூறுகின்றது.

இ-ள் : ஒழுகல் ஓசையினை உடைய தம்மில் அளவு ஒத்த இரண்டு அடியாகச் சீரிய பொருளை உடைத்தாய் வரும் வெண் செந்துறையும்,

இறுதி அடி குறைந்து வருவனவும், ஒழுகிய ஓசையும் விழுமிய பொருளும் இன்றி வரும் வெண் செந்துறையும், செப்பல் ஓசையில் சிதைந்து வரும் குறள் வெண்பாவும் ஆகிய முக்கூற்றுக் குறள் தாழிசையும், மேற்கூறிய குறள்பாவிற்கு இனமாம், சொல்லும் இடத்து என்றவாறு.

சீர் வரையறுத்திலாமையின் எனைத்துச் சீரானும் அடியாய் வரப்பெறும்.

வெண் செந்துறைக்குச் செய்யுள் :

‘ஆர்கலி உலகத்து மக்கட் கெல்லாம்
ஓதலின் சிறந்தன்று ஒழுக்க முடைமை’ – *முதுமொழி* 1

எனவும்,

ஈற்றடி குறைந்த குறள்தாழிசைக்குச் செய்யுள் :

‘நண்ணு வார்வினை நைய நாடொறும் நற்றவர்க்கர சாயஞானநற்
கண்ணி னடி யேயடை வார்கள் கற்றவரே.’ – *யா. கா.* 27 *மே.*

எனவும் வரும். இதற்கும் அதிகாரத்தானே இரண்டு அடியே கொள்க.

**செந்துறைச்சிதைவுக்குறள் தாழிசைக்குச் செய்யுள் :**

**'அறுவர்க் கறுவரைப் பெற்றும் கவுந்தி**
**மறுவறு பத்தினி போல்வையி னீரே'** – யா. கா. 27 மே.

[இஃது உலகியலுக்கு மாறுபட்டிருத்தலின் செந்துறைச் சிதைவாயிற்று]

**எனவும்,**

**சந்தழி குறள் தாழிசைக்குச் செய்யுள் :**

**'வண்டார்பூங் கோதை வரிவளைக்கைத் திருநுதலாள்**
**பண்டையள் அல்லள் படி'** – யா. கா. 27 மே.

[வரிவளைக்கை – திருநுதலாள் – கலித்தளை]

**எனவும் வரும். பிறவும் அன்ன.** **(41)**

**விளக்கம்**

*வெண்செந்துறைக்குச் செய்யுள் :*

*'செம்பொன் வேய்ந்த செழுமணி மன்றத்*
*தம்பொன் மேருவுக் கடிமுடி இன்றே.'* – சி. செ. சோ. 29

*ஈற்றடி குறைந்த குறள் தாழிசைக்குச் செய்யுள் :*

*'கம்பை மாநதி யின்க ரைச்சிறு கன்னி பார முலைத்த ழும்பணி*
*உம்பர்கோன் விடைஒன் றுலகேழும் உண்டதுவே.'* – 30

*செந்துறைச் சிதைவுக் குறள் தாழிசைக்குச் செய்யுள் :*

*'முன்புல கீன்ற முகிழ்முலைக் கன்னியோ*
*டின்புறும் யோகி எழுபுவிக் கரசே.'* – 31

*சந்தழி குறள் தாழிசைக்குச் செய்யுள் :*

*'பின்ருழ் நறுங்கூந்தல் பிடிதழீஇ மால்யானைக்*
*கன்றீனும் முக்கட் களிறு.'* – 32

## ஒத்த நூற்பாக்கள்

'அந்தம் குறையாது அடியிரண் டாமெனின்
செந்துறை என்னும் சிறப்பிற் றாகும்.' – காக்கை.

'ஈரடி இயைந்தது குறள்வெண் பாவே
ஒத்த அடித்தே செந்துறை வெள்ளை.' – அவிநயம்

'ஒழுகிய ஓசையின் ஒத்துஅடி இரண்டாய்
விழுமிய பொருளது வெண்செந் துறையே.' – யா. வி. 63

'அந்தடி குறைநவும் செந்துறைச் சிதைவும்
சந்தழி குறளும் தாழிசைக் குறளே.' – 64

'உரைத்தன இரண்டும் குறட்பா இனமே.' – 65

'அந்தமில் பாதம் அளவிரண் டொத்து முடியின்வெள்ளைச்
செந்துறை ஆகும், திருவே! அதன்பெயர்; சீர்பலவாய்
அந்தம் குறைநவும், செந்துறைப்பாட்டின் இழிபும்,அங்கேழ்ச்
சந்தம் சிதைந்த குறளும் குறளினத் தாழிசையே.'
– யா. கா. 27

'ஆயிரண் டொத்து நிகழடி வெண்செந் துறை; இழுகிப்
போமிசைச் செந்துறை, சந்தம் சிதைகுறள், பூண்பலசீர்
தாமது அந்தங் குறைநவு மாங்குறட் டாழிசையே.'
– வீ. சோ. 120

'வெண்செந் துறைகுறள் வெண்பா இனமாய்ச்
சீர்தளை அடிஎலாம் சேர்ந்து விரவினும்
ஒத்துஅடி இரண்டாய் ஒழுகும் மற்றே.' – தொ. வி. 239

'குறட்டா ழிசைஒலி குன்றும் குறளும்
அந்தடி குறைநவும் செந்துறைச் சிதைவுமாம்.' – 243

'இரண்டடி யாய்ஈற் றடிசீர் குறைநவும்
செந்துறைப் பாட்டில் சிதைந்து வருநவும்
சந்தழி குறளும் தாழிசைக் குறளே.' – மு. வீ. யா. செ. 17

'தம்முள் அளவொத்த அளவடி இரண்டாய்
விழுமிய பொருளும் ஒழுகிய ஓசையும்
ஆய்வரல் குறள்வெண் செந்துறை ஆகும்.' – 18

## கூன் ஆமாறு

751. அடிமுதல் பொருள்உற வருவது கூன்; அஃது
இறுதியும் வஞ்சியுள் இயலும் என்ப.

மேல் கூறப்பட்ட செய்யுட்கு எல்லாம் இன்னும் ஒரு வாற்ருன் இலக்கணம் எய்துவிப்பான் புகுந்தவற்றுள் இஃது கூன் ஆமாறு கூறுகின்றது.

இ–ள்: அடி முதற்கண் செய்யுள் பொருள்படத் தனியே வந்து நிற்பது கூனும்; அக்கூன் வஞ்சியுள் இறுதிக்கண்ணும் வந்து நிற்கும் என்று கூறுவர் புலவர் என்றவாறு.

கூன் போறலின் கூன் ஆயிற்று. எனவே, தனி நிற்றல் பெற்ரும். இதனைத் தனிச்சொல் என்பாரும் உளர்.

வரலாறு.

‘ உதுக்காண்,
சுரந்தாஞ வண்கைச் சுவணமாப் பூதன்
பரந்தானைப் பல்புகழ் பாடி, — இரந்தார்மாட்
டின்மை அகல்வது போல, இருள்நீங்க
மின்னும் அளிதோ மழை ’ – யா. கா. 45 மே.

என்னும் வெண்பாவினுள் ‘ உதுக்காண் ’ எனவும்,

‘ அவரே,
கேடில் விழுப்பொருள் தருமார் பாசிலை
வாடா வள்ளியங் காடிறந் தோரே;
யானே,
தோடார் எல்வளை நெகிழ ஏங்கிப்
பாடமை சேக்கையுள் படர்கூர்ந் திசினே;

அன்னள் அளியள் என்னுது, மாமழை
இன்னும் பெய்ய முழங்கி,
மின்னும்; தோழி,என் இன்னுயிர் குறித்தே ;' - குறுந். 216

என்னும் ஆசிரியத்துள் அவரே எனவும் யானே எனவும்,

'உலகினுள்,
பெருந்தகையார் பெருந்தகைமை பிறழாவே, பிறழினும்
இருந்தகைய இறுவரையின் எரிபோலச் சுடர்விடுமே,
சிறுதகையார் சிறுதகைமை சிறப்பெனினும், பிறழ்வின்றி,
உறுதகைமை உலகிற்கோர் ஒப்பாகித் தோன்றுதே'
– யா. கா. 45 மே.

என்னும் கலியுள் உலகினுள் எனவும்,

'உலகே,
முற்கொடுத்தார் பிற்கொளவும்
பிற்கொடுத்தார் முற்கொளவும்
உறுதிவழி ஒழுகுமென்ப;
அதனுல்,
நற்றிறம் நாடுதல் நன்மை;
பற்றற யாவையும் பரிவறத் துறந்தே' – யா. கா. 45 மே.

என்னும் வஞ்சியும் உலகே எனவும், அடிமுதற் கண்ணும்,

'மாவழங்கலின் மயக்குற்றன — வழி' - யா. கா. 45 மே.

என்னும் வஞ்சிஅடியுள் வழி என இறுதிக்கண்ணும் வந்தவாறு காண்க.

இறுதியும் என்ற உம்மையால்,

'கலங்கழாஅலின் துறை கல்க்குற்றன.' – யா. கா. 45 மே.

என்னும் வஞ்சி அடியின் இடைக்கண் 'துறை' என வருதலும் கொள்க.

பொதுப்படக் கூறிய அதனுல் சீரானும் அசையானும் அன்றிச்

'சிறுகுடி யீரே சிறுகுடி யீரே' - கலி. 38

என அடியானும் கூன் வருதல் கொள்க. பிறவும் அன்ன.
(42)

## ஒத்த நூற்பாக்கள்

'அசைகூன் ஆகும் அவ்வயி னான.' – தொ. பொ. 360

'சீர்கூன் ஆதல் நேரடிக் குரித்தே.' – 361

'அடிமுதல் பொருள்பெற வருவது தனிச்சொல்அஃது
இறுதியும் வஞ்சியுள் இயலும் என்ப.' – யா. வி. 94

'உறுப்பில் குறைந்தவும் பாக்கள் மயங்கியும்
மறுக்கப் படாத மரபின ஆகியும்
எழுவாய் இடமா அடிப்பொருள் எல்லாம்
தழுவ நடப்பது தான்தனிச் சொல்லே.' – காக்கை.

'வஞ்சி மருங்கின் இறுதியும் ஆம்என
கண்டனர் மாதோ கடனறிந் தோரே.' – காக்கை.

'தனியே,
அடிமுதல் பொருள்பெற வருவது தனிச்சொல்,அஃது
இறுதியும் வஞ்சியுள் நடக்கும் என்ப.' – அவிநயம்

'அடியினின் பொருளைத்தான் இனிது கொண்டு
முடிய நிற்பது கூன்என மொழிப.' – பல்காயம்

'வஞ்சி இறுதியும் ஆகும் அதுவே.' ,,

'அசைகூ னாகும் என்மனார் புலவர்.' ,,

'தானே அடிமுதல் பொருள்பெற வருவது
கூன்என மொழிப குறியுணர்ந் தோரே.' – நத்தத்தம்

'வஞ்சி இறுதியும் வரையார் என்ப.' ,,

'வெண்சீர் வரையின்றிச் சென்று விரவினும்,
தன்பால் மிகுதியின் வருவன எல்லாம்
வஞ்சி உரிச்சீர் விரவினும் வெண்பா
வருகுந தனிச்சொல் அசைச்சீர் அடியே.'

'அடிமுதற்கண் நான்கிற்கும் சீர்கூன் ஆகும்
இடைகடையும் வஞ்சிக் கசை.'

*'பொருளோ டடிமுதல் நிற்பது கூன்,அது வேபொருந்தி*
*இருள்சேர் விலாவஞ்சி ஈற்றினும் நிற்கும்.'* – யா. கா. 45

*'பாமுதல் நிற்பதுகூன், வஞ்சியீற்றினும் பாதத்துள்ளும்.'*
– வீ. சோ. 120

*'அடிமுதற் கட்பாப் பொருளைத் தழுவி*
*தனியே நிற்பது கூனும்; அக்கூன்*
*வஞ்சியுள் இடைகடை முதலினும் வருமே.'*
– மு. வீ. யா. ஒ. 21

42

## வகையுளி ஆமாறு

752. அசையும் சீரும் அடியும் எல்லாம்
இசைய வருபொருள் இயைபு நோக்காது
ஓசையே குறிக்கொண்டு ஒடுங்கவும் விரியவும்
அலகிடல், வகையுளி ஆகும் என்ப.

**இது வகையுளி ஆமாறு கூறுகின்றது.**

**இ–ள்: அசையும் சீரும் அடியும் ஆகிய எல்லா வற்றின்கண்ணும் பொருந்த வருகின்ற பொருள் இயைபைக் குறியாது ஓசையினையே குறித்துக் கூம்பவும் கூம்பாது அலரவும் அலகிட்டு, வண்ணம் அறுத்தல் வகையுளியாம் என்று கூறுவர் ஆசிரியர் என்றவாறு.**

வரலாறு:

'கடியார்பூங் கோதை கடாயினன், திண்தேர்
சிறியார்தஞ் சிற்றில் சிதைத்து.' – யா. கா. 45 மே.

**இதனுள், கடியார் என்றும் பூங்கோதை என்றும் கடாயினன் என்றும் இவ்வாறு அலகிட ஆசிரியத்தளையும் கலித்தளையும் தட்டுச்செப்பல் ஓசை சிதைதலின் கடியார்பூ என்றும் கோதை என்றும் அலகிட ஓசை சிதையாதாம்.**

'மலர்மிசை ஏகினுன் மாணடி சேர்ந்தார்
நிலமிசை நீடுவாழ் வார்.' – குறள் 4

இதனுள் நிலமிசை என்றும் நீடுவாழ் என்றும் வார் என்றும் அலகிட மாறுபடாதாம்.

'பாடுநர்க்கும் ஆடுநர்க்கும் பண்டுதாம் கண்டவர்க்கும்
ஊடுநர்க்கும் கூடுநர்க்கும் ஒத்தலால், — நீடுநீர்
நல்வயல் ஊரன் நறுநஞ்சாந் தணியகலம்,
புல்லலின் ஊடல் இனிது.' – யா. கா. 45 மே.

இதனுள் டுகர நகரங்கள் பிரிந்து இசைத்தன ஆயினும் இரண்டு அடியும் நாலசைச் சீராய்ச் செப்பலோசை சிதைதலின் டுகர நகரங்களைக் கூட்டி நிரைஅசையாக அலகிடச் சிதையாதாம். இவ்வாறே பிறவும் அலகிட்டுக் கொள்க. (43)

## விளக்கம்

வகையுளி பொருளை நோக்காது ஓசையையே நோக்கிச் சீர் அமைப்பது.

பாடுநர்க்கும் முதலியவற்றை நேர் நிரை நேர் ஆகிய கூவிளங் காயாகப் பிரிப்பவே செய்யுள் அமையும். தேமாந்தண்பூ வாகப் பிரிப்பின் செய்யுள் கெடும். எனவே, பாக்களுக்கு ஓசையே இன்றியமையாதது என்பது உணரப்படும்.

## ஒத்த நூற்பாக்கள்

'அசையும் சீரும் இசையொடு சேர்த்தி
வகுத்தனர் உணர்த்தலும் வல்லோர் ஆறே.'
– தொ. பொ. 323

'அருள்நோக்கு நீரார் அசைசீர் அடிக்கண்
பொருள்நோக்கா தோசையே நோக்கி, – மருணீக்கிக்
கூம்பவுங் கூம்பா தலரவும் கொண்டியற்றல்,
வாய்ந்த வகையுளியின் மாண்பு.'

'எழுத்தல் கிளவியின் அசையொடு சீர்நிறைத்து
ஒழுக்கலும், அடியொடு தளைசிதை யாமை
வழுக்கில் வகையுளி சேர்த்தலும் உரித்தே.' – அவிநயம்

'குன்றியும் தோன்றியும் பிறிதுபிறிது ஆகியும்
ஒன்றிய மருங்கினும் ஒருபுடை மகாரம்
அசையும் சீரும் அடியும் எல்லாம்
வகையுளி சேர்த்தல் வல்லோர் மேற்றே.' – நத்தத்தம்

43

## வாழ்த்தும் வசையும் ஆமாறு

753. வாழ்த்து மெய்வாழ்த்து இருபுற வாழ்த்துஎனப்
போற்றல் வேண்டும்; வசையும்அவ் வகைத்தே.

இது வாழ்த்தும் வசையும் ஆமாறு கூறுகின்றது.

இ-ள்: வாழ்த்து மெய்வாழ்த்தும் இருபுற வாழ்த்தும் என இரு வகைத்தாகப் பாதுகாத்து அறிதலை விரும்பும் ஆசிரியன்; வசையும் அவ்விரு வகையினை உடைத்தாம் என்றவாறு.

வரலாறு:

'கார்நறு நீலம் கடிக்கயத்துள் வைகலும்
நீர்நிலை நின்ற பயன்கொலோ? — கூர்நுனைவேல்
வண்டிருக்க நக்கதார் வாமான் வழுதியால்
கொண்டிருக்கப் பெற்ற குணம்' – யா. கா. 45 மே.

என மெய்வாழ்த்தும், [உண்மையாக வாழ்த்துவது]

'பண்டும் ஒருகால்தன் பைந்தொடியைக் கோட்பட்டு
வெங்கடம் வில்லேற்றிக் கொண்டுழந்தான்; – தென்களந்தைப்
பூமான் திருமகளுக் கின்னும் புலம்புமால்,
வாமான்தேர் வையையார் கோ' – யா. கா. 45 மே.

என இருபுற வாழ்த்தும், [வைவதைப்போல வாழ்த்துவது]

'தந்தை இலைச்சுமடன் தாய்தொழிலி தான்பார்ப்பான்,
எந்தைக்கிஃ தெங்ஙனம் பட்டதுகொல்? — முந்தை
அவிஉணவி ஞர்தெரியின் ஆவதாங் கொல்லோ
கவிகண்ண ஞர்தம் பிறப்பு' – யா. கா. 45 மே.

என மெய் வசையும்,

[இதுவும் இருபுற வாழ்த்து என்பதே சாலும்]

'படையொடு போகாது நின்றெறிந்தான்; என்றும்
கொடையொடு நல்லார்கண் தாழ்ந்தான்; — படையொடு
பாடி வழங்கும் தெருவெல்லாம் தான்சென்று
கோடி வழங்கு மகன்' – யா. கா. 45 மே.

என இருபுற வசையும் வந்தவாறு காண்க. (44)

விளக்கம்

*'கார்நறு......குணம்'*

*நீலம் தவம் செய்து பாண்டியன் தன்னைச் சூட்டிக்கொள்ளும் வாய்ப்பினைப் பெற்றது என்பது வெளிப்படை வாழ்த்து.*

*'பண்டும்......கோ'*

*பண்டு இராமனாக அவதரித்து வில் வீரம் காட்டிய திருமாலே இன்று பாண்டியனாகத் தோன்றித் தென்களந்தைச் செல்வமாகிய திருமகளை அடைய முயல்கிறான் என்பது குறிப்பாகப் பெறப் படுதலின் வைவது போன்ற வாழ்த்து.*

*முன்பு சீதைக்காகப் புலம்பியவன் இப்பொழுது தென் களந்தை மன் திருமகளுக்காகப் புலம்புகிறான் என்ற வெளிப்படை வசையிலே மேல்குறித்த குறிப்பு வாழ்த்து அமைந்தமை காண்க.*

*'தந்தை......பிறப்பு'*

*தந்தை இலையாலாகிய சும்மாடு வைத்திருப்பவன். தாய் வேலைக்காரி. தான் உலகியலை நோக்காது வேதாந்தத்தை*

நோக்குபவன். கண்களோ கவிந்த கண்கள். முகமோ யானை முகம். இவனைத் தேவர் வழிபடுவது என்னே என்பது வசை. ஆனால் தந்தை கங்கைசூடிய சிவன்; தாய் ஐந்தொழிலியற்றும் பராசக்தி. தான் வேதம் நாடும் பெருந்தெய்வம் என்ற பொருளால் தேவர் வணங்குதல் பெறப்படுதலின் வாழ்த்தாகும். இப்பாடல் இருபுற வாழ்த்து என்பதே சாலும்.

இருபுற வசை – வாழ்த்துவதைப் போல வைதல்.

'படையொடு......மகன்'

பெண்களுக்குக் கொடையும் வீரருக்குப் புத்தாடையும் வழங்கும் கொடையாளன் என்று வாழ்த்துவது போலப் போர்க் களத்திற்குப் போரிடச் செல்லும் ஆற்றலின்றிப் பாடி வீட்டில் தங்கி வீரருக்கு ஆடை வழங்குவதிலும் மகளிரோடு இருப்பதிலும் காலங்கழிக்கும் வீரமிலி என்று குறிப்பாக வைதவாறு.

44

## எண் வனப்பிலக்கணம்

754. அம்மை அழகு தொன்மை தோலே
விருந்தே இயையே புலனே இழைபுஎனப்
பொருந்திய எட்டும் வனப்பு; அவை எட்டனுள்,
அம்மை தானே அடிநிமிர்பு இன்றிச்
சின்மென் மொழியால் சீர்புனைந்து யாத்தலும்,
செய்யுள் மொழியால் சீர்புனைந்து யாப்பின்
அவ்வகை தானே அழகுஎனப் படுதலும்,
தொன்மை தானே சொல்லுங் காலை
உரையொடு புணர்ந்த பழமைமேற்று ஆகலும்,
இழும்என் மொழியால் விழுமியது நுவலினும்
பரந்த மொழியால் அடிநிமிர்ந்து ஒழுகினும்
அன்னவை இரண்டும் தோல்என அறைதலும்,

விருந்து தானே பொருந்தக் கூறின்
புதுவது புனைந்தயாப் பின்மேற்று ஆகலும்,
ஞணநம ணயரல வழள என்னும்
புள்ளி இறுதி இயைபுஎனப் புகறலும்,
தெரிந்த மொழியான் செவ்விதின் கிளந்து
தேர்தல் வேண்டாது குறித்தது தோன்றின்
புலன்எனப் படுதலும், புலன்நன்கு உணர்ந்தோர்
ஒற்றெடு புணர்ந்த வல்லெழுத்து அடக்காது
குறள்அடி முதலா ஐந்தடி காறும்
ஓங்கிய சொல்லான் ஆங்கனம் மொழியின்
இழைபுஎனப் படுதலும், எய்தும் என்ப.

இது வனப்பு ஆமாறு கூறுகின்றது.

இ - ள்: அம்மை முதலாகப் பொருந்திய எட்டும் வனப்பாம்; அவ்வெட்டனுள் அம்மை ஆவது சில அடியாகிச் சிலவாய மெல்லியவாய சொற்களால் ஒள்ளிய பொருள்மேல் இனிது தொடுக்கப்படுதலையும்,

செய்யுட்கு உரிய சொற்களால் ஓசை இனியவாகத் தொடுப்பின் அவ்வகைப்பட்ட செய்யுள் அழகு என்று சொல்லப்படுதலையும்,

தொன்மையாவது கூறுமிடத்துப் பழைமைத்தாகி நிகழ்ந்த பெற்றி உரைக்கப்படும் இராகவ சரிதம் பாண்டவ சரிதம் முதலியவற்றின் மேற்று ஆதலையும்,

இழும் என்னும் மெல்லியவாய சொற்களால் விழுமியவாய்க் கிடப்பனவும் எல்லாச் சொற்களோடும் பல அடி உடையவாய்க் கிடப்பனவும் என்று இத்தன்மையவாகிய இரு திறத்தினையும் தோல் என்று சொல்லுதலையும்,

விருந்தாவது பொருந்தக்கூறும் இடத்து இப்பொழுது உள்ளாரைப் பாடுவனவற்றின் மேற்று ஆதலையும்,

ஞணநமண யரலவழள என்னும் பதினொரு புள்ளியும் ஈறாக வந்த செய்யுட்களை இயைபு என்று சொல்லுதலையும்,

வழக்கச்சொல்லினானே பொருள் தோன்றத் தொடுக்கப்பட்டு, ஆராயவேண்டாமல் பொருள் தோன்றுவதனைப் புலன் என்று சொல்லப்படுதலையும்,

இலக்கணங்களை அறிந்தோர், ஒற்றொடு புணர்ந்த வல்லெழுத்து யாதும் தீண்டாது செய்யுளியல்உடையார் எழுத்து எண்ணி அடிவகுக்கப்பட்ட குறள்அடி முதலாகப் பதினேழ்நிலத்து ஐந்து அடியும் முறையானே உடையவாய் ஓங்கிய சொற்களால் அவ்வாறு மொழியின் இழைபு என்று சொல்லப்படுதலையும் பொருந்தும் என்று கூறுவர் புலவர் என்றவாறு.

வரலாறு :

'அறிவினான் ஆகுவது உண்டோ? பிறிதின்நோய்
தன்நோய்போல் போற்றாக் கடை' – குறள் 315

என அம்மையும்,

'துணிஇரும் பரப்பகம் குறைய வாங்கி
அணிகிளர் அடுக்கல் முற்றிய எழிலி
காலொடு மயங்கிய கனைஇருள் நடுநாள்,
யாங்குவந் தனையோ? ஓங்கல் வெற்ப!
நெடுவரை மருங்கின் பாம்புஎன இழிதரும்
கடுவரல் கலுழி நீந்தி,
வல்லியம் வழங்கும் கல்அதர் நெறியே' – யா. கா. 45 மே.

என அழகும்,

[*இப்பாடலில் அடுக்கல், எழிலி, கார், ஓங்கல், கலுழி, வல்லியம் முதலிய திரிசொல் பல பயின்றுள்ளமை காண்க.*]

'செறிதொடி! உவகை கேளாய்! செஞ்சுடர்த் தெறுகதிர்ச் செல்வன்'

என்பதூஉம் இராமாயணம் பாரதம் போல்வனவும் ஆகிய தொன்மையும்,

'பாயிரும் பரப்பகம் புதையப் பாம்பின்
ஆயிரம் மணிவிளக்கு அழலும் சேக்கைத்
துளிதரு வெள்ளம் துயில்புடை பெயர்க்கும்
ஒளியோன் காஞ்சி எளிதெனக் கூறின்,
இம்மை இல்லை; மறுமை இல்லை;
நன்மை இல்லை; தீமை இல்லை;
செய்வோர் இல்லை; செய்பொருள் இல்லை;
அறிவோர் யார்அஃது இறுவுழி இறுகென' - *யா. கா.* 45 மே.

[*இது மார்க்கண்டேயனார் காஞ்சி*]

என இழும் என்மொழியால் விழுமிது நுவன்ற தோலும்,

'திருமழை தலைஇய இருள்நிற விசும்பின்'

என்ற மலைபடுகடாம் ஆகிய பாடல்போலப் பரந்த மொழியான் அடி நிமிர்ந்து ஒழுகிய தோலும்,

'பார்க்கடல் முகந்த பருவக் கொண்மூ
வார்ச்செறி முரசின் முழங்கி ஒன்னார்
மலைமுற் றின்றே; வயங்குதுளி சிதறிச்
சென்றவள் திருமுகம் காணக் கடுந்தேர்
இன்றுபுகக் கடவுமதி, பாக, உதுக்காண்,
மாவொடு புணர்ந்த மாஅல் போலல்,
இரும்பிடி உழையது ஆகப்
பெருங்காடு மடுத்த காமர் களிறே' - *யா. கா.* 45 மே.

எனப் புலனும்,

[ *எளிய சொல்லால் செய்தியைப் படம் பிடித்ததுபோல விளக்கிக்காட்டியமை காண்க.* ]

'போந்து போந்து சார்ந்து சார்ந்து *எழுத்து* 4
தேர்ந்து தேர்ந்து சூசி நேர்ந்து 5
வண்டு சூழ, விண்டு வீங்கி 6
நீர்வாய்க் கொண்டு நீண்ட நீலம், 7
ஊர்வாய் ஊதை வீச, ஊர்வாய் 8
மதியேர் வண்டோடு ஒல்கி மாலை 9
நன்மணம் கமழும் பன்னெல் ஊர ! 10
அமையேர் மென்தோள், ஐஅரி நெடுங்கண், 11
இணையீர் ஓதி, ஏந்துஇள வனமுலை, 12
இறும்புஅமல் மலரிடை எழுந்த மாவின் 13
நறுந்தழை துயல்வரூஉம் செறிந்துஏந்து அல்குல், 14
அணிநடை அசைஇய வரிஅமை சிலம்பின், 15
மணிமருள் வணர்குழல், வளர்இளம் பிறைநுதல், 16
ஒளிநிலவு வயங்கிழை உருவுடை மகளிரொடு, 17
நளிமுழவு முழங்கிய அணிநிலவு மணிநகர், 18
இருந்தளவு மலரளவு சுரும்புலவு நறுந்தொடை 19
கலனளவு கலனளவு நலனளவு நலனளவு 20
பெருமணம் புணர்ந்தனை என்ப ; அஃது
ஒருநீ மறைப்பது ஒழிகுவது அன்றே' *– யா. கா. 45 மே.*

என இழைபும் வந்தவாறு காண்க. ஈண்டுக் காட்டாது ஒழிந்தனவும் (விருந்து, இயைபு) வந்துழிக் காண்க.

[ *சிந்தாமணியை விருந்திற்கும், மணிமேகலையை இயைபிற்கும் எடுத்துக்காட்டாகக் கூறுப.* ]

செய்யுளியல்உடையார் எழுத்து எண்ணி அடி வகுத்தவாறு என்னைஎனின், நாற்சீரடி தன்னையே நான்கு எழுத்து முதலாக ஆறு எழுத்தின்காறும் உயர்ந்த மூன்று அடியும் குறள்அடி என்றும், ஏழ் எழுத்து முதலாக ஒன்பது எழுத்தின் காறும் உயர்ந்த

மூன்று அடியும் சிந்துஅடி என்றும், பத்து எழுத்து முதலாகப் பதினான்கு எழுத்தின்காறும் உயர்ந்த ஐந்து அடியும் அளவடி என்றும், பதினைந்து எழுத்து முதலாகப் பதினேழ் எழுத்தின்காறும் உயர்ந்த மூன்று அடியும் நெடிலடி என்றும், பதினெட்டு எழுத்து முதலாக இருபது எழுத்தின்காறும் உயர்ந்த மூன்று அடியும் கழிநெடில் அடி என்றும், இருபது எழுத்தின் மிக்க நாற்சீரடிப்பா இல்லை என்றும் கூறியவாறும் என்க. எண்ணுமாறு :

'குற்றிகரக் குற்றுகரம் என்றிரண்டும், ஆய்தமும்,
ஒற்றும் எனஒரு நான்ககற்றிக், – கற்றோர்
உயிரும் உயிர்மெய்யும் ஓதினார் ; கொள்ளச்
செயிர்தீர்ந்த செய்யுள் அடிக்கு'

இதனான் அறிக. (45)

## ஒத்த நூற்பாக்கள்

'வனப்பியல் தானே வகுக்குங் காலை
சின்மென் மொழியால் தாய பனுவலோடு
அம்மை தானே அடிநிமிர் பின்றே.' – தொ. பொ. 547

'செய்யுள் மொழியால் சீர்புனைந்து யாப்பின்
அவ்வகை தானே அழகெனப் படுமே.' – 548

'தொன்மைதானே,
உரையொடு புணர்ந்த பழைமை மேற்றே.' – 549

'இழும்என் மொழியான் விழுமியது நுவலினும்
பரந்த மொழியான் அடிநிமிர்ந்து ஒழுகினும்
தோல்என மொழிப தொன்மொழிப் புலவர்.' – 550

'விருந்தே தானும்,
புதுவது கிளந்த யாப்பின் மேற்றே.' – 551

'ஞகாரை முதலா னகாரை ஈற்றுப்
புள்ளி இறுதி இயைபெனப் படுமே.' – 552

'சேரி மொழியான் செவ்விதின் கிளந்து
தேர்தல் வேண்டாது குறித்தது தோன்றின்
புலன்என மொழிப புலனுணர்ந் தோரே.' – தொ. பொ. 553

'ஒற்றொடு புணர்ந்த வல்லெழுத் தடக்காது
குறளடி முதலா ஐந்தடி ஒப்பித்து
ஓங்கிய மொழியான் ஆங்கனம் ஒழுகின்
இழைபின் இலக்கணம் இயைந்த தாகும்.' – 554

'நாலெழுத்து ஆதி ஆக ஆறுஎழுத்து
ஏறிய நிலத்தே குறள்அடி என்ப.' – 348

'ஏழ்எழுத்து என்ப சிந்தடிக்கு அளவே
ஈரெழுத்து ஏற்றம் அவ்வழி யான.' – 349

'பத்துஎழுத்து என்ப நேர்அடிக்கு அளவே
ஒத்த நால்எழுத்து ஏற்றலங் கடையே.' – 350

'மூவைந்து எழுத்தே நெடிலடிக்கு அளவே
ஈரெழுத்து மிகுதலும் இயல்பென மொழிப.' – 351

'மூவாறு எழுத்தே கழிநெடிற்கு அளவே
ஈரெழுத்து மிகுதலும் இவண்பெறும் என்ப.' – 352

45

## குறிப்பிசை ஆமாறு

755. எழுத்துஅல் இசைஎன, அசைசீர் ஆக,
நிறைக்கப் படுதல் குறிப்பிசை என்ப.

**இது குறிப்பிசை ஆமாறு கூறுகின்றது.**

**இ-ள் : எழுத்து ஓசை அல்லாத முற்கு வீளை இலதை அனுகரணம் முதலியன செய்யுள்அகத்து வந்தால், அவற்றையும் அசையும் சீருமாக அலகிட்டுத் தளையும் அடியும் தொடையும் பிழையாமல் கொண்டு நிரப்புதலைக் குறிப்பிசை என்று கூறுவர் ஆசிரியர் என்றவாறு.**

*(முற்கு – முக்குதல்; வீளை – சீழ்க்கையடித்தல்*

*அனுகரணம் – போலச் செய்தல்.)*

'மன்றலங் கொன்றை மலர்வேய்ந்து, மஃஃஃறற (உஃகுவஃகு)
என்று திரியும் இடைமகனே! – சென்று
மறிஆட்டை உண்ணுமல், வண்கையால் வல்லே,
அறியாயோ, அண்ணுக்கு மாறு' – *யா. கா.* 45 மே.

*(இஃது அவிநயனுர் காட்டிய பாட்டு)*

என வரும். ஒழிந்தனவும் இடைக்காடனுர் பாடிய ஆசிரிய முறியுள் கண்டு கொள்க. (46)

ஒத்த நூற்பா

*'எழுத்தல் இசையே அசையொடு சீர்க்கண்*
*நிறைக்கவும் படுமென நேர்ந்திசி னேரே.'*

*46*

## ஒப்பு ஆமாறு

756. ஒப்புஎனப் படுவது ஓதிய செய்யுளுள்
தப்பினும் ஒருபுடை சார்த்திமற்று அவற்றையும்
செப்பிய பாவொடு சேர்த்தனர் கொளலே.

இஃது ஒப்பு ஆமாறு கூறுகின்றது.

இ-ள்: ஒப்பு என்று சொல்லப்படுவது மேல் சீரும் தளையும் முதலியன வரையறுக்கப்பட்ட செய்யுளுள் சில சொன்ன பெற்றியில் திரிந்தும் மிக்கும் குறைந்தும் வந்தாலும், ஒருபுடை ஒற்றுமை நோக்கிச் சார்த்தி, அங்ஙனம் தவறிய செய்யுட்களையும் இலக்கண நெறியால் முன் ஓதிய செய்யுட்களின்பால் படுத்திக்கொள்க என்றவாறு.

எடுத்துக்காட்டு :

'கோழியும் கூவின, குக்கில் குரல்இயம்பும்,
தாழியுள் நீலத் தடங்கணீர் போதுமினோ,
ஆழிசூழ் வையத் தறிவன் அடிஏத்திக்
கூழை நனையக் குடைந்து, குளிர்புனல்
ஊழியும் மன்னுவாம் ; என்றேலோர் எம்பாவாய்.'
– யா. கா. 45 மே.

நாற்சீர் நாலடியான் வருவது கலி விருத்தம் என்று வரையறுத்துக் கூறினர். இஃது ஐந்து அடியான் வந்தது ஆயினும், ஒருபுடை ஒப்புமை நோக்கிக் கலி விருத்தத்தின்பால் படுத்துக. இதனைத் தரவு கொச்சகம் எனினும் இழுக்காது. பிறவும் புராண கவிஞரால் பாடப் பட்ட இலக்கியங்கள் மிக்கும் குறைந்தும் வரினும், இவ்விலக்கணத்தால் ஒன்றன்பாற்படுத்தி வழங்கப் படுதல் கொள்க. (47)

ஒத்த நூற்பாக்கள்

'மிக்கும் குறைந்தும் வரினும் ஒருபுடை
ஒப்புமை நோக்கி ஒழிந்தவும் கொளலே.' – யா. வி. 93

'உணர்த்திய பாவினுள் ஒத்த அடிகள்
வகுத்துரை பெற்றியும் அன்றிப் பிறவும்
நடக்குந ஆண்டை நடைவகை உள்ளே.' – காக்கை.

'ஒத்த அடியினும் ஒவ்வா விகற்பினும்
மிக்கடி வரினும் அப்பாற் படுமே.' – அவிநயம்

'பாவும் இனமும் மேவிய அன்றி
வேறுபட நடந்தும் கூறுபட வரினும்
ஆறறி புலவர் அறிந்தனர் கொளலே.' – மயேச்சுரம்

'உலகியல் செய்யுட்கு ஓதிய அளவையின்
குறையவும் விதப்பவும் குறையா ஆற்றல்
இருடிகள் மொழிதலின் ஆரிடம் என்ப.' – பாட்டியல்மரபு

'சந்த விருத்தம் தம்முள் ஒத்து எழுத்துஅசை
வந்துஒலி பற்றி வரும்உள பிறவே.' – தொ. வி. 249

## வண்ணங்கள் ஆமாறு

757. வண்ணம் தானே நாலைந்து; அவைதாம்
பாஅ வண்ணம்[1] தாஅ வண்ணம்[2]
வல்லிசை வண்ணம்[3] மெல்லிசை வண்ணம்[4]
இயைபு வண்ணம்[5] அளபெடை வண்ணம்[6]
நெடுஞ்சீர் வண்ணம்[7] குறுஞ்சீர் வண்ணம்[8]
சித்திர வண்ணம்[9] நலிபு வண்ணம்[10]
அகப்பாட்டு வண்ணம்[11] புறப்பாட்டு வண்ணம்[12]
ஒழுகு வண்ணம்[13] ஒரூஉ வண்ணம்[14]
எண்ணு வண்ணம்[15] அகைப்பு வண்ணம்[16]
தூங்கல் வண்ணம்[17] ஏந்தல் வண்ணம்[18]
உருட்டு வண்ணம்[19] முடுகு வண்ண[20]மென்று
ஆங்கென மொழிய அறிந்திசி னோரே.

இது வண்ணம் இத்துணைய என்பதும் அவற்றின் பெயரும் கூறுகின்றது.

இ-ள் : வண்ணம் இருபதாம்; அவைதாம் பாஅ வண்ணம் முதலாக முடுகுவண்ணம் ஈருகக் கிடந்தன என்று கூறுவர் புலவர் என்றவாறு.

அவற்றுள் பாஅவண்ணம் சொற்சீர் அடியாகி நூலின்கண் பயின்று வரும்;

'அவற்றுள்,
பாஅ வண்ணம் சொற்சீர்த்து ஆகி
நூற்பால் பயிலும்.' – தொ. பொ. 526

என்ப ஆகலின்.

வரலாறு :

'அஇ உஅம் மூன்றும் சுட்டு' – தொல். 31
'கொல்லே ஐயம்' – தொல். சொல். 268
'எல்லே இலக்கம்' – தொல், சொல், 269

என வரும்,

தாஅவண்ணம் இடையிட்டெதுகையான் வரும்;

'தாஅ வண்ணம்,
இடையிட்டு வந்த எதுகைத் தாகும்' – தொல். பொ. 527

என்ப ஆகலின்.

'தோடார் எல்வளை நெகிழ நாளும்
நெய்தல் உண்கண் பைதல் உழவா
வாடா அவ்வரி ததைஇப் பசலையும்
வைகல் தோறும் பைப்பையப் பெருக
நீடார் இவரென நீள்மணம் கொண்டோர்
கேளார் கொல்லோ காதலர் தோழி
வாடாப் பௌவம் அறமுகந்து எழிலி
பருவம் செய்யாது வலன்ஏர்பு வளைஇ
ஓடா மலையன் வேலின்
கடிது மின்னும்இக் கார்மழைக் குரலே' – குறுந். 216

என வரும்.

வல்லிசை வண்ணம் வல்லெழுத்துமிக்கு வருவது;

'வல்லிசை வண்ணம் வல்லெழுத்துப் பயிலும்'
– தொல். பொ. 528

என்ப ஆகலின்.

வரலாறு:

'வட்டொட்டி அன்ன வனமுடிப் புன்னைக்கீழ்க்
கட்டிட்டுக் கண்ணி தொடுப்பவர் தாழம்பூத்
தொட்டிட்டுக் கொள்ளும் துறைச்சேர்ப்ப! நின்னொடு
விட்டொட்டி உள்ளம் விடாஅது நினையுமேல்
ஒட்டொட்டி நீங்காதோ, ஒட்டு' – யா. வி. 95 மே.

என வரும்.

மெல்லிசைவண்ணம் மெல்லெழுத்து மிக்கு வருவது;

'மெல்லிசை வண்ணம் மெல்லெழுத்து மிகுமே'
– தொல். பொ. 529

என்ப ஆகலின்.

வரலாறு :

'பொன்னின் அன்ன புன்னை நுண்தாது
மணியின் அன்ன நெய்தலங் கானல்' – *யா. வி.* 95 மே.

என வரும்.

இயைபுவண்ணம் இடையெழுத்து மிக்கு வருவது ;

'இயைபு வண்ணம் இடையெழுத்து மிகுமே'
– *தொல். பொ.* 530

என்ப ஆகலின்.

வரலாறு :

'வால்வெள் அருவி வரைமிசை இழியக்
கோள்வல் உழுவை விடரிடை இயம்பவும்' – *யா. வி.* 95 மே.

என வரும்.

அளபெடைவண்ணம் அளபெடை பயின்று வருவது ;

'அளபெடை வண்ணம் அளபெடை பயிலும்'
– *தொல். பொ.* 531

என்ப ஆகலின்.

வரலாறு :

'தாஅட் டாஅ மரைமல ருழக்கி' – *யா. கா.* 20 மே.

என வரும்.

நெடுஞ்சீர்வண்ணம் நெட்டெழுத்துப் பயின்று வருவது ;

'நெடுஞ்சீர் வண்ணம் நெட்டெழுத்துப் பயிலும்'
– *தொல். பொ.* 532

என்ப ஆகலின்.

வரலாறு :

'நீரூர் பாண யாறே, காடே
நீலூர் காயாம் பூவீ யாவே' – *யா. வி.* 95 மே.

என வரும்.

குறுஞ்சீர்வண்ணம் குற்றெழுத்துப் பயின்று வருவது ;

'குறுஞ்சீர் வண்ணம் குற்றெழுத்துப் பயிலும்'

– தொ. பொ. 533

என்ப ஆகலின்.

வரலாறு :

'உறுபுயல் எழிலி தொகுபெயல் பொழியச்
சிறுகொடி அவரை பொதிதளை அவிழ' – யா. வி. 95 மே.

என வரும்.

சித்திரவண்ணம் நெட்டெழுத்தும் குற்றெழுத்துமாய் வரும் ;

'சித்திரவண்ணம்,
நெடியவும் குறியவும் ஒத்துடன் வருமே' – தொ. பொ. 534

என்ப ஆகலின்.

வரலாறு :

'ஓரூர் வாழினும் சேரி வாரார்
சேரி வரினும் ஆர முயங்கார்' – குறுந். 231

என வரும்.

நலிபுவண்ணம் ஆய்தம் பயின்று வரும் ;

'நலிபு வண்ணம் ஆய்தம் பயிலும்' – தொ. பொ. 535

என்ப ஆகலின்.

வரலாறு :

'அஃகாமை செல்வத்துக் கியாதெனின் வெஃகாமை
வேண்டும் பிறன்கைப் பொருள்' – குறள் 178

என வரும்.

அகப்பாட்டுவண்ணம் முடியாத் தன்மையான் முடித்தல் மேலதாம்;

(இறுதி அடி இடையடி போன்று நிற்பது.)

'அகப்பாட்டு வண்ணம்,
முடியாத் தன்மையின் முடித்தல் மேற்றே' – தொ. பொ. 536

என்ப ஆகலின்.

வரலாறு:

'பன்மீன் உணங்கல் படுபுள் ஓப்பியும்
புன்னைநுண் தாது நம்மொடு தொகுத்தும்
பன்னாள் வந்து பணிமொழி பயிற்றியும்
மணந்ததற் கொவ்வான் தணந்துபுற மாறி
இனைய னாகி ஈங்குனைத் துறந்தோன்,
பொய்தல் ஆயத்துப் பொலந்தொடி மகளிரொடு
கோடுயர் வெண்மணல் ஏறி,
ஓடுகலன் காணும் துறைவன்; தோழி!' – யா. வி. 95 மே.

என வரும்.

புறப்பாட்டுவண்ணம் முடிந்தது போன்று முடியாதாகி வரும்;

(இறுதியடிப் புறத்ததாகவும் தான் முடிந்தது போன்று நிற்பது.)

'புறப்பாட்டு வண்ணம்,
முடிந்தது போன்று முடியா தாகும்' – தொ. பொ. 537

என்ப ஆகலின்.

வரலாறு:

'நிலவுமணல் அகன்துறை வலவன் ஏவலின்
எரிமணிப் புள்ளினம் ஒலிப்ப நெருநலும்
வந்தன்று கொண்கன் தேரே; இன்றும்
வருகுவ தாயின் ஒன்றுபு துதைந்த
புன்னைத் தாதுகு தண்பொழில் அகத்து,

மெல்ல மேவர மென்முலை ஞெமுங்கப்
புல்லின் எவனோ? மெல்லியல்! நீயே,
நல்காது விடுகுவை ஆயின், வைகலும்
படர்மலி உள்ளமொடு மடல்மா ஏறி
உறுதுயர் உலகுடன் அறியச்
சிறுகுடிப் பாக்கத்துப் பெரும்பழி தருமே' – *யா. வி.* 65 மே.

என வரும்.

ஒழுகுவண்ணம் ஓசையான் ஒழுகி நடக்கும்;

'ஒழுகு வண்ணம் ஓசையின் ஒழுகும்' – *தொ. பொ.* 538

என்ப ஆகலின்.

வரலாறு :

'அம்ம, வாழி, தோழி! காதலர்க்கு
இன்னே பரிக்கும் இன்னா வாடையொடு
புன்கண் மாலை அன்பின்று நலிய,
உய்யலள் இவளென உணரச் சொல்லிச்
செல்லுநர்ப் பெறினே, சேய அல்ல;
இன்னளி இறந்த மன்னவர்
பொன்அணி நெடுந்தேர் பூண்ட மாவே' – *யா. வி.* 65 மே.

என வரும்.

ஒரூஉவண்ணம் நீங்கின தொடையாகிக் கிடக்கும்;

'ஒரூஉ வண்ணம் ஒரீஇத் தொடுக்கும்' – *தொ. பொ.* 539

என்ப ஆகலின். அது செந்தொடை.

வரலாறு :

'தொடிநெகிழ்ந் தனவே; கண்பசந் தனவே;
யான்சென் றுரைப்பின் மாண்பின்று; எவனோ
சொல்லாய் வாழி தோழி! வரைமிசை
முள்ளால் பொதுளிய அலங்குகுலை நெடுவெதிர்
பொங்கிவரல் இளமழை துவைப்ப,
மணிநிலா விரியும் குன்றுகிழ வோற்கே' – *யா. வி.* 95 மே.

என வரும்.

எண்ணுவண்ணம் எண்ணுப் பயின்று வரும்;

‘எண்ணு வண்ணம் எண்ணுப் பயிலும்’ – *தொ. பொ.* 540

என்ப ஆகலின்.

வரலாறு :

‘நிலம்நீர் வளிவிசும்பு என்ற நான்கின்
அளப்பரி யையே;
நாள்கோள் திங்கள் ஞாயிறு கனைஅழல்
ஐந்தொருங்கு புணர்ந்த விளக்கத் தனையை... ... ... ... ...
தவாலிய ரோஇவ் வுலகமொ டுடனே’ – *பதிற்.* 14

என வரும்.

அகைப்புவண்ணம் அறுத்து அறுத்துப் பயிலும்;

(*விட்டு விட்டு ஒலிப்பது.*)

‘அகைப்பு வண்ணம் அறுத்தறுத் தொழுகும்’ –*தொல்.பொ.*541

என்ப ஆகலின்.

வரலாறு :

‘தொடுத்த வேம்பின் மிசைத்து தைந்த
போந்தை அடைய அசைந்த ஆரம்’ – *யா. வி.* 95 *மே.*

என வரும்.

தூங்கல்வண்ணம் வஞ்சிஉரிச்சீர் பயின்றுவரும்;

‘தூங்கல் வண்ணம் வஞ்சி பயிலும்’ – *தொல். பொ.* 542

என்ப ஆகலின்.

வரலாறு :

‘வசையில்புகழ் வயங்குவெண்மீன்
திசைதிரிந்து தெற்கேகினும்’ – *பட்.* 1, 2

என வரும்.

ஏந்தல்வண்ணம் சொல்லிய சொல்லினுனே சொல்லப்பட்டது சிறக்க வரும்;

(ஒரு சொல்லே மிக்கு வருவது.)

'ஏந்தல் வண்ணம்,
சொல்லிய சொல்லின் சொல்லியது சிறக்கும்'
தொல். பொ. 543

என்ப ஆகலின்.

வரலாறு :

'கூடுவார் கூடல்கள் கூடல் எனப்படா
கூடலுள் கூடலே கூடலால் – கூடல்
அருவிய முல்லை அரும்பவிழ் மாலைப்
பிரியிற் பிரிவே பிரிவு' – யா. வி. 95 மே.

என வரும்.

உருட்டுவண்ணம் அராகம் தொடுக்கும்;

'உருட்டு வண்ணம் அராகம் தொடுக்கும்' – தொல். பொ. 544

என்ப ஆகலின்.

வரலாறு :

'தாதுறு முறிசெறி தடமல ரிடையிடை
தழலென விரிவன பொழில்' – யா. கா. 32 மே.

என வரும்.

முடுகுவண்ணம் நாற்சீர்அடியின் மிக்கு ஓர்அடி அராகத்தோடு ஒக்கும்;

'முடுகு வண்ணம்,
அடியிறந் தோடி அதனோ ரற்றே' – தொல். பொ. 545

என்ப ஆகலின்.

வரலாறு :

'நெறிஅறி செறிகுறி புரிதிரி பறியா அறிவனை முந்துறீஇ'

- கலி. 39

என வரும்.

இவ்வாறன்றி இன்னும் ஒருவாற்றான் குறில் நெடில் வல்லினம் மெல்லினம் இடையினம் என நிறுத்தி அகவல் ஒழுகிசை வல்லிசை மெல்லிசை என்பன வற்றோடு உறழ இருபதாம். அவற்றைத் தூங்கிசை ஏந்திசை அடுக்கிசை பிரிந்திசை மயங்கிசை என்பன வற்றோடு உறழ நூறாம். அவற்றைக் குறில்அகவல் தூங்கிசைவண்ணம், நெடில்அகவல் தூங்கிசை வண்ணம் என வண்ணம் நூறு என்பாரும் உளர். அவ்வேறுபாடும் உணர்க. 48

விளக்கம்

*தூங்கிசை வண்ணம் 20 – முதுபிடி, கோம்பி, நாரை – நடை.*

*ஏந்திசை வண்ணம் 20 – மதயானை, படமெடுக்கும் பாம்பு, ஓங்கிப்பறக்கும் பறவை – நடை.*

*அடுக்கிசை வண்ணம் 20 – கரட்டு நிலத்தில் வண்டி உருளும் ஓசை, நாரையோசை, தாரா வோசை, தார்மணி ஓசை – நடை.*

*பிரிந்திசை வண்ணம் 20 – பெருங்குதிரைப் பாய்ச்சல் – நடை.*

*மயங்கிசை வண்ணம் 20 – நகரத்து ஓசை, தாரை இயமரம் இசை, மான் இசை, தேரை இசை – நடை.*

*இவற்றை விரித்து உரைத்தார் அவிநயனார். அது பின்வருமாறு-*

தூங்கிசைவண்ணம் இருபது.

குறில் அகவல் தூங்கிசைவண்ணம்,
நெடில் அகவல் தூங்கிசைவண்ணம்,
வலி அகவல் தூங்கிசைவண்ணம்,
மெலி அகவல் தூங்கிசைவண்ணம்,
இடை அகவல் தூங்கிசைவண்ணம்

எனவும்,

குறில் ஒழுகல் தூங்கிசைவண்ணம்,
நெடில் ஒழுகல் தூங்கிசைவண்ணம்,
வலி ஒழுகல் தூங்கிசைவண்ணம்,
மெலி ஒழுகல் தூங்கிசைவண்ணம்,
இடை ஒழுகல் தூங்கிசை வண்ணம்

எனவும்,

குறில் வல்லிசைத் தூங்கிசைவண்ணம்,
நெடில் வல்லிசைத் தூங்கிசைவண்ணம்,
வலி வல்லிசைத் தூங்கிசைவண்ணம்,
மெலி வல்லிசைத் தூங்கிசைவண்ணம்,
இடை வல்லிசைத் தூங்கிசைவண்ணம்,

எனவும்,

குறில் மெல்லிசைத் தூங்கிசைவண்ணம்,
நெடில் மெல்லிசைத் தூங்கிசைவண்ணம்,
வலி மெல்லிசைத் தூங்கிசைவண்ணம்,
மெலி மெல்லிசைத் தூங்கிசைவண்ணம்,
இடை மெல்லிசைத் தூங்கிசைவண்ணம்

எனவும் வரும். இவை தூங்கிசைவண்ணம் இருபதாம்.

இவை முதுபிடி நடந்தாற் போலவும், கோம்பி நடந்தாற் போலவும், காரை நடந்தாற் போலவும் வரும் எனக் கொள்க.

ஏந்திசைவண்ணம் இருபது :

குறில் அகவல் ஏந்திசைவண்ணம்,
நெடில் அகவல் ஏந்திசைவண்ணம்,
வலி அகவல் ஏந்திசைவண்ணம்,
மெலி அகவல் ஏந்திசைவண்ணம்,
இடை அகவல் ஏந்திசைவண்ணம்

எனவும்,

குறில் ஒழுகல் ஏந்திசைவண்ணம்,
நெடில் ஒழுகல் ஏந்திசைவண்ணம்,
வலி ஒழுகல் ஏந்திசைவண்ணம்,
மெலி ஒழுகல் ஏந்திசைவண்ணம்,
இடை ஒழுகல் ஏந்திசைவண்ணம்

எனவும்,

குறில் வல்லிசை ஏந்திசைவண்ணம்,
நெடில் வல்லிசை ஏந்திசைவண்ணம்,
வலி வல்லிசை ஏந்திசைவண்ணம்,
மெலி வல்லிசை ஏந்திசைவண்ணம்,
இடை வல்லிசை ஏந்திசைவண்ணம்

எனவும்,

குறில் மெல்லிசை ஏந்திசைவண்ணம்,
நெடில் மெல்லிசை ஏந்திசைவண்ணம்,
வலி மெல்லிசை ஏந்திசைவண்ணம்,
மெலி மெல்லிசை ஏந்திசைவண்ணம்,
இடை மெல்லிசை ஏந்திசைவண்ணம்

எனவும் வரும். இவை ஏந்திசைவண்ணம் இருபதாம்.

இவை மதயானை நடந்தாற் போலவும், பாம்பு பணைத்தாற் போலவும் ஓங்கிப் பறக்கும் புட் போலவும் வரும் எனக் கொள்க

அடுக்கிசைவண்ணம் இருபது :

குறில் அகவல் அடுக்கிசைவண்ணம்,
நெடில் அகவல் அடுக்கிசைவண்ணம்,
வலி அகவல் அடுக்கிசைவண்ணம்,
மெலி அகவல் அடுக்கிசைவண்ணம்,
இடை அகவல் அடுக்கிசைவண்ணம்

எனவும்,

குறில் ஒழுகல் அடுக்கிசைவண்ணம்,
நெடில் ஒழுகல் அடுக்கிசைவண்ணம்,
வலி ஒழுகல் அடுக்கிசைவண்ணம்,
மெலி ஒழுகல் அடுக்கிசைவண்ணம்,
இடை ஒழுகல் அடுக்கிசைவண்ணம்,

எனவும்,

குறில் வல்லிசை அடுக்கிசை வண்ணம்,
நெடில் வல்லிசை அடுக்கிசை வண்ணம்,
வலி வல்லிசை அடுக்கிசை வண்ணம்,
மெலி வல்லிசை அடுக்கிசை வண்ணம்,
இடை வல்லிசை அடுக்கிசை வண்ணம்

எனவும்,

குறில் மெல்லிசை அடுக்கிசை வண்ணம்,
நெடில் மெல்லிசை அடுக்கிசை வண்ணம்,
வலி மெல்லிசை அடுக்கிசை வண்ணம்,
மெலி மெல்லிசை அடுக்கிசை வண்ணம்,
இடை மெல்லிசை அடுக்கிசை வண்ணம்

எனவும் அடுக்கிசை வண்ணம் இருபதாம்.

அவை ஒவ்வா நிலத்தில் பண்டி உருண்டாற்போலவும், நாரை இரைந்தாற்போலவும், தாராவும் தார்மணி ஓசையும் போலவும் வரும்.

பிரிந்திசை வண்ணம் இருபது:

குறில் அகவல் பிரிந்திசை வண்ணம்,
நெடில் அகவல் பிரிந்திசை வண்ணம்,
வலி அகவல் பிரிந்திசை வண்ணம்,
மெலி அகவல் பிரிந்திசை வண்ணம்,
இடை அகவல் பிரிந்திசை வண்ணம்

எனவும்,

குறில் ஒழுகல் பிரிந்திசை வண்ணம்,
நெடில் ஒழுகல் பிரிந்திசை வண்ணம்,
வலி ஒழுகல் பிரிந்திசை வண்ணம்,
மெலி ஒழுகல் பிரிந்திசை வண்ணம்,
இடை ஒழுகல் பிரிந்திசை வண்ணம்

எனவும்,

குறில் வல்லிசைப் பிரிந்திசை வண்ணம்,
நெடில் வல்லிசைப் பிரிந்திசை வண்ணம்,
வலி வல்லிசைப் பிரிந்திசை வண்ணம்,
மெலி வல்லிசைப் பிரிந்திசை வண்ணம்,
இடை வல்லிசைப் பிரிந்திசை வண்ணம்

எனவும்,

குறில் மெல்லிசைப் பிரிந்திசை வண்ணம்,
நெடில் மெல்லிசைப் பிரிந்திசை வண்ணம்,
வலி மெல்லிசைப் பிரிந்திசை வண்ணம்,
மெலி மெல்லிசைப் பிரிந்திசை வண்ணம்,
இடை மெல்லிசைப் பிரிந்திசை வண்ணம்

எனவும் பிரிந்திசை வண்ணம் இருபதாம்.

அவை பெருங்குதிரைப் பாய்ச்சலும், ஒன்று கொட்டியும் இரண்டு கொட்டியும் முதலாகவுடைய அறுத்துக்கொட்டும் போல வரும்.

மயங்கிசை வண்ணம் இருபது :

குறில் அகவல் மயங்கிசை வண்ணம்,
நெடில் அகவல் மயங்கிசை வண்ணம்,
வலி அகவல் மயங்கிசை வண்ணம்,
மெலி அகவல் மயங்கிசை வண்ணம்,
இடை அகவல் மயங்கிசை வண்ணம்

எனவும்,

குறில் ஒழுகல் மயங்கிசை வண்ணம்,
நெடில் ஒழுகல் மயங்கிசை வண்ணம்,
வலி ஒழுகல் மயங்கிசை வண்ணம்,
மெலி ஒழுகல் மயங்கிசை வண்ணம்,
இடை ஒழுகல் மயங்கிசை வண்ணம்

எனவும்,

குறில் வல்லிசை மயங்கிசை வண்ணம்,
நெடில் வல்லிசை மயங்கிசை வண்ணம்,
வலி வல்லிசை மயங்கிசை வண்ணம்,
மெலி வல்லிசை மயங்கிசை வண்ணம்,
இடை வல்லிசை மயங்கிசை வண்ணம்

எனவும்,

குறில் மெல்லிசை மயங்கிசை வண்ணம்,
நெடில் மெல்லிசை மயங்கிசை வண்ணம்,
வலி மெல்லிசை மயங்கிசை வண்ணம்,
மெலி மெல்லிசை மயங்கிசை வண்ணம்,
இடை மெல்லிசை மயங்கிசை வண்ணம்

எனவும் மயங்கிசை வண்ணம் இருபதாகும்.

அவை நகரம் இரைந்தாற்போலவும், தாரை இசையும், ஆர்ப்பிசையும், இயமர இசையும், தேரைக் குரலும் போலவும் வரும்.

சூறைக்காற்றும் நீர்ச்சுழியும் போல வருவது அகவல் வண்ணம்; நீரொழுக்கும் காற்றொழுக்கும் போல வருவது ஒழுகல் வண்ணம்; தோற்கயிறும் இரும்பும் திரித்தாற் போலவும், கல்மேல் கல்லுருட்டினாற் போலவும் வருவது வல்லிசை வண்ணம்; அன்ன நடையும் தண்ணம் பறையும் போலவும் மண்மேல் நடந்தாற் போலவும் வருவது மெல்லிசை வண்ணம்; இவை தொழில்வகையால் ஒருபுடை ஒப்புமை யுடையன.

இவை நூறு வண்ணமும் தம்முள் மயங்கி வரினும் மிக்கதனால் பெயர் கொடுத்து வழங்கப்படும். இவ்வண்ணங்களுள் பெரும்பாலானவற்றிற்கு யாப்பருங்கல விருத்தியில் 95-ஆம் நூற்பா உரையில் எடுத்துக்காட்டுக்கள் தரப்பெற்றுள்ளன.

## ஒத்த நூற்பாக்கள்

'மெல்லிசை ஏந்தல் ஒழுகுருட் டெண்ணொரு வேமுடுகு
வல்லியல் பாவகப் பாட்டு நலிவகைப் போடியைபு
சொல்லிய சித்திரம் தாவு புறப்பாட் டளபெடையும்
வல்லிசை தூங்கல் நெடுஞ்சீர் குறுஞ்சீர் எனஇவையே.'

– வீ. சோ. 142

'வண்ணம் என்ப வலிமெலி இடைஒழுகு
எண் உருட்டு எனமுடுகு ஏந்தல் தூங்கல்
அகைப்புப் புறப்பாட்டு அகப்பாட்டு அளபு
பாவு நலிவு தாவு ஒரூஉ
குறில்நெடில் சித்திரம் கூறுபாடு இருபதே.'

– தொ. வி. 250

'எதுகை முதலடி எல்லாம் வல்லினம்
மிகுவன வல்லிசை யாம்; விளம் பிடினே.'

– மு. வீ. யா. ஒ. 22

'மெல்லினம் மிகுவன மெல்லிசை ஆகும்.' – 23

'இடையினம் மிகுவன இடையிசை எனலே.' – 24

'விரவி மூவினமும் மிகுவன ஒழுகிசை.' – 25

'எண்ணி வருவன எண்எனப் படுமே.' – மு. வீ. யா. ஔ. 26

'உருட்டாம் அராகத் தொடுவரு வனவே.' – 27

'அராகமாய் வருவது அன்றியும் அடிமுதல்
ஈறுதோன் றுமல் தொடர்ந்தெ ழும்பிய
அடியான் வருவன முடுகா கும்மே.' – 28

'நேரிறு உரிச்சீர் மிகவந் தேந்திய
ஓசையின் வருவன ஏந்திசை ஆகும்.' – 29

'நிரையிறு உரிச்சீர் மிக்குத் தூங்கிய
ஓசையின் வருவன தூங்கிசை ஆகும்' – 30

'அறுத்தறுத் தியல்வன அகைப்பா கும்மே.' – 31

'முடிந்தது போல முடியாது வருவன
புறப்பாட் டென்மனர் புலமை யோரே.' – 32

'முடியா தது போல முடிந்து வருவன
அகப்பாட்டு என்மனர் அறிந்திசி னோரே.' – 33

'அடிதொ றும் அளபெடை எதுகை ஆக
வருவன அளபாம் வகுக்குங் காலே.' – 34

'நூற்பா உரைத்து வருவன பாவே.' – 35

'அடிதொறும் எதுகை ஆக ஆய்தம்
கொடுவரல் நலிபாம் குறிக்குங் காலே.' – 36

'ஓரடிக்கு ஓரடி மத்தியில் விட்டடி
எதுகை ஒன்றின் இயல்வன தாவே.' – 37

'அடிதொறும் ஒன்றுத் தொடையொடு வருவன
ஒரூஉ எனப்பெயர் உரைக்கப் படுமே.' – 38

'குற்றெழுத் தியைந்து வருவன குறுஞ்சீர்
ஆகும் என்மனர் அறிந்திசி னோரே.' – 39

'நெட்டெழுத் தியைந்து வருவன நெடுஞ்சீர்
ஆகும் என்மனர் அறிந்திசி னோரே.' – 40

'நெடிலும் குறிலும் நீங்காது வருவன
சித்திரம் என்மனர் தெளிந்திசி னோரே.' – 44

48

## புனைந்துரை ஆமாறு

758. உரைக்கப் படும்பொருட்கு ஒத்தவை எல்லாம் புகழ்ச்சியின் மிக்க புனைந்துரை; அவைதாம், பெரிதினைச் சுருக்கலும் சிறிதினைப் பெருக்கலும் எனஇரண்டு ஆகும் என்மனார் புலவர்.

இது புனைந்துரை ஆமாறு கூறுகின்றது.

இ–ள் : புலவனால் கூறப்படும் பொருட்குப் பொருந்திய புனைந்துரை எல்லாம் புகழ்ச்சியான் மிக்க புனைந்துரையாம். அப்புனைந்துரைதான், பெரிது ஒன்றனைச் சுருக்கிச் சொல்லுதலும், சிறிது ஒன்றனைப் பெருக்கிச் சொல்லுதலும் என இரண்டு வகைப்படும் என்று கூறுவர் அறிவுடையோர் என்றவாறு.

வரலாறு :

'அடையார்பூங் கோதையாட் கல்குலும் தோன்றும்;
புடையார் வனமுலையும் தோன்றும்; – இடையாதும்
கண்டுகொள்ளா தாயினுங் காரிகை நீர்மையாட்
குண்டாக வேண்டும், நுகப்பு' – *யா. கா. 45 மே.*

இது பெரியதனைச் சுருக்கிச் சொல்லியது.

[ *இடையின் நுண்மை கூறியவாறு.* ]

'அவாப்போல் அகன்றதன் அல்குல்மேல் சான்றோர்
உசாப்போல உண்டே மருங்குல்; — உசாவினைப்
'பேதைக் குரைப்பான் பிழைப்பின் பெருகினவே
கோதைக்கொம் பன்னாள் குயம்' – *யா. கா. 45 மே.*

[ *அல்குல், குயம் இவை பற்றிய வருணனை.* ]

இது சிறியதனைப் பெருக்கிச் சொல்லியது. பிறவும் அன்ன. (49)

ஒத்த நூற்பா

'உரைக்கப் படுபொருட்கு ஒத்தவை எல்லாம்
புகழ்ச்சியின் மிக்க புனைந்துரை ஆகும்.'

49

## ஆனந்தம் ஆமாறு

759. நிறுவிய பொருளுக்கு இறுதியைத் தருவது
அறிய வேண்டா ஆனந்தம்; அதுதான்,
இயற்பெயர் சார்த்தி எழுத்துஅளபு எழினே
இயற்பாடு இல்லா எழுத்துஆ னந்தமும்,
அப்பெயர் மருங்கின் மங்கலம் அல்லாத்
தொழிற்சொல் புணர்ப்பின் சொல்ஆ னந்தமும்
எனவிரண்டு ஆகும்; இவைபுண ராமல்
நினைவதை யாப்புஎன நிகழ்த்துவர் புலவர்.

இஃது ஆனந்தம் என்பதூஉம் அதன் பகுதியும் கூறுகின்றது.

இ-ள்: நிலைபெற்ற பொருளுக்கு அழிவினைப் பயப்பது ஆராயத்தகாத ஆனந்தமாம். அவ்வானந்தந்தான் இயற்பெயர்ப்பால் அளபெடை கூறின் பொருத்தம் இல்லாத எழுத்தானந்தமும், அவ்வியற் பெயர்ப்பால் மங்கலம் ஒழிந்த தொழிற்சொல்லைச் செப்பின் சொல்லானந்தமும் என இரண்டு வகைப்படும்; இவ்விருவகை ஆனந்தமும் படாமல் நினைந்து சொல்லும் செய்யுளைச் செய்யுள் என்று சொல்லுவர் அறிவுடையோர் என்றவாறு.

வரலாறு:

'ஆழி இழைப்பப் பகல்போம்; இரவெல்லாம்
தோழி துணையாத் துயர்தீரும்; — வாழி
நறுமாலை தாராய், திரையவோஓ!' என்னும்;
செறுமாலை சென்றடையும் போழ்து.' — யா. கா. 46 மே.

இதனுள் திரையவோஒ என்புழி, இயற்பெயர் சார்த்தி அளபு எடுத்தமையால் அஃது எழுத்தானந்த மாம். (இது பொய்கையார் வாக்கு)

'என்னின் பொலிந்தது இவள்முகம் என்றெண்ணித்
தன்னின் குறைபடுப்பான், தண்மதியம் — முன்னி,
விரிந்திலங்கும் வெண்குடைக்கீழ்ச் செங்கோல் விசயன்
எரிந்திலங்கு வேலின் எழும்.' – யா. கா. 46 மே.

இதனுள் விசையன் என்னும் பாட்டுடைத்தலைவன் பெயரின்பால் எரிந்து என்னும் சொல் புணர்ந்தமையால், இது சொல்லானந்தமாம். இவ்விருவகை ஆனந்தமு மன்றிப் பிறவாறு உளவேனும் காண்க. (50)

விளக்கம்

இவ்வானந்தக் குற்றங்கள் சங்கச் சான்றோர்களுக்கும் தொல்காப்பியனுர் முதலாயினுருக்கும் உடன்பாடல்ல என்பதை மலைபடுகடாத்தில் நச்சினுர்க்கினியர் தம் உரையில் குறிப்பிட்டுள்ளார். பேராசிரியரும் உவமவியலுரையுள் சுட்டியுள்ளார். எழுத்து, சொல், பொருள், யாப்பு, தூக்கு, தொடை என்ற அறுவகைப்பட்ட ஆனந்தங்களுள் இவ்வாசிரியர் முதல் இரண்டு ஆனந்தங்களே சுட்டி, புகழ்ச்சிநிலை திரிந்த பொருளானந்தம், யாப்பு, தூக்கு, தொடை இவை திரிந்த ஆனந்தம் ஆகியவற்றை யாப்பருங்கல விருத்தியில் காண்க என விடுத்தார்.

பொருளானந்தமாவது – பாட்டுடைத் தலைவன் நாட்டில் யாதானும் ஒன்றனைச் சிறப்பித்துச் சொல்லலுற்ற இடத்து அத்திணைக்கு உரிய இறைச்சிப் பொருளை ஊறுபடச் சாவக் கெடவும் சொல்வதூஉம், புகழ்தலுற்ற இடத்து ஆகாதபெற்றிய மங்கலம் அழியச் சொல்வதூஉம், மங்கலமாகிய உவமையின் மங்கலமில்லாத உபமேயத்தை உவமிப்பதூஉம், தலைமகனொடு உவமிக்கப்பட்டதற்கு இடையூறுபடச் சொல்வதூஉம் மூலாக உடையன.

*வரலாறு :*

*'முறிமே யாக்கைதன் கிளையொடு துவன்றிச்*
*சிறுமை யுற்ற களையாப் பூசல்'* – *மலைபடு. 313–14*

என மலைபடுகடாத்துக் கூத்தரை ஆற்றுப்படுப்பான் நீர் போம் வழியில் இன்னவும் இன்னவும் ஏதங்களாவன, அவற்றைச் சாராதே போமின் என்பான், குரங்கு ஒரு வரைமேலிருந்து வழுவி ஒரு விடரகம்புக்கு விழுந்ததுகண்டு மற்றைக் குட்டியும் தாயும் விடரகம்புக்கு வீழ்ந்தன ; வீழக் குரங்குகள் எல்லாம் அவற்றுக்கு இரங்கி அழுது பெரியதோர் ஆரவாரம் எழுந்தது. அவ்வரையை ஒருவிப்போமின் என்றான். அவன் மலைக்குரிய இறைச்சிப் பொருளாகிய குரங்கிற்கு இடையூறு சொன்னமையால் இது பொருளானந்தம்.

*'கணங்கொள் தோகையின் கதுப்புஇகுத்து அசைஇ*
*விலங்குமலைத்து அமர்ந்த சேயரி நாட்டத்து*
*இலங்குவளை விறலியர், நிற்புறஞ் சுற்ற'*
– *மலைபடு. 44–46*

என்பது, பீலி விரித்துப் பல மயிலிருந்தாற்போல வழிவந்து அசைந்த வருத்தத்தால் தத்தங் கேசங்களை எடுத்து முடிக்க கில்லாது விரித்திருப்பர் அவன் மலைமேல் வழிபோம் கூத்தப் பெண்டிர் என்று புகழ்தலுற்றான். பெண்சாதிகள் ஊறுபட்டு அழுகை நிகழ்ந்தவிடத்து மயிர் விரித்திருப்பார் ; அவ்வகை மங்கலம் அல்லாத மயிர்விரியை அவன் நாட்டோடும் புகழ்ந்தமையால் இதுவும் பொருளானந்தம்.

*'பெயலொடு வைகிய வியன்கண் இரும்புனத்து*
*அகலிரு விசும்பின் ஆஅல் போல*
*வாலிதின் விரிந்த புன்கொடி முசுண்டை'*
– *மலைபடு. 99–101*

என்பது நாடு புகழ்தலுற்றான் மற்று மங்கலம் உளவாக வைத்து வானத்துள் துறுமித் தோன்றும் கார்த்திகை மீனொடு கடைப் பட்டார் தின்னும் அடகாகிய முசுண்டையின் பூவை ஒப்பித்தமை யான் இஃது உவமக்காட்சியுள் ஊனம் தோன்றிய ஆனந்த உவமை.

'திண்டேர் வயவரைச் சேவைவென் ருனன்ன தேங்கவுண்மா
வண்போ தமன்ற வழைநிழல் நீக்கிய வார்சிலம்ப !
நண்போ நினையின்பொல் லாதது ; நிற்க,என் நன்னுதலாள்
கண்போல் குவளை கொணர்ந்ததற் கியாதுங்கைம் மாறிலமே.'

இதனுள் தலைமகனோடு உவமிக்கப்பட்ட யானையைத் துரந்தான் என ஊறுபடச் சொன்னமையான் இதுவும் உவமக்காட்சியின் ஊனம் தோன்றிய ஆனந்த உவமம்.

'வள்ளெயிற்றுப் பேழ்வாய் ஞமலிக்கு மான்குழாம்
எள்ளி இரிந்தாற்போல் எவ்வழியும் — வள்ளற்கு
மாலார் கடலன்ன மண்பரந்த வாட்டானை
மேலாரும் மேலார் விரைந்து'

இதனுள் புலியினோடு உவமிக்கப்படுகின்ற தலைமகனாகிய வீரனோடு நாயை உவமித்தமையால் இறப்ப இழிந்த ஆனந்த உவமை.

'இந்திரனே போலும் இளஞ்சாத்தன், சாத்தற்கு
மந்தரமே போன்றிலங்கும் மல்லாகம் — மந்தரத்துத்
தாழருவி போன்றுளது தார்மாலை அம்மாலை
ஏழுலகும் நாறும் இணர்'

இதனுள் கீழ்மகனாகிய சாத்தனைக் குலமன்னரை உவமிக்கற் பாலனவற்றை அவனுக்குப் பரிக்கலாகாமை உவமித்தமையின் இறப்ப உயர்ந்த ஆனந்த உவமை.

'சென்றுபடு பருதியில் சிவந்த தோற்றத்தை'

இதனுள் படுஞாயிற்றுக்கு உவமையாகக் காட்டலின் இறந்துபாட்டுவமையானந்தம்.

'தீயி னன்ன ஒண்செங் காந்தள்
தூவல் கலித்த புதுமுகை ஊன்செத்து
அறியாது எடுத்த புன்புறச் சேவல்

ஊஉன் அன்மையின் உண்ணாது உகுத்தென
நெருப்பி னன்ன பல்லிதழ் தாஅய்
வெறிக்களம் கடுக்கும் வியலறை தோறும்'

– மலைபடு. 149–50

இதனுள் தீப்போலாம் உருவம் தோன்றும் செங்காந்தட் பூவினை ஊன் என்று கருதி அறியாது எடுத்த பருந்து காலின் இடுக்கி வாயில் குத்தி ஊன் அன்மையின் கைவிட்டது என்று காந்தட்பூவினது சிவப்பினைக் குணனேறச் சொல்லுவான், அவாவிச்சென்றது கொண்டு அவாவியதன்மையான் விட்டது என்று பரிசிற் கவி, அவாவிய கவியை அவாக் கெடக் கூறியமையின் இது பரிசிற் பொருளானந்தம்.

யாப்பானந்தமாவது – முன்தொடுக்கப்பட்ட சிறப்புடை மொழியின் பின்னர்ப் பாட்டுடைத் தலைவன் பெயர் நிறீஇ, அதன் பின்னே சிறப்புடை மொழி நிறீஇச் சிறப்பிக்கப்படுவதனை இவ்வாறு இடர்ப்படப் பாடுவது.

'ஊகத்தி னன்மல்கு சோலை உளியன் உயர்வரைவாய்
மேகத்தி னுலுமின் னுலு மிகவு மெலிந்துரைத்த
ஆகத்தி னேற்கரு ளாயென் பணியு மைவாயெயிற்றின்
நாகத்தி னன்மால் கடைந்திடப் பட்ட நளிகடலே'

என்பது எடுத்துக்காட்டு.

தூக்கானந்தமாவது – கஞ்சத்தாளம் முதலிய கருவிகளோடும் இசைந்த இசைக்கீழ்ப் பாடுதற்கண், அவன் பெயரைச் சார்த்தி உயரவும் இறுகவும் பெயர் பிளந்து பண்ணியும், ஒருவர்க்கும் பெயர் புலனாகாமையும் சொல்லுதல்.

இலக்கியம் வந்தவழிக் காண்க.

தொடையானந்தமாவது – அளபெடைத் தொடைப் பாட்டினுள் பாட்டுடைத் தலைவன் பெயர் சார்த்தி அளபெடுப்பத் தொடுப்பது.

வரலாறு :

'வாஅம் புரவி வழுதியோடு எம்மிடைத்
தோஒம் நுவலும்இவ் வூர்'

இதனுள் புரவி வழுதி என்று அடைப்பெயர் சார்த்தி அளபெடுப்பத் தொடுத்தலின் தொடையானந்தம்.

'வாஅ வழுதி மதுரை மறுகினில்
போஒ பகைமுனைப் போர்'

இஃது அடையடாமையின் மிக்க வழு.

இனி, ஆனந்தப்பையுள் என்பதும் ஒன்று உண்டு. அஃதாவது களவினுளாயினும் கற்பினுளாயினும் தலைவனும் தலைவியும் தம்மில் பிரிந்துழிப் பிரிவாற்றாது கையறு துயரமொடு காட்சிக்கு அவாவி, மெய் மெலிவுற்று அழிவுழி இரங்கிப் பாட்டுடைத்தலைவனது நாடானும் ஊரானும் குறித்து அவன் ஊர்மேல் அன்றில் ஏங்கினும், குயில் கூவினும், ஆயர் குழலிசை கேட்பினும், ஏற்றின் மணிக்குரல் கேட்பினும், அவனுடு சூழ்ந்து கிடந்து அவள் ஏங்கினும் என் உயிர்கழியும் என்று இவ்வாறு கூறினும், அவன்ஊர் அனையாள் நாடனையாள் உயிர்கழிகின்றது எனினும் பிறவாற்றானும் குணம் மேம்பட்டன ஊரும் நாடும் பார்த்துச் சார்த்திக் கூறினும், உவப்பினும் அவை ஆனந்தப் பையுள். என்னை ?

'களவினும் கற்பினும் கலக்க மில்லாத்
தலைவனும் தலைவியும் பிரிந்த காலைக்
கையறு துயரமொடு காட்சிக்கு அவாவி
எவ்வமொடு புணர்ந்து நனிமிகப் புலம்பப்
பாடப் படுவோன் பதியொடும் நாட்டொடும்
உள்ளுறுத் திறினே உயர்கழி ஆனந்தப்
பையுள் என்று பழித்தனர் புலவர்'

என்று எடுத்தோதினர் அகத்தியனர். அவற்றுக்கு இலக்கியம் வந்துழிக் கண்டுகொள்க.

மாபுராணமுடையார் விகாரமாத்திரையாகிய உயிரளபெடையும், கால்மாத்திரையாகிய ஒற்றும் (மகரக்குறுக்கம்) பாட்டுடைத் தலைமகன் பெயருக்கும் அவன் பெயர்க்கு அடையாகிய சொற்கண்ணும் புணர்ப்பின் குற்றம் என்றார்.

இசையானந்தமாவது அவலமுற்றிருந்தோருக்கு இசையாகிய பஞ்சமமும், குறிஞ்சியும், பியந்தையும், பாலையாழும், காந்தார பஞ்சமமும் இவற்றோடு பியந்தையாழும், தலைவனைப் புகழ்ந்த பாடாண்பாட்டிற்கும் இசையாகி வரப் புணர்ப்பது என்பதாம்.

பாட்டுடைத்தலைவனையே கிளவிப்படக் கிளவித்தலைவனாகக் கூறுவதூஉம் ஆனந்தம் எனக் கொள்க. என்னை

'உருவி யாகிய ஒருபெருங் கிழவனை
அருவிக் கூறுதல் ஆனந் தம்மே'

என்றாராகலின். பாட்டுடைத்தலைவனுக்கு இயற்பெயர் உண்டு. அவனை இயற்பெயரில்லாத கிளவித்தலைவனாகக் கூறுவதும் ஓர் ஆனந்தம் என்ப.

இவையாவும் யாப்பருங்கல விருத்தியின் 95-ஆம் நூற்பா உரையுள் கூறப்பட்டுள்ளன.

## ஒத்த நூற்பாக்கள்

'உறுபுகழ் மரபின் உயர்ந்தோர் கூறிய
அறுவகை மரபின ஆனந் தம்மே.'

'அவைதாம்,
இயனெறி திரிந்த எழுத்தா னந்தமும்
சொன்னெறி வழீஇய சொல்லா னந்தமும்
புகழ்ச்சிநிலை திரிந்த பொருளா னந்தமும்
யாப்புநிலை திரிந்த யாப்பா னந்தமும்
தூக்குநெறி திரிந்த தூக்கா னந்தமும்
நடைஅறி புலவர் நாடினர் இவையே.'

'இயற்பெயர் சார்த்தி எழுத்தளபு எழினே
இயற்பாடு இல்லா எழுத்தா னந்தம்.'

'இயற்பெயர் மருங்கின் மங்கலம் அழியத்
தொழிற்சொல் புணர்ப்பினது சொல்லா னந்தம்.'

'இறைச்சிப் பொருளை ஊறுபடக் கூறினும்
புகழ்ச்சிக் கிளவியின் பொருந்தா ஆயினும்
உவமைக் காட்சியின் ஊனம் தோன்றினும்
இவைஅல பிறவும் இன்னன வரினே
அவைஎன மொழிப பொருளா னந்தம்.'

'முதல்தொடை மருங்கின் மொழிசிறுத் தொருபெயர்
இடைப்படுத் தவ்வழி இடுஞ்சீர்ப் படினே
வாய்ப்ப நோக்கி வல்லோர் கூறிய
யாப்பா னந்தமென் றறிதல் வேண்டும்.'

'தாழா மரபினர் யாழொடு புணர்ந்த
பாவகை ஒருவனைப் பாடுங் காலைத்
தொல்வகை மரபின் அவன்பெயர் தோற்றி
ஏங்கினும் இடுங்கினும் எழுந்துபிரிந் திசைப்பினும்
தூங்கினும் குழறினும் தூக்கா னந்தம்'

'அளபெடை மருங்கின் பாடப் படுவோன்
பெயரொடு தொடுப்பின் பெற்றியின் வழுவாத்
தொடையா னந்தம் எனவே துணிக.'

'உருவி ஆகிய ஒருபெருங் கிழவனை
அருவி கூறுதல் ஆனந் தம்மே.'

'யாப்பினுள் எழுத்துச் சொற்பொருள் யாப்பணிக்
குற்றமும் உவமைவகை குறிக்குமா னந்தமும்
வாரா துரைப்பது வழுவில ஆகும்.' – மு. வீ. யா. ஒ. 42

'எழுத்துக் குற்றம் எழுத்திலக் கணத்தில்
வழுத்திய முறையின் மாறு பட்டு
வருவ தாமென வழுத்தப் படுமே.' – 43

'ஏனைய குற்றமும் இவற்றோ ரற்றே.' – 44

'ஆனந்தம் ஐவகை அறையுங் காலை
எழுத்தினிலை பிறழ்ந்தன எழுத்தா னந்தம்.' – 45

'சொல்லா னந்தம் சொல்நிலை பிறழ்ந்தன.' – 46

'பொருள்நிலை பிறழ்வன பொருளா னந்தம்.' – 47

'யாப்பின்நிலை பிறழ்வன யாப்பா னந்தம்.' – 48

'அணிநிலை பிறழ்ந்து வருவன அணியா
னந்த மாமென நவிலப் படுமே.' – 49

50

## அடிவரையறை இல்லாச் செய்யுள்வகை

**760.** ஓரடி யானும் பலஅடி யானும்
ஒரோவழி இயலும் உரைத்தஅச் செய்யுள் ;
அவைதாம்,
பாட்டுரை நூலே மந்திரம் பிசியே
முதுசொல் அங்கதம் வாழ்த்தொடு பிறவும்
ஆகும் என்ப அறிந்திசி னோரே.

இஃது அடி இன்றியும், ஓரடியானும் நடைபெறும் செய்யுட்களும் உள என்பதூஉம் அவை இவை என்பதூஉம் கூறுகின்றது.

இதற்குப் பொருள் உரைத்திலம், சூத்திரத்தானே பொருள் விளங்கலின்.

பிசி – பொய் ; அங்கதம் - வசை ; இவற்றிற்கு உதாரணம் வந்துழிக் காண்க. (51)

நான்காவது செய்யுளியல் முற்றும்.

### விளக்கம்

உரை நூல் முதலியவற்றின் விளக்கத்தைப் பாட்டியலில் காண்க. (நூற்பா எண் 143-147) இவை வெண்பா முதலியன போல அடிவரையறை இல்லாத அறுவகைச் செய்யுட்கள் என்பது உணர்க.

### ஒத்த நூற்பாக்கள்

'எழுநிலத் தெழுந்த செய்யுள் தெரியின்
அடிவரை இல்லன ஆறென மொழிப.' – தொ. பொ. 476

'அவைதாம்,
நூலி னான, உரையி னான,
நொடியொடு புணர்ந்த பிசியி னான,
ஏது நுதலிய முதுமொழி யான,
மறைமொழி கிளந்த மந்திரத் தான,
கூற்றிடை வைத்த குறிப்பி னான.' – தொ. பொ. 477

'உரையொடு நூலிவை அடியில நடப்பினும்
வரைவில என்ப வாய்மொழிப் புலவர்.' – பல்காயம்

'மொழிபிசி முதுசொல் மூன்று மன்ன.' ,,

'உரையும் நூலும் அடியின்றி நடப்பினும்
வரைவில என்ப வயங்கி யோரே.' – நத்தத்தம்

'வாய்மொழி பிசியே முதுசொல் என்றாங்கு
ஆமுறை மூன்றும் அன்ன என்ப.' ,,

'செயிர்தீர் செய்யுள் தெரியுங் காலை
அடியின் நீட்டத் தழகுபட் டியலும்.' – பல்காயம்

'ஓரடி யானும் ஒரோவிடத் தியலும்.' ,,

'அவைதாம்,
பாட்டுரை நூலே மந்திரம் பிசியே
முதுசொல் அங்கதம் வாழ்த்தொடு பிறவும்
ஆக்கின என்ப அறிந்திசி னோரே.' ,,

'பத்தியம் என்ப பாவொடு பாவினம்;
கத்தியம் அவைபோல் கலையல் லனவே.' – தொ. வி. 250

## யாப்புப்பற்றிய சில செய்திகள்

தொல்காப்பியத்தின் பின்னர்த் தமிழகத்தில் தோன்றிய பல யாப்பு நூல்களும் பாக்கள் நான்கனையும் தாழிசை, துறை, விருத்தம் என்ற மூன்று இனங்களாகப் பிரித்து விரித்தன என்பதும், அவற்றை அடியொற்றி வரையப்பட்ட யாப்பருங்கலம், பாப்பருங்கலக் காரிகை இவற்றை அடியொற்றியே இலக்கண விளக்கச் செய்யுளியல் முதலியன தோன்றின என்பதும் முன்னுரையில் கூறப்பட்டுள்ளன. இவற்றில் காணப்பெறாத சில செய்திகள் வீரசோழியத்துள்ளும் அதன் உரையுள்ளும் காணப் படுகின்றன. அவற்றையும் அறிதல் இன்றியமையாததாகும்.

வீரசோழியம் ஆசிரியச் சீராகிய இயற்சீரை முதற்சீர் என்றும், வெண்சீரை இடைச்சீர் என்றும், வஞ்சிச்சீரைக் கடைச்சீர் என்றும் குறிப்பிடுகிறது. குறளடியை ஆகாயஅடி எனவும், சிந்தடியைக் காற்றடி எனவும், அளவடியை நெருப்படி எனவும், நெடிலடியை நீரடி எனவும், கழிநெடிலடியை மண்ணடி எனவும் பூதங்களின் பெயர்களை அடியொற்றிப் பெயரிட்டுள்ளது. செய்யுள் எல்லாம் பத்தியம் கத்தியம் என்று இருவகைப்படும் எனவும் பத்தியமாவது பாதங்களால் நடைபெறுவது எனவும், கத்தியமாவது கட்டுரைப் போலியும் செய்யுட் போலியும் என இருவகைப்படும்; அவையாவன – யானைத் தொழில் முதலாயின கட்டுரைப் போலியும் ஒருபோகு முதலாயின செய்யுட் போலியும் ஆம் எனவும் குறிப்பிடுகிறது.

மிக்க சொல்லும் மிக்க புகழும் மிக்க ஓசையும் உடைத்தாகலின் நேரிசை ஆசிரியப்பா எனவும், அனைத்தடியும் ஒத்துநின்று இவ்வாறே பொருள்படுதலான் நிலைமண்டில ஆசிரியப்பா எனவும் பெயரிடுவது காரணக்குறி என்பது விளக்கப்பட்டுள்ளது. அம்போதரங்கத்தின் பரியாயப் பெயராவதோடு தாழிசைக்கும் எண் என்பது பெயராகக் குறிப்பிடப்பட்டுள்ளது. தரவு-கொச்சகக்கலிப்பாவில் அருகி ஒன்றிரண்டு விளச்சீர் வரின்

அத் தரவுகொச்சகத்தைக் கலி விருத்தம் என்றும் பெயரிடலாம் என்று குறிப்பிடுகிறது. சிந்தியல் வெண்பா ஓசை கெடின் வெண்டாழிசையாம் எனவும், நேரிசை வெண்பா ஓசை கெடின் வெண்டுறையாம் எனவும் குறிப்பிடுகிறது.

ஆசிரிய விருத்தத்தில் ஆசிரிய நிலைவிருத்தம், ஆசிரிய மண்டில விருத்தம் என்ற இரு பகுப்பினைச் சுட்டுகிறது. அடிதோறும் பொருள் முற்றிக் கடையிருசீர் ஓரே சொற்றொடராக ஈரடிகளிலோ நான்கடிகளிலோ வருவது மண்டில விருத்தம். ஏனையது நிலை விருத்தம். நாற்சீருக்குமேல் கடைஒருசீர் அடிதோறும் ஒன்றாக வருவது வெளி விருத்தம், இரண்டாக வருவது ஆசிரிய விருத்தம் என்ற வேறுபாடும் குறிப்பிடப்பட்டுள்ளது. ஆசிரிய விருத்தத்தில் ஓரடி குறைந்து வருவது நேரிசைஆசிரியப்பாவின் இனமாகிய நேரிசைத்துறை, இரண்டடி குறைந்து வருவது இணைக்குறள் ஆசிரியப்பாவின் இனமாகிய இணைக்குறள்துறை, அடிதோறும் பொருள் முற்றி வருவது அடிமறிமண்டில ஆசிரியப்பாவின் இனம், நிலைவிருத்தம் நிலைமண்டில ஆசிரியப்பாவின் இனம், ஆசிரியத் தாழிசையும் நிலைமண்டில ஆசிரியப்பாவின் இனம் என்ற செய்திகளும் காணப்படுகின்றன.

அடிதோறும் பொருள் முற்றிவரும் கலிவிருத்தம் மண்டில விருத்தம் எனவும் ஏனைய நிலை விருத்தம் எனவும் கூறப்படும். அளவடியின் மிக்குவரும் கலிப்பா இனங்கள் வெண்கலிப்பாவின் இனம் எனவும், ஒரு பொருள்மேல் மூன்றடுக்கிவரும் கலித்தாழிசை ஒத்தாழிசைக்கலிப்பாவின் இனம் எனவும், கலித்துறையும் தனித்துவரும் கலித்தாழிசையும், தம்முள் ஒத்தும் ஒவ்வாதும் வரும் கலிவிருத்தமும் மயங்கிசைக் கொச்சகக்கலிப்பாவின் இனம் எனவும் கூறப்படும். கலித்துறை – கட்டளைக்கலித்துறை எனவும், காப்பியக்கலித்துறை எனவும் இரண்டாகப் பகுக்கப் படுவதும் உண்டு. காப்பியக்கலித்துறையாவது கலிநிலைத் துறையாம். கட்டளைக்கலித்துறை – கோவைக் கலித்துறை எனவும் திலதக்கலித்துறை எனவும் இருவகைப்படும். கோவைக்கலித்துறை

யாவது ஈற்றடி மூன்றாஞ்சீர்ச்சொல் பக்குவிட்டு முற்சீரோடு ஒன்றி ஒழுகிய ஓசைத்தாய் வரும். இரண்டாம்சீர் நான்காம்சீர்களும் அவ்வாறு ஓசை பிரிந்தொழுகின் மிக்க சிறப்புடைத்தாம். இந்த வரையறை திலதக் கலித்துறைக்கு இல்லை. வஞ்சித்துறையும் வஞ்சி விருத்தமும் வஞ்சி மண்டிலத்துறை, வஞ்சி மண்டில விருத்தம் எனவும் பெயர் பெறும். வஞ்சித் தாழிசையும் வஞ்சித் துறையும் குறளடி வஞ்சிப்பாவின் இனம்; சிந்தடியான் வரும் வஞ்சி விருத்தம் சிந்தடி வஞ்சிப்பாவின் இனம்.

மூன்றடியாய்த் தம்மின் அளவு ஒக்கின் திரிபாதி எனப்படும்; எழுசீரின் மிக்கும் குறைந்தும் இரண்டடியாய் அவ்வடியும் தம்முள் அளவு ஒவ்வாது வருவதும், ஓரடியானே ஒரு செய்யுளாய் வருவதும் குறட் போலியாம். இரண்டடியாய்த் தம்முள் அளவு ஒத்து வருவன சிந்து எனவும், ஈரடியாய்த் தம்முள் அளவு ஒவ்வாது வருவன சிந்துப்போலி எனவும் கூறப்படும். கட்டளைக் கலித்துறைக்கும் விருத்தம் என்று பெயரிட்டதுபோலக் குறள் வெண்பாவிற்கும் சிந்துப் போலி என்று பெயரிடல் பொருந்தும். வெண்பா இலக்கணங்களில் மிக்கும் குறைந்தும் வருவன வெண்பாப் போலியாம். பொதுவாகத் தம்மில் ஒத்த அடி நான்கு ஓரெதுகையாய் வருவன விருத்தம் எனப்படும். முதலிடை கடையடிகள் குறைந்தும் மிக்கும் வரின் சவலையாம். முதலடி குறைந்துவரின் முதற் சவலையாம். கடையடி குறைந்துவரின் கடைச் சவலையாம். இடையடி குறைந்துவரின் இடைச் சவலையாம். நான்கடியின் மிக்க அடிகளால் நடைபெற்று அவ்வடிகள் ஒத்தும் ஒவ்வாதும் வரின் சவலைப் போலியாம். நான்கடியான் வந்த சவலை எதுகையின்றி வரினும் சவலைப் போலியாம். முதலிரண்டும் மிக்கும் முதலிரண்டும் நைந்தும் முடிவிரண்டு குன்றி முதலிரண்டு மிக்கும், இடையிடை அஃகியும் மிக்கும் வரினும் கடைச்சவலைப் பாதர்சமவிருத்தம் என்பாரும் உளர். விருத்த அடிக்குப் பெருமை 26 எழுத்து; 26 எழுத்தின் ஏறின எல்லாம் விருத்தப் போலியாம். தண்டகம் நான்கு கட்டளை முதலாக வரும்.

இவ்வாறு குறிப்பிடும் வீரசோழியம் பின் வடமொழி மரபைப் பெரிதும் ஒட்டி இலகு, குரு, பிரஸ்தாரம் முதலிய ஆறு தெளிவு, சந்தங்களைப் பிரஸ்தரித்துக் காட்டுதல், நட்டம், உத்திட்டம் என்பனவற்று இலக்கணம், சந்தத்தொகை, அளவு என்பன வற்றோடு வண்ணங்களையும் விளக்கி யாப்புப் படலத்தை முடிக்கிறது.

யாப்பருங்கல விருத்தியின் 95 ஆம் நூற்பாவுரையில் பல அருஞ் செய்திகள் குறிப்பிடப்பட்டுள்ளன. அவற்றுள் ஈண்டைக்கு இயைவனவாகிய ஒருசில செய்திகளைச் சுட்டுவோம்.

வழு என்பது குற்றம். அது நான்கு வகைப்படும். எழுத்து வழுவும், சொல்வழுவும், பொருள் வழுவும், யாப்பு வழுவும் என. அவற்றுள் எழுத்து வழுவாவது எழுத்ததிகாரத்தோடு மாறு கொள்வது.

வரலாறு :

‘வெறிகமழ் தண்சிலம்பில் வேட்டமே யன்றிப்
பிறிதும் குறையுடையான் போலும் — செறிதொடி
தேமான் இதணத்தேம் நாமாக நம்புனத்தே
வாமான்பின் வந்த மகன்.’

என இதனுள் தேமா எனற்பாலதனைத் ‘தேமான்’ என னகரவொற்றுக் கொடுத்தமையால் எழுத்து வழுவாயிற்று. என்னை?

‘முன்னிலை நெடிலும் ஆவும் மாவும்
ன – மிகப் புணரும் மயங்குதிணை யான’

என்றாராகலின்.

சொல்வழுவாவது சொல்லதிகாரத்தோடு மாறுகொள்வது. என்னை?

'சொல்லின் வழுவே சொல்லோத்து மரபில்
சொல்லிய குற்றம் தோன்ற லாறே'

என்ருராகலின்.

வரலாறு :

'இசையெல்லாம் கொட்ட எழில்தானை ஊர்ந்து
வசையிலா மன்னர்வந் தேத்த — இசையும்
அடிசில் பருகி அணிஆர்த்துப் போந்தான்
கொடிமதில் கோழியார் கோ'

இதனுள், 'இசையெல்லாம் ஆர்ப்ப' எனவும், 'எழில்தானை நாப்பண்' எனவும், 'அடிசில் அயின்று' எனவும், 'அணி அணிந்து போந்தான்' எனவும் இவ்வாறு பொதுவினல் எடுத்துக் கொண்டு பொதுவினல் முடித்தற்பாலனவற்றைப் பொதுப் பெயரால் எடுத்துக் கொண்டு சிறப்பு வினையால் ஒன்றற்கே உரிய சொல் புணர்த்தமையான் சொல் வழு ஆயிற்று. என்னை?

'வேறுவினைப் பொதுச்சொல் ஒருவினை கிளவார்'
– தொ. சொ. 46

எனவும்,

'வேறுவினை யுடைய பொதுவினை கிளப்பப்
பொதுவினை உடைய வேற்றுமை உண்டோ'

எனவும் கூறினுராகலின்.

பொருள் வழுவாவது பொருளதிகாரத்தோடு மாறுகொள்வது. என்னை?

'பொருளின் வழுவே தமிழ்நடைத் திரிவே'

என்ருராகலின்.

வரலாறு:

'முன்னும் தொழத்தோன்றி முள்ளெயிற்ருய் அத்திசையே
இன்னும் தொழத்தோன்றிற்று ஈதேகாண் — மன்னும்
பொருகளிமால் யானைப் புகழ்க்கிள்ளி பூண்போல்
பெருகொளியான் மிக்க பிறை'

இது நாணநாட்டம்,

'பண்டிப் புனத்துப் பகலிடத் தேனனுள்
கண்டிக் களிற்றை அறிவன்மன் — தொண்டிக்
கதிரன் பழையனூர்க் கார்நீலக் கண்ணைய்
உதிரம் உடைத்திதன் கோடு'

இது நடுங்கநாட்டம். இவையிரண்டும் பொருளதிகாரத்தோடு மாறு கொண்டன. என்னை?

'நாணவும் நடுங்கவும் நாடாள் தோழி
காணுங் காலைத் தலைமகள் தேஎத்து'

என்றாராகலின்.

'வாளை மேய்ந்த வளைகோட்டுக் குதிரை
கோழிலை வாழைக் கொழுமடல் உறங்கும்
ஊரன் செய்த கேண்மை
தேரை வாலினும் பெரிதா கின்றே'

இதுவும் பொருளின்மையால் பொருள் வழுவாயிற்று.

யாப்பு வழுவாவது, யாப்பதிகாரத்தோடு மாறுகொள்வது. என்னை?

'யாப்பின் வழுவே யாப்பின திலக்கணம்
கோப்ப வாராக் கோவைத் தாகும்'

என்றாராகலின்.

வரலாறு:

'குமண! வாழி! குமண! உமணருப்பில்
தேய்கநின் பகையே; யான்சில
பெருமை வேண்டி வந்தேன்;
நீநின் பெருமை வேண்டின் தா'

இப்பாட்டு முதல் எடுத்துக்கொண்ட ஓசையில் கெட்டுப் பின் பரவிக் கட்டுரையால் வந்தமையால் யாப்புவழு. பிறவும் அன்ன...

'பிரிபொருள் தொடர்மொழி முரண்மொழி எனாஅ
ஒருபொருள் மொழியே ஐயமொழி எனாஅ
முறைபிறழ் வைப்பே சொல்வழு எனாஅ
யாப்பின் வழுவே நடைவழு எனாஅப்
பொருளின் வழுவே புணர்ப்புவழு எனாஅக்
கலையொடு மலைவே காலமலைவு எனாஅ
உலக மலைவே இடமலைவு எனாஅ
மேற்கோள் மலைவே ஏதுமலைவு எனாஅ
எடுத்துரை மலைவே நூல்மலைவு எனாஅ
இருநான்கு அடுத்த ஈரைம் பிறழ்வும்
உய்த்துணர் மொழியே ஒட்டுப்பிரி மொழியே
பிறிதுபடு மொழியே பிசிபடு மொழியே
உத்தி மறுதலை எனவரூஉம் இவையும்
இடக்கர் இசையவும் இடக்கர்ப் பொருளவும்
இடக்கர்ப் படவரூஉம் சந்தி இசையவும்
இன்னா இசையவும் எனஎடுத் திவற்றோடு
முன்னும் கூறிய பிறழ்வும் தொகைஇ
ஏழுடை இருபான் ஊனம் நீக்குபு
பாட வல்லோன் கவிஞன் ; அன்றேல்
அடங்காப் புதல்வற் பயந்த பரத்தையின்
புறஞ்சொல் பெறூஉம் புலவ ரானே.'

(இவற்றுள் சில இந்நூல் எழுத்துப்படலத்தும், சில சொற் படலத்தும், சில அணியியலுள்ளும் விளக்கப்பட்டுள்ளன.)

**சந்தமும், தாண்டகமும் :**

நாலெழுத்து முதலாக இருபத்தாறு எழுத்தின்காறும் உயர்ந்த இருபத்துமூன்றடியானும் வந்து தம்முள் ஒத்தும், குருவும் லகுவும் ஒத்தும் வந்தன அளவியற் சந்தம். எழுத்து ஒவ்வாதும் எழுத்தலகு ஒவ்வாதும் வருவன அளவழிச்சந்தம்.

இருபத்தேழ் எழுத்து முதலாக உயர்ந்த எழுத்து அடியினவாய் எழுத்தும் குரு லகுவும் ஒத்துவருவன அளவியல் தாண்டகம். எழுத்து ஒவ்வாதும் எழுத்தலகு ஒவ்வாதும் வருவன அளவழித்தாண்டகம். இவற்றிற்கெல்லாம் விரிவாக எடுத்துக் காட்டுக்கள் தரப்பட்டுள்ளன.

ஒருசாரார் சந்தஅடி பலவாய் வருவனவற்றைச் சந்தத் தாண்டகம் என்றும், தாண்டக அடி பலவாய் வருவனவற்றைத் தாண்டகச் சந்தம் என்றும், சந்த அடியும் தாண்டக அடியும் ஒத்து வருவனவற்றைச் சமசந்தத் தாண்டகம் என்றும் வழங்குவர். சந்தமும், தாண்டகமும் என்று இவற்றுக்கு எழுத்து எண்ணு கின்றுழிக் குற்றுகர இகரங்களை எழுத்தாகவே கொண்டு எண்ணுக. காக்கைபாடினியாரும், பாட்டியலுடையாரும், யாப்பியலுடையாரும் முதலாகிய ஒருசார் ஆசிரியர் இவற்றையும் இனத்தின்பாற்படுத்தி வழங்குவர். தொல்காப்பியனார் முதலாகிய ஒருசார் ஆசிரியர் இவற்றையும் மேற்கூறப்பட்ட பாவினங்களையும் கொச்சகப்பாற்படுத்தி வழங்குவர்.

வெண்பாக்களும் அடிதோறும் எழுத்தெண்ணிப் பாடப் படுவதும் உண்டு. ஏழெழுத்து முதல் பதினெழுத்து முடிய அடிதோறும் பெற்றுவரும் வெண்பாவுக்கு எடுத்துக்காட்டுக்கள் தரப்பட்டுள்ளன. ஈற்றடி ஒழிந்து ஏனைய அடி எழுத்து ஒத்து வருவனவற்றைக் கட்டளை வெண்பா எனவும், ஒவ்வாது வருவனவற்றைக் கலம்பக வெண்பா எனவும், ஈற்றடி எழுத்தும் ஏனைய அடி எழுத்தும் ஒத்து வருவனவற்றைச் சமநடை வெண்பா எனவும், ஈற்றடி எழுத்தினோடு ஏனைய அடி எழுத்துச் சில ஒத்தும் ஒவ்வாதும் வருவனவற்றைச் சமவியல் வெண்பா எனவும், ஈற்றடி எழுத்து மிக்கு ஏனையடி எழுத்துக் குறைந்து தம்முள் ஒத்து வருவனவற்றை மயூரவியல் வெண்பா எனவும் வழங்குவர்.

இங்ஙனமே 13 எழுத்தடி முதலாக 19 எழுத்தடி ஈருகக் கலிப்பா வரும். 4 எழுத்து முதலாக 12 எழுத்தின்காறும் இரு சீரடி வஞ்சிப்பா வரும். 8 எழுத்தடி முதலாக 17 எழுத்தடி காறும் முச்சீரடி வஞ்சிப்பா வரும்.

எல்லா அடிகளும் எழுத்து ஒத்துவரும் கலி கட்டளைக்கலி எனவும், ஒவ்வாது வருவது கலம்பகக்கலி எனவும், எல்லா அடிகளும் எழுத்து ஒத்துவரும் ஆசிரியமும், வஞ்சியும் முறையே கட்டளை ஆசிரியம், கட்டளை வஞ்சி எனவும், ஒவ்வாது வருவன கலம்பக ஆசிரியம், கலம்பக வஞ்சி எனவும் வழங்கப்பெறும்.

அடிதோறும் சீர் ஒத்து ஓரடியுள் ஓரெழுத்துக் குறைந்து வந்தமை நிகர்த்து எனவும், ஓரடியுள் இரண்டெழுத்துக் குறைந்து சீர் ஒத்து வந்தமை புரிக்கு எனவும், ஓரடியில் இரண்டெழுத்து மிக்குச் சீர் ஒத்து வந்தமை சுராட்டு எனவும், முதலடியும் நான்காமடியும் எழுத்துக் குறைந்து நடு இரண்டடியும் எழுத்து மிக்கு நாலடியும் சீர் ஒத்து வந்தமை பவமத்திமம் எனவும், முதலடியும், ஈற்றடியும் எழுத்து மிக்கு நடுவிரண்டடியும் எழுத்துக் குறைந்து நாலடியும் சீர் ஒத்து வந்தமை பிபீலிகா மத்திமம் எனவும், முதலிரண்டடியும் எழுத்துக் குறைந்து கடையிரண்டடியும் எழுத்து மிக்கு நான்கடியும் சீர் ஒத்து வந்தமை பாதிச் சமவிருத்தம் எனவும், முதலிரண்டடியும் எழுத்து மிக்குக் கடையிரண்டடியும் எழுத்துக் குறைந்து நான்கடியும் சீர் ஒத்து வந்தமை பாதிச் சம செய்யுள் எனவும் கூறப்படும்.

இவை யாப்பருங்கல விருத்தியில் கூறப்பட்டுள்ள செய்திகளாம்.

தொல்காப்பியனூர் குறிப்பிட்ட அறுவகைப் பாக்களுள் பரிபாடல் இக்காலத்தில் அருகிவிட்டது. அவர் குறிப்பிட்ட வெண்பா ஆசிரியப்பாக்கள் பல பகுப்புக்களாகப் பிற்காலத்தில் பகுக்கப்பட்டுவிட்டன. அவர் குறிப்பிட்ட உறழ்கலி பிற்காலத்தில் வழக்கிழந்துவிட்டது. அவர் பாவினங்களையே குறிப்பிடவில்லை. பிற்காலத்தில் குறள்வெண்பாவுக்கு வெண்செந்துறை குறட்டாழிசை என்ற இனங்களும் நால்வகைப் பாக்களுக்கும் தாழிசைதுறை விருத்தம் என்ற இனங்களும் தோன்றலாயின. இவ்வினங்களின் யாப்பிலக்கணத்திற்கும் இவற்றின் பெயர்களுக்கும்

பொருத்தமின்மையும் இவை நிரம்பா இலக்கணத்தனவாகும் பெற்றியும் நச்சினார்க்கினியர் முதலிய சான்றோரால் குறிப்பிடப் பட்டுள்ளன. இச்செய்தியைச் சிறிது விரித்து நோக்குவோம்.

குறள் வெண்பா இரண்டு அடியினதாகவே அதன் இனங்களாகிய வெண்செந்துறையும் குறட்டாழிசையும் இரண்டடிப் பாடல்களாகவே வரையறுக்கப்பட்டுள்ளன.

விழுமிய பொருளும் ஒழுகிய ஓசையும் உடைய சமமான இரண்டடிகளை உடைய பாடல் வெண்செந்துறை. சீர்வரையறை தளைவரையறை இல்லை.

குறட்டாழிசை மூவகைத்து. விழுமிய பொருளும் ஒழுகிய ஓசையும் இன்றி வரும் செந்துறைச் சிதைவும், முதலடியைவிடச் சீர்கள் குறைந்து வரும் இரண்டாம் அடியை உடைய இரண்டடிப் பாடலும், தளைதட்டி வரும் குறள்வெண்பாவும் குறட்டாழிசை எனப்படும்.

விழுமிய பொருளும் ஒழுகிய ஓசையும் இன்றிப் பாடப்படுவது பாடலாகுமா? கவிகள் இவ்விரண்டும் இல்லாமல் செய்யுள் இயற்றுவார்களா? இன்னதுதான் விழுமிய பொருள், ஒழுகிய ஓசை என்று யாங்கனம் வரையறுப்பது?

வெண்டாழிசை எனப்படும் வெள்ளொத்தாழிசை முதல் இரண்டடிகளும் நாற்சீராய் ஈற்றடி முச்சீராய் அமைந்து தளை வரையறையின்றி வருவதாகும். ஒரு பொருள் மேல் மூன்று அடுக்கி வரும் சிந்தியல் வெண்பாவும் வெள்ளொத்தாழிசையாம்.

வெண்டுறை சீர்வரையறையின்றி மூன்றடி முதல் ஏழடி எல்லை வரை ஓரொலியும் பல ஒலியும் கொண்டு கடையடிகளில் ஒன்றோ பலவோ சீர் குறைந்து வருவதாம்.

கடையடி ஒருசீர் குறைந்து ஏனைய அடிகள் நாற்சீரவாய் மூன்றடித்தாய் வரும் வெண்டுறைக்கும் வெள்ளொத்தாழிசைக்கும் வேறுபாடு இல்லை.

வெளிவிருத்தம் அடிதோறும் நான்கு சீர்களுக்குமேல் ஐந்தாம் சீர் ஒருஉத் தொடைபெற்ற ஒரே சொல்லையோ சொற்றொடரையோ கொண்டு மூன்றடியானும் நான்கடியானும் வருவதாகும். இதற்கும் தளைவரையறை இல்லை.

வெண்பா என்று அடை ஏதும் இன்றிக் கூறின் அச்சொல் அளவடி வெண்பாவாகிய நாலடி வெண்பாவையே குறிக்கும். அத்தகைய வெண்பாவின் இனங்களின் இலக்கணம் இங்ஙனம் அமைக்கப்பட்டிருப்பது புதுவது புணர்த்ததாகும்.

சீர்கள் அளவொத்து ஓரெதுகையானமைந்த மூன்றடிப்பாடல் ஆசிரியத்தாழிசை. இது ஒரு பொருள் மேல் மூன்றடுக்கியும் வரும். சீர்தளை வரையறை இல்லை. இங்ஙனமாகவே, அடிதோறும் நாற்சீர் பெற்றுவரும் ஆசிரியத்தாழிசைக்கும் மூன்றடியானமைந்த நிலைமண்டில ஆசிரியப்பாவிற்கும் வேற்றுமை இல்லை. நிலை மண்டில ஆசிரியப்பாவாயின் மெய்யெழுத்தில் முடிதல் வேண்டும் எனவும் மூன்றடியும் ஈரெதுகையாக இருத்தல் வேண்டும் எனவும் நாமே வேறுபாட்டை வலியக் கற்பித்துக்கொள்ள வேண்டியவராய் உள்ளோம்.

ஆசிரியத்துறை ஈற்றயலடி குன்றியும், இடையடிகள் சிற்சில குன்றியும் இடை மடக்கியும் சீர்தளை வரையறை இன்றி நான்கு அடிகளான் அமைவது. நாற்சீரடிகளானமைந்து ஈற்றயலடி ஒரு சீர் குறைந்துவரும் ஆசிரியத்துறைக்கும் நான்கடி நேரிசை ஆசிரியப்பாவிற்கும் வேறுபாடில்லை. பல எதுகையாக வரின் ஆசிரியப்பா என்றும் ஒரே எதுகையாக வரின் ஆசிரியத்துறை என்றும் நாமே வலிய வரையறை செய்துகொள்ள வேண்டியவராக உள்ளோம்.

ஆசிரிய விருத்தமாவது ஆறுக்குக் குறையாத சீர்களை உடைய ஒரே விகற்பத்தனவாகிய சமமான நான்கு அடிகளை உடையது.

கலித்தாழிசையாவது அடிவரையறை சீர்வரையறை இன்றிக் கடையடி நீண்டு வருவதாகும். கலித்தாழிசை ஒரு பொருள்மேல் மூன்றடுக்கியும் வரலாம். ஒத்தாழிசைக்கலி முதலியவற்றின் உறுப்புக்களாகிய தாழிசைகள் சமமான அடிகளாக இருத்தலின் அவற்றைக் கலித்தாழிசை என்று கூறுமல் அடிவரையறை மிக்கும் ஒத்தும் வந்த ஆசிரியத் தாழிசை என்று கூறவேண்டி வரும்.

கலித்துறை என்பது தளை வரையறை இன்றி ஒரே விகற்பம் உடைய சமமான நான்கடிப் பாடல். கட்டளைக்கலித்துறை என்பது,

'அடிஅடி தோறும் ஐஞ்சீ ராகி
முதற்சீர் நான்கும் வெண்டளை பிழையா
கடைஒரு சீரும் விளங்கா யாகி
நேர்பதி ஞறே நிரைபதி னேழென்று
ஓதினர் கலித்துறை ஓரடிக்கு எழுத்தே'

என்ற இலக்கணத்ததாய் நான்கடியும் ஒரே விகற்பமுடையதாய் அமைந்து பெரும்பாலும் 'ஏ' என்னும் எழுத்தான் முடிவது.

கலி விருத்தம் என்பது ஒரே விகற்பமுடைய அளவடிகள் நான்கு அமைந்த பாடலாகும். தரவு கொச்சகமும் இது போன்ற நான்கடிப் பாடலாகும். அது காய்ச்சீர்களானவது என்ற வேறுபாடு கோடல்வேண்டும்.

வஞ்சித்தாழிசை என்பது ஒரே விகற்பமுடைய குறளடிகள் நான்கு ஒரு பொருள்மேல் மூன்றடுக்கி வருவது. அப்பாடல் தனியே வரின் வஞ்சித்துறை. வஞ்சி விருத்தம் என்பது ஒரே விகற்பமுடைய சிந்தடி நான்காய்ச் சீர் தளை முதலிய வரையறை இன்றி அமைவது.

இவற்றை நோக்கக் கீழ்க்கண்டவாறு இவற்றின் இலக்கணங்களை வரையறை செய்து கொள்ளும் நிலையில் உள்ளேம்.

இரண்டடிகள் சமமாகவரின் :-

1. வெண்செந்துறை.
2. குறட்டாழிசையின் ஒருவகை.

இரண்டடிகள் கடையடி நீண்டுவரின் :-

கலித்தாழிசை.

இரண்டடிகள் கடையடி குறைந்துவரின் :-

குறட்டாழிசையின் ஒருவகை.

நாற்சீரடி மூன்று சமமாகவரின் :-

1. ஆசிரியத்தாழிசை.
2. நிலைமண்டில ஆசிரியப்பா.

நாற்சீரடி மூன்றடிகளில் கடையடி நீண்டுவரின் :-

கலித்தாழிசை.

நாற்சீரடி மூன்றடிகளில் கடையடி குறைந்துவரின் :-

வெண்டாழிசை.

நாற்சீரடி நான்கு சமமாக வரின் :-

1. கலி விருத்தம்.
2. தரவு கொச்சகக்கலிப்பா.
3. நிலைமண்டிய ஆசிரியப்பா.

ஐஞ்சீரடி நான்கு ஒரூஉத்தொடை பெற்றுவரின் :-

வெளிவிருத்தம்.

ஐஞ்சீரடி நான்கு ஒரூஉத்தொடை இன்றி வரின் :-

கலிநிலைத்துறை.

ஐஞ்சீரடி நான்கு எழுத்தெண்ணிப் பாடப்படின் :-

கட்டளைக்கலித்துறை.

ஒரே விகற்பமுடைய சமமான நான்கு அடிகள் :-

| | | |
|---|---|---|
| முச்சீர் பெறின் | — | வஞ்சி விருத்தம். |
| நாற்சீர் பெறின் | — | கலி விருத்தம். |
| ஐஞ்சீர் பெறின் | — | கலிநிலைத்துறை. |
| ஆறு முதலிய சீர்பெறின் | — | ஆசிரிய விருத்தம். |

கட்டளைக் கலித்துறையும் தொடக்கத்தில் விருத்தம் என்றே வழங்கப்பெற்றமை நம்மாழ்வார் அருளிய திருவிருத்தம் முதலிய பெயர்களால் போதரும்.

விருத்த இலக்கணமே தெளிவாக உள்ளமையால் பிற்காலப் புலவர்கள் பெரும்பாலும் விருத்த யாப்பையே பயன்படுத்தினர் என்பதும் தாழிசை துறைகள் தெளிவில்லா இலக்கணத்தன வாதலின் அவற்றை அருகியே பயன்படுத்தினர் என்பதும் உணரப்படும். எடுத்துக்காட்டு வாயிலாக நோக்குவோம் :

'செம்பொன் வேய்ந்த செழுமணி மன்றத்
தம்பொன் மேருவுக் கடிமுடி யின்றே'

இது விழுமிய பொருளும் ஒழுகிய ஓசையும் உடையது எனக் கொள்ளின் வெண்செந்துறை; அங்ஙனம் கொள்ளாதொழியின் குறட்டாழிசை.

'செம்பொன் வேய்ந்த செழுமணி மன்றத்
தம்பொன் மேருவுக் கடிமுடி யின்றென
உம்பருள் அறிவார் உளர்.'

இது வெண்டாழிசை.

'செம்பொன் வேய்ந்த செழுமணி மன்றத்
தம்பொன் மேருவுக் கடிமுடி யின்றென
உம்பருள் அறிவார் உளரோ இலரோ.'

இஃது ஆசிரியத்தாழிசை.

'செம்பொன் வேய்ந்த செழுமணி மன்றத்
தம்பொருள் மேருவுக் கடிமுடி யின்றென
உம்பருள் அறிவார் உளரோ இலரோ என்றும்.'

இது கலித்தாழிசை.

'செம்பொன் வேய்ந்த செழுமணி மன்றத்து – நமரங்காள்
அம்பொருள் மேருவுக் கடிமுடி இன்றென – நமரங்காள்
உம்பருள் அறிவார் உளரோ இலரோ – நமரங்காள்.'

இது வெளி விருத்தம்.

'செம்பொன் வேய்ந்த செழுமணி மன்றத்
தம்பொன் மேருவுக் கடிமுடி யின்றே;
அம்பொன் மேருவுக் கடிமுடி
உம்பருள் அறிவார் ஒருவரும் இலரே.'

இஃது ஆசிரியத்துறை.

இங்ஙனம் ஒரே பாடல் சிற்சில வேறுபாடுகளால் பல பாவினங்களாக ஆகும் நிலையில் தாழிசைதுறை இலக்கணம் அமைந்துள்ளது. இந்த இலக்கணத்திலும் சிற்சில கருத்து வேறுபாடுகள் உண்டு. மேலும் ஆசிரிய விருத்தம், கலி விருத்தம் முதலியவற்றில் பலப்பல வகைகள் உள. அவற்றின் இலக்கணங்களும் விரித்து உரைக்கத்தக்கன. இக்காலத்து வழங்கும் பலதிறப் பாடல்களுக்கும் இலக்கணம் வகுக்கப்படல் வேண்டும். புலவர் பலரும் தாம்தாம் ஆய்ந்தவாற்றானே யாப்பிலக்கணம் செய்பவாயின், அவற்றை எல்லாம் ஒன்று சேர்த்து ஒரு முடிவான யாப்பிலக்கணம் அமைத்தல் இயலும். யாப்பருங்கலம், யாப்பருங்கலக்காரிகை ஆகியவற்றை வரைய முன்னைய நூல்கள் இவ்வாறே பயன்பட்டுள்ளன. அவற்றைப் பிற்சேர்க்கையில் காணலாம்.

செய்யுளியல் விளக்கம் முற்றும்.



## குறிப்பு

*[85ஆம் பக்கத்தில் பொருள்சொல் முரண்தொடைச் செய்யுளுக்குப் பின்னும் அடி அளபெடைத்தொடைச் செய்யுளுக்கு முன்னும் இடையே கீழ்க் குறிப்பிடப்படும் பகுதியைக் கொள்க.]*

**அடி இயைபுத் தொடைக்குச் செய்யுள் :**

**'இன்னகைத் துவர்வாய்க் கிளவியும் அணங்கே ;**
**நன்மா மேனிச் சுணங்குமார் அணங்கே ;**
**ஆடுஅமைத் தோளின் ஊடலும் அணங்கே ;**
**அரிமதர் மழைக்கணும் அணங்கே ;**
**திருநுதல் பொறித்த திலகமும் அணங்கே'**

**எனவும்,**

*[இப்பாடலில் அணங்கே என்ற ஈற்றுச்சீர் ஐந்து அடிகளிலும் ஒன்றுகவே வந்துள்ளமையின் இப்பாடல் அடியியைபுத் தொடைக்கு எடுத்துக்காட்டு.]*

# இலக்கண விளக்கம் - செய்யுளியல்



## நூற்பா முதற்குறிப்பு அகரவரிசை

—○—

# எடுத்துக்காட்டு அகரவரிசை

# உரைமேற்கோள் நூற்பாக்கள் அகரவரிசை

# செய்யுளியல் - இலக்கணச் செய்திகள்

ஆ

## இ

ஓ

# ஒத்த நூற்பாக்கள் அகரவரிசை

**வீரசோழியம் :**

**யாப்பருங்கல விருத்தி:**

**யாப்பருங்கலக் காரிகை :**

**தொன்னூல் விளக்கம் :**

**முத்து வீரியம் :**

**நூற் பெயர் தெரியா நூற்பாக்கள் :**

★

# அருஞ்சொற் பொருள் - அகரவரிசை

(எண் – பக்கவெண்)

## அ

அகவுதல் ... (மயில்) ஒலித்தல் *95, 128*
அசும்பு ... திவலை *129*
அசைத்தல் ... கட்டுதல் *129*
அடர்ப் பொன் ... தகட்டுப் பொன் *166*
அடுக்கம் ... மலையடுக்கு *195*
அடுக்கல் ... மலை *273*
அடை ... இலை *296*
அடைச்சுதல் ... சூடுதல் *166*
அணங்கினர் ... அச்சுறுத்தலுடையார் *139*
அணங்குதல் ... வருத்துதல் *85, 221, 245*
அண்ணாத்தல் ... வாய்திறத்தல் *278*
அதர் ... வழி *145*
அதா அன்று ... அதுவன்றி *140*
அநந்தன் ... ஆதிசேடன் *148*
அமலுதல் ... நெருங்குதல் *170, 275, 300*
அமை ... மூங்கில் *86, 228, 243, 250, 275*
அயில் ... கூர்மை *148*
அயில் ... வேல் *151*
அயிலுதல் ... விழுங்குதல் *130*
அரமகளிர் ... தேவருலக மாதர் *55, 145*
அரிக்குரல் ... தேரையைப்போன்ற ஒலி *86*
அருக்கன் ... சூரியன் *150*
அலக்கண் ... துயரம் *179*
அலங்குதல் ... அசைதல் *64*
அலம்புதல் ... ஒலித்தல் *249*
அலமரல் ... சுழலுதல் *56*
அலர் ... ஊரார் கூறும் பழிச்சொல் *87*

ஆ



இ

ஈ



உ

## ஏ



## ஐ



## ஒ



## ஓ

### க

ஞ



த

ப

பகடு ... பெருமை 163
பகடு ... எருமைக்கிடாய் 175
பகழி ... அம்பு 110
படர்கூர்ந்திசின் ... துயர்மிக்கேன் 264
படலை ... இலை விரவித்தொடுத்த மாலை 117
பணி ... பாம்பு 150
பணை ... மூங்கில் 250
பணை ... மருதம் 78, 202
பணை ... பெருப்பு 163, 167
பண்டி ... வயிறு 173
பம்புதல் ... செறிதல் 139
பயோதரம் ... நகில், மேகம் 245
பரசு ... மழு 129
பரசுதல் ... வழுத்துதல் 129
பரசோன் ... மழுவாளியாகிய சிவபெருமான் 257
பரித்தல் ... விரைதல் 285
பரிதல் ... அறுத்தல் 166
பரிவு ... துயர் 171
பவம் ... பிறப்பு 129
பறநாடு ... பறம்புநாடு 113
பறை ... பறத்தல் 169
பனிப்பு ... நடுக்கம் 178
பாய்மா ... குதிரை 110
பார்ப்பு ... குஞ்சு 85
பானல் ... நீலோற்பலம் 198
பிணா ... பெண் 212
பிணை ... பெண்மான் 77
பிண்டி ... அசோகு 146, 166, 234
பில்குதல் ... பிலிற்றுதல் 129
பீர்ங்க ... பசலை நிறம்பட 241, 247

## சுருக்கெழுத்து விளக்கம்

| | | |
|---|---|---|
| இ. வி. | — | இலக்கண விளக்கம் |
| இ. வி. அணி. | — | இலக்கண விளக்கம் – அணியியல் |
| இ. வி. செய். | — | இலக்கண விளக்கம் – செய்யுளியல் |
| ஐங்குறு. | — | ஐங்குறு நூறு |
| கலி. | — | கலித்தொகை |
| கலி. குறிஞ். | — | கலித்தொகை – குறிஞ்சிக்கலி |
| காக்கை. | — | காக்கைபாடினியம் |
| குறுந். | — | குறுந்தொகை |
| சி. செ. கோ. | — | சிதம்பரச் செய்யுட் கோவை |
| சிந்தா. | — | சிந்தாமணி |
| சிறுகாக்கை. | — | சிறுகாக்கைபாடினியம் |
| சூளா. | — | சூளாமணி |
| சூளா. கல். | — | சூளாமணி – கல்யாணச் சருக்கம் |
| சூளா. சீய. | — | சூளாமணி – சீயவதைச் சருக்கம் |
| சூளா. துறவு. | — | சூளாமணி – துறவுச் சருக்கம் |
| சூளா. நகர. | — | சூளாமணி – நகரச் சருக்கம் |
| சூளா. நா. | — | சூளாமணி – நாட்டுச் சருக்கம் |
| தொல். | — | தொல்காப்பியம் |
| தொல். சொல். | — | தொல்காப்பியம் – சொல்லதிகாரம் |
| தொல். பொ. | — | தொல்காப்பியம் – பொருளதிகாரம் |
| தொ. பொ. | — | தொல்காப்பியம் – பொருளதிகாரம் |
| தொ. வி. | — | தொன்னூல் விளக்கம் |
| நாலடி. | — | நாலடியார் |
| நான்மணி. | — | நான்மணிக் கடிகை |
| பட். | — | பட்டினப்பாலை |
| பதிற். | — | பதிற்றுப்பத்து |
| பு. வெ. மா. கை. | — | புறப்பொருள் வெண்பாமாலை – கைக்கிளைப்படலம் |
| புறநா. | — | புறநானூறு |
| மயேச். | — | மயேச்சுரம் |

| | | |
|---|---|---|
| மலைபடு. | — | மலைபடுகடாம் |
| மு. வீ., மு. வீ. யா. | — | முத்து வீரியம் – யாப்பதிகாரம் – உறுப்பியல் |
| மு. வீ. ஒ. | — | முத்து வீரியம் – யாப்பதிகாரம் – ஒழிபியல் |
| மு. வீ. செ. | — | முத்து வீரியம் – யாப்பதிகாரம் – செய்யுளியல் |
| யா. கா. | — | யாப்பருங்கலக் காரிகை |
| யா. கா. மே. | — | யாப்பருங்கலக் காரிகை உரை – எடுத்துக்காட்டு |
| யாப்., யா. வி. | — | யாப்பருங்கல விருத்தி |
| யா. வி. மே. | — | யாப்பருங்கல விருத்தி உரை – எடுத்துக்காட்டு |
| வீர., வீ. சோ. | — | வீரசோழியம் |
| வீ. சோ. மே. | — | வீர சோழியம் உரை மேற்கோள் |
| வீ. சோ. யா. | — | வீர சோழியம் – யாப்புப்படலம் |



## அச்சுப் பிழைகளும் திருத்தங்களும்

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 103 | 18 | 391 | 394 |
| 112 | 10 | நிலையன் | நிலையள் |
| 114 | 5 | தேமா | நாள் |
| 148 | 15 | இன்னும் | மின்னும் |
| 150 | 13 | அருக்கள் | அருக்கன் |
| 160 | 27 | சிவம்பு | சிலம்பு |
| 176 | 28 | குழாங்கன் | குழாங்கள் |
| 178 | 4 | புறம் | புரம் |
| 234 | 22 | பெருகுவர் | பெறுகுவர் |
| 244 | 15 | மந்தாமே | மந்தரமே |
| 247 | 24 | வெல்வார் | வெல்லார் |
| 296 | 17 | நுகப்பு | நுசுப்பு |

**பிறவும் உளவேனும் திருத்திக்கொள்க.**

# இலக்கண விளக்கம்
# பொருளதிகாரம்

## செய்யுளியல் - பிற்சேர்க்கை

சங்க காலத்தை ஒட்டி யாப்பிலக்கணம் பற்றிய நூல்கள் பலவாகத் தோன்றின என்பது அறியப்படுகிறது. அவற்றுள்ளும் சில நூல்களின் பெயர்களையே இக் காலத்து அறியும் வாய்ப்பினைப் பெற்றிருக்கிறோம். நூல் பெயர் அறிதல் இயலாதவகையில் பல நூற்பாக்கள் கிடைத்துள்ளன. நூல் பெயர் அறியும் நிலையில் உள்ள யாப்புப்பற்றிய நூற்பாக்கள் பிற்சேர்க்கையாகத் தொகுத்துக் கூறப்பட்டுள்ளன.

அவற்றுள்ளும் அவிநயம், காக்கைபாடினியம், சிறு காக்கைபாடினியம், நத்தத்தம், பல்காயம், மயேச்சுரம் என்பனவற்றின் நூற்பாக்கள் பலவாம். கடிய நன்னியம், சங்கயாப்பு, நக்கீரர் அடிநூல், நல்லாதம், நல்லாறம், நாலடிநாற்பது, பரிமாணம், பனம்பாரம், பன்னிருபடலம், பாட்டியல்மரபு, மாபுராணம், வாய்ப்பியம் என்பனவற்றின் நூற்பாக்கள் மிக அருகியே நமக்குக் கிட்டியுள்ளன. அவை எல்லாம் தனித்தனித் தலைப்பில் இலக்கண விளக்கச் செய்யுளியல் அமைப்பு முறையை ஒட்டி ஓராற்றான் நிரல் படுத்தப்பட்டுப் பிற்சேர்க்கையாக இணைக்கப்பட்டுள்ளன. பதினாறும் நூற்றாண்டில் தோன்றியதும் ஆசிரிய விருத்தயாப்பால் அமைந்ததும் ஆகிய சிதம்பரப்பாட்டியலின் முன் பகுதியாகிய செய்யுளியல் பற்றிய நூற்பாக்களும் பிற்சேர்க்கையாக உள்ளன.

# உள்ளுறை

—○—

## 1. அவிநயம்

### அசைக்கு உறுப்பாவன

'நெடிய குறிய உயிர்மெய் உயிரும்
வலிய மெலிய இடைமை அளபெடை
மூவுயிர்க் குறுக்கமோடு ஆம்அசைக்கு எழுத்தே.' 1

### அசைவகைகள்

'நேர்அசை ஒன்றே நிரைஇரண்டு அலகு
ஆகும் என்ப அறிந்தி னோரே.' 2

'கடையும் இடையும் இணையும்ஐ இரட்டியும்.' 3

'நேர்பு மூன்றுஅலகு நிரைபுநான்கு அலகுஎன்று
'ஓதினர் புலவர் உணரு மாறே.' 4

### சீர் வகைகள்

'ஈரசைச் சீர்நான்கு இயற்சீர்; மூவசையின்
இயற்சீர் எட்டினுள் அல்லன விரவினும்
நேர்இறின் வெள்ளை; நிரைஇறின் வஞ்சி.' 5

### ஓரசைச்சீர்

'நேர்நிரை வரினே சீர்நிலை எய்தும்
பாவொடு பிறவும் ஆகும் ஒரோவழி.' 6

### நாலசைச்சீர்

'ஈரசைச்சீர் பின்முன் னைவைத்து உறழ்ந்து
மாறியக்கால் நாலசைச்சீர் பதினறு ஆகும்.' 7

### ஆசிரியத்தளை

'ஈரசை இயற்சீர் ஒன்றுதல் இயல்பே.' 8

### பாவடிகளின் சீர் வரையறை

'இரண்டினும் மூன்றினும் வஞ்சி ஆகும்.' 9

'நாற்சீர் அடியான் பாப்பிற மூன்றே.' 10

'எல்லா அடியினும் இனப்பா; நாற்சீர்
அல்லா வெல்லடி பாவினுக்கு இயலா.' 11

### முரண்தொடை

'மறுதலை உரைப்பினும் பகைத்தொடை ஆகும்.' 12

### இயைபுத்தொடை

'இறுவாய் ஒப்பின்அஃது இயைபுஎன மொழிப.' 13

### அளபெடைத்தொடை

'அளபெடை இனம்பெறத் தொடுப்பது அளபெடை.' 14

### ஒரூஉத்தொடை

'ஒரூஉத்தொடை,
இருசீர் இடையிடின் என்மனார் புலவர்.' 15

### செந்தொடை

'மாறுஅலது ஒவ்வா மரபின செந்தொடை.' 16

### இரட்டைத்தொடை

'ஒருசீர் அடிமுழுது ஆயின் இரட்டை.' 17

### தொடைகளுக்குப் புறனடை

'மயங்கிய தொடைமுதல் வந்ததன் பெயரான்
இயங்கினும் தளைவகை இன்னன ஆகும்.' 18

### பாவும் பாவினமும்

'வெண்பா தாழிசை வெண்டுறை விருத்தம்என்று
இந்நான்கு அல்லவும் முந்நான்கு என்ப.' 19

### வெண்பா யாப்பு

'ஏந்திசைச் செப்பல் இசையன ஆகி
வேண்டிய உறுப்பின வெண்பா யாப்பே.' 20

### வெண்பா ஈற்றடி

'முச்சீர் அடியான் இறுதலும் நேர்நிரை
அச்சீர் இயல்பின் அசையின் இறுதியாம்.' 21

### குறள் வெண்பா

'ஈரடி இயைந்தது குறள்வெண் பாவே.' 22

'ஐம்பெருந் தொடையின் இனக்குறள் விகற்பம்
செந்தொடை விகற்பொடு செயிர்தீர் ஈரடி.' 23

### சிந்தியல் வெண்பா

'நேரிசைச் சிந்தும் இன்னிசைச் சிந்தும்என்று
ஈரடி முக்கால் இருவகைப் படுமே.' 24

### நேரிசை வெண்பா

'குறட்பா இரண்டவை நால்வகைத் தொடையாய்
முதற்பாத் தனிச்சொலின் அம்மூ இருவகை
விகற்பினும் நடப்பது நேரிசை வெண்பா.' 25

### இன்னிசை வெண்பா

'ஒன்றும் பலவும் விகற்பாய்த் தனிச்சொல்
இன்றி நடப்பது இன்னிசை வெண்பா.' 26

### பஃறொடை வெண்பா

'தொடைமிகத் தொடுப்பன பஃறொடை வெண்பா.' 27

### வெள்ளொத்தாழிசை

'அடிமூன் றாகி வெண்பாப் போல
இறுவது ஆயின் வெள்ளொத் தாழிசை.' 28

### வெண்டுறை

'அடிஐந் தாகியும் மிக்கும் ஈற்றடி
ஒன்றும் இரண்டும் சீர்தபின் வெண்டுறை.' 29

### வெளிவிருத்தம்

'மூன்றும் நான்கும் அடிதொறும் தனிச்சொல்
கொளீஇய எல்லாம் வெளிவிருத் தம்மே.' 30

### ஆசிரியப்பா

'தன்பால் உறுப்புத் தழுவிய மெல்லிய
இன்பா அகவல் இசையதை இன்னுயிர்க்கு
அன்பா அறைந்த ஆசிரியம் என்ப.' 31

'ஏ-ஐச் சொல்லின் ஆசிரியம் இறுமே;
ஓ-ஈ ஆயும் ஒரோவழி ஆகும்.' 32

'என்என் சொல்லும் பிறவும் என்றுஇவற்று
உன்னவும் பெறாஉம் நிலைமண் டிலமே.' 33

### நேரிசை ஆசிரியம்

'ஈற்றதன் மேலடி ஒருசீர் குறையடி
நிற்பது நேரிசை ஆசிரி யம்மே.' 34

### இணைக்குறள் ஆசிரியம்

'இடைபல குறைவது இணைக்குறள் ஆகும்.' 35

### நிலைமண்டில ஆசிரியம்

'ஒத்த அடித்தாய் உலையா மண்டிலம்
என்என் கிளவியை ஈறா கப்பெறும்
அன்ன பிறவும்அந் நிலைமண் டிலமே.' 36

### அடிமறி மண்டில ஆசிரியம்

'கொண்ட அடிமுத லாய்ஒத்து இறுவது
மண்டிலம் ஒத்துஇறின் நிலைமண் டிலமே.' 37

### ஆசிரியத்துறை

'நாற்சீர் அடிநான்கு அந்தாதி நடந்தவும்
ஐஞ்சீர் அடிநடந்து உறழ்அடி குறைந்தவும்
அறுசீர் எழுசீர் வலிய நடந்தவும்
எண்சீர் நாலடி ஈற்றடி குறைந்தவும்
தன்சீர் பாதியின் அடிமுடிவு உடைத்தாய்
அந்தத் தொடைஇவை அடியா நடப்பின்
குறையா உறுப்பினது துறைஎனப் படுமே.' 38

### ஆசிரிய விருத்தம்

'அறுசீர் எழுசீர் அடிமிக நின்றவும்
குறைவுஇல் நான்குஅடி விருத்தம் ஆகும்.' 39

### கலிப்பா இலக்கணம்

'ஆய்ந்த உறுப்பின் அகவுதல் இன்றி
ஏய்ந்த துள்ளல் இசையது கலியே.' 40

### கலிப்பா வகை

'ஒத்தாழிசைக் கலிவெண் கலிகொச் சகமென
முத்திறத் தான்வரும் கலிப்பா என்ப.' 41

### நேரிசை ஒத்தாழிசை

'விட்டிசை முதற்பா தரவுஅடி ஒத்தாங்கு
ஒட்டிய மூன்றிடைத் தாழிசை அதன்பின்
மிக்கதோர் சொல்லாத் தனிநிலை சுரிதகம்
ஆசிரி யத்தோடு வெள்ளை இறுதல்என்று
ஓதினர் ஒத்தா ழிசைக்கலிக்கு உறுப்பே.' 42

### அம்போதரங்க ஒத்தாழிசை

'உரைத்த உறுப்பொடு தாழிசைப் பின்னர்
நிரைத்த அடியான் நீர்த்திரை போல
அசையடி வரின்அவை அம்போ தரங்கம்.' 43

### வண்ணக ஒத்தாழிசை

'குறில்வயின் நிரையசை கூடியஅடி பெறினே
வண்ணகம் ஆகும்.' 44

### வெண்கலி

'கலிஒலி கொண்டு தன்தளை விரவா
இறும்அடி வரினே வெண்கலி ஆகும். 45

**கொச்சகக்கலி**

'தரவே ஆகியும் இரட்டியும் தாழிசை
சிலவும் பலவும் மயங்கியும் பல்வேறு
ஒத்தா ழிசைக்கலிக்கு ஒவ்வா உறுப்பின
கொச்சகக் கலிப்பா ஆகும் என்ப.' 46

**கலித்தாழிசை**

'ஈற்றடி மிக்குஅளவு ஒத்தன ஆகி
பலவும் சிலவும் அடியாய் வரினே
கலிப்பா இனத்துத் தாழிசை ஆகும்.' 47

**கலித்துறை**

'ஐஞ்சீர் நான்குஅடி கலித்துறை ஆகும்.' 48

**கலிவிருத்தம்**

'நாற்சீர் நாலடி வருவ தாயின்
ஒலியின் இயைந்த கலிவிருத் தம்மே.' 49

**வஞ்சிப்பா**

'தூங்கல் இசையாய்த் தனிச்சொல் சுரிதகம்
தான்பெறும் அடிதனை தழீஇவரைவு இன்றாய்
எஞ்சாது அமைவது வஞ்சிப் பாவே.' 50

**வஞ்சித்தாழிசையும் துறையும்**

'இருசீர் நாலடி மூன்றுஇணைந்து இறுவது
வஞ்சித் தாழிசை; தனிவரின் துறையே.' 51

**தனைசிதைவுழிப்படும் இலக்கணம்**

'உயிரள பெடையும் குறுகிய உயிரின்
இகர உகரமும் தளைதபின் ஒற்றும்;
சீர்தப வரினும் ஒற்றுஇயற்று ஆகும்.' 52

'அளபுஎழின் அல்லதை ஆய்தமும் ஒற்றும்
அலகுஇயல்பு எய்தா என்மனர் புலவர்.' 53

### சீர் மயக்கம்

'உரிமையின் இயற்சீர் மயங்கியும் பாநான்கு
இருமை வேறுஇயல் வெண்பா ஆகியும்
வரும்எனும் வஞ்சிக் கலியின்நேர் இற்ற
இயற்சீர் ஆகா என்மனார் புலவர்.' 54

'நிரைஇறு நாலசை வஞ்சியுள் அல்லால்
விரவினும் நேர்ஈற்று அல்லவை நில்லா.' 55

'நேர்நடு இயலா வஞ்சி உரிச்சீர்
ஆசிரி யத்துஇயல் உண்மையும் உடைய.' 56

### பாவின் சிறுமை பெருமை

'ஒன்றும் இரண்டும் மூன்றும்ஓர் இரண்டும்
என்றுஇம் முறையே பாவின் சிறுமை;
தம்குறிப் பினவே தொடையின் பெருமை.' 57

### வெண் செந்துறை

'ஈரடி இயைந்தது குறள்வெண் பாவே;
ஒத்த அடித்தே செந்துறை வெள்ளை.' 58

### கூன் ஆமாறு

'தனியே,
அடிமுதல் பொருள்பெற வருவது தனிச்சொல்; அஃது
இறுதியும் வஞ்சியுள் நடக்கும் என்ப.' 59

### குறிப்பிசை - வகையுளி

'எழுத்துஅல் கிளவியின் அசையொடு சீர்நிறைத்து
ஒழுக்கலும் அடியொடு தளைசிதை யாமை
வழுக்கில் வகையுளி சேர்த்தலும் உரித்தே.' 60

### பாப்போலி

'ஒத்த அடியினும் ஒவ்வா விகற்பினும்
மிக்கடி வரினும் அப்பாற் படுமே.' 61

அடிவரையறை இல்லன

'செயிர்தீர் செய்யுள் தெரியுங் காலை
அடியின் நீட்டத்து அழகுபட்டு இயலும்;
ஓரடி யானும் ஒரே விடத்து இயலும்.' 62

'அவைதாம்,
பாட்டுஉரை நூலே மந்திரம் பிசியே
முதுசொல் அங்கதம் வாழ்த்தொடு பிறவும்
ஆக்கின என்ப அறிந்திசி னோரே.' 63

## 2. காக்கைபாடினியம்

பாயிரம்

'வடக்கும் தெற்கும் குணக்கும் குடக்கும்
வேங்கடம் குமரி தீம்புனல் பௌவமென்று
இந்நான்கு எல்லை அகவயின் கிடந்த
நூலதின் முறையே வாலிதின் விரிப்பின்' ... ... ... 1

அசைக்கு உறுப்பாவன

'குறில் நெடில் அளபெடை உயிர்உறுப்பு உயிர்மெய்
வலிய மெலிய இடைமையொடு ஆய்தம்
இஉ ஐஎன் மூன்றன் குறுக்கமோடு
அப்பதின் மூன்றும் அசைக்குஉறுப்பு ஆகும்.' 2

அசைவகைகள்

'தனிஅசை என்று இணைஅசை என்று
இரண்டுஎன மொழிமனர் இயல்புஉணர்ந் தோரே.' 3

அசை ஆகாதன

'நெடிலொடு நெடிலும் நெடிலொடு குறிலும்
இணைஅசை ஆகுதல் இலஎன மொழிப.' 4

இயற்சீர்

'ஓரோஒ அசையினால் ஆகிய ஈரசைச்
சீஇர் இயற்சீர் என்னப் படுமே.'
'இயற்சீர் எல்லாம் ஆசிரிய உரிச்சீர்.' 5

### மூவசைச்சீர்

'மூவசை யான்முடிவு எய்திய எட்டினுள்
அந்தம் தனிச்சீர் நான்குஅசை வெள்ளை ;
அல்லன வஞ்சிக்கிழமை வகைப்பட் டனவே.' 6

### நாலசைச்சீரும் ஓரசைச்சீரும்

'நாலசை யானும் நடைபெறும்; ஓரசைச்
சீர்நிலை எய்தலும் சிலஇடத்து உளவே.' 7

### ஆசிரியத்தளை

'இயற்சீர் இரண்டும் தலைப்பெயல் தம்முள்
விகற்பம் இலவாய் விரவி நடப்பின்
அதற்பெயர் ஆசிரி யத்தளை ஆகும்.' 8

### வெண்டளை

'இயற்சீர் இரண்டு தலைப்பெயல் தம்முள்
விகற்ப நடையது வெண்தளை ஆகும்.' 9

'உரிச்சீர் அதனுள் உரைத்தமை அன்றிக்
கலக்கும் தளைஎனக் கண்டிசி னோரே.' 10

### கலித்தளை

'வெண்சீர் இறுதிக்கு இணைஅசை பின்வரக்
கண்டன எல்லாம் கலித்தளை ஆகும்.' 11

### வஞ்சித்தளை

'தன்சீர் இரண்டும் தலைப்பெயல் தம்முள்ஒத்து
ஒன்றினும் ஒன்றாது ஒழுகினும் வஞ்சியின்
பந்தம் எனப்பெயர் பகரப் படுமே.' 12

### நாலசைச்சீர் தளைபெறுதல்

'உரைச்சீர் தளைவகைக்கு எய்தும் பெயரது
நிரைநேர் இறுதி நாலசைச் சீர்கள்.' 13

### ஓரசைச்சீர் தளைபெறுதல்

'ஓரசைப் பொதுச்சீர் தளைவகை தெரியின்
ஈரசைச் சீர்த்தளைக்கு எய்தும் என்ப.' 14

'ஓரசைப் பொதுச்சீர் ஒன்றா தாயினும்
வெண்டளை; ஒன்றியது ஆசிரியத் தளையே.' 15

### அடிவகை

'குறள்சிந்து அளவு நெடில்கழி நெடில்என்று
ஐவகை மரபின அடிவகை தாமே.' 16

### அடிகளின் பெயர்விளக்கம்

'இருசீர் குறள்அடி ; சிந்துஅடி முச்சீர் ;
அளவுஅடி நாற்சீர் ; அறுசீர் அதனின்
இழிவு நெடில்அடி என்றிசி னோரே.' 17

### வஞ்சிப்பாவின் அடி

'சிந்தடி குறளடிஎன்று ஆயிரு திறமும்
வஞ்சிக் கிழமை வகைப்பட் டனவே.' 18

### ஏனைய பாக்களின் அடி

'ஆசிரியம் வெண்பாக் கலியொடு மும்மையும்
நாற்சீர் அடியான் நடைபெற் றனவே.' 19

'சிந்தும் குறளும் வருதலும் அவ்வழி
உண்டுஎன்று அறைய உணர்ந்திசி னோரே.' 20

### பா இனங்களின் அடி

'விருத்தம் துறையொடு தாழிசை என்று
இசைச்செயுள் எல்லா அடியினும் நடக்கும்.' 21

### தொடை இலக்கணம்

'தொடைஎனப் படுவது அடைவகை தெரியின்
எழுத்தொடு சொல்பொருள் என்றுஇவை மூன்றின்
நிரல்பட வந்த நெறிமைத்து ஆகி
அடியொடு அடியிடை யாப்புற நிற்கும்
முடிவினது என்ப முழுதுஉணர்ந் தோரே.' 22

## தொடையால் பெயரிடுதல்

'தொடைஅடி உள்பல வந்தால் எழுவாய்
உடையத னல்பெயர் ஒட்டப் படுமே.' 23

## முரண்தொடை

'மொழியினும் பொருளினும் முரணத் தொடுப்பின்
இரணத் தொடைஎன்று எய்தும் பெயரே.' 24

## செந்தொடை

'செம்பகை இல்லா மரபின தாம்தம்முள்
ஒன்ற நிலையது செந்தொடை ஆகும்.' 25

## பாவினம்

'வெண்பா விருத்தம் துறையொடு தாழிசை
என்றுஇம் முறையின் எண்ணிய மும்மையும்
தம்தம் பெயரான் தழுவும் பெயரே.' 26

## வெண்பா

'சிறந்துஉயர் செப்பல் இசையன ஆகி
மறைந்த உறுப்பின் அகறல் இன்றி
விளங்கக் கிடப்பது வெண்பா ஆகும்.' 27

'சிந்தடி யானே இறுதலும் அவ்வழி
அந்தம் அசைச்சீர் வருதலும் யாப்புற
வந்தது வெள்ளை வழக்கியல் தானே.' 28

## குறள்வெண்பா

'தொடைஒன்று அடிஇரண்டு ஆகி வருமேல்
குறளின் பெயர்க்கொடை கொள்ளப் படுமே.' 29

## நேரிசை வெண்பா

'இரண்டாம் அடியின் ஈறுஒரூஉ எய்தி
முரண்ட எதுகையது ஆகியும் ஆகாது
இரண்டு துணியாய் இடைதனில் போழ்ந்து
நிரந்துஅடி நான்கின நேரிசை வெண்பா.' 30

### இன்னிசை வெண்பா

'தனிச்சொல் தழுவல ஆகி விகற்பம்
பலபல தோன்றினும் ஒன்றே வரினும்
இதற்பெயர் இன்னிசை என்றிசி னோரே.' 31

### பஃறொடை வெண்பா

'தொடைஅடி இத்துணை என்னும் வழக்கம்
உடையதை அன்றி உறுப்புஅழிவு இல்லா
நடையது பஃறொடை நாமம் கொளலே.' 32

### வெண்டாழிசை

'தன்பா அடித்தொகை மூன்றாய் இறும்அடி
வெண்பாப் புரைய இறுவது வெள்ளையின்
தன்பா இனங்களின் தாழிசை ஆகும்.' 33

### வெண்டுறை

'ஐந்துஆறு அடியின் நடந்தவும் அந்தடி
ஒன்றும் இரண்டும் ஒழிசீர்ப் படுநவும்
வெண்டுறை நாமம் விதிக்கப் படுமே.' 34

### வெளிவிருத்தம்

'ஒருமூன்று ஒருநான்கு அடிஅடி தோறும்
தனிச்சொல் தழுவி நடப்பன வெள்ளை
விருத்தம் எனப்பெயர் வேண்டப் படுமே.' 35

### இணைக்குறள் ஆசிரியம்

'அளவுஅடி அந்தமும் ஆதியும் ஆகி
குறள்அடி சிந்துஅடி என்றா இரண்டும்
இடைவர நிற்பது இணைக்குறள் ஆகும்.' 36

### அடிமறி மண்டிலம்

'உரைப்போர் குறிப்பின் உணர்வகை அன்றி
இடைப்பால் முதல்ஈறு என்றுஇவை தம்முள்
மதிக்கப்படாதன மண்டில யாப்பே.' 37

### ஆசிரியத்துறை

'அடித்தொகை நான்குபெற்று அந்தத் தொடைமேல்
கிடப்பது நாற்சீர்க் கிழமையது ஆகி
எடுத்துஉரை பெற்ற இருநெடில் ஈற்றின்
அடிப்பெறின் ஆசிரி யத்துறை ஆகும்.' 38

'அளவடி ஐஞ்சீர் நெடிலடி தம்முள்
உறழத் தோன்றி ஒத்த தொடையாய்
விளைவதும் அப்பெயர் வேண்டப் படுமே.' 39

### ஆசிரிய விருத்தம்

'அறுசீர் முதலா நெடியவை எல்லாம்
நெறிவயின் திரியா நிலத்தவை நான்காய்
விளைகுவது அப்பா இனத்துள் விருத்தம்.' 40

### கலிப்பா

'வகுத்த உறுப்பின் வழுவுதல் இன்றி
எடுத்துஉயிர் துள்ளல் இசையன ஆதல்
கலிச்சொல் பொருள்எனக் கண்டிசி னோரே.' 41

### கலிப்பாவகை

'வெண்கலி ஒத்தா ழிசைக்கலி கொச்சகம்
என்றுஒரு மூன்றே கலிஎன மொழிப.' 42

### வெண்கலி

'வெண்தளை தன்தளை என்றுஇரு தன்மையின்
வெண்பா இயலது வெண்கலி ஆகும்.' 43

### ஒத்தாழிசைக்கலி

'தரவே தாழிசை தனிச்சொல் சுரிதகம்
எனநான்கு உறுப்பினது ஒத்தா ழிசைக்கலி.' 44

**தரவு**

'தன்னுடை அந்தமும் தாழிசை ஆதியும்
துன்னும் இடத்துத் துணிந்தது போல்இசை
தன்னொடு நிற்றல் தரவிற்கு இயல்பே.' 45

**தாழிசை**

'தத்தமில் ஒத்துத் தரவின் அகப்பட
நிற்பன மூன்றும் நிரந்ததா ழிசையே.' 46

**தனிச்சொல்**

'ஆங்குஎன் கிளவி அடையாத் தொடைபட
நீங்கி நிற்கும் நிலையது தனிச்சொல்.' 47

**சுரிதகம்**

'ஆசிரியம் வெண்பா எனஇவை தம்முள்
ஒன்றாகி அடிஒத்த இறுதி வருவது
சுழியம் எனப்பெயர்ச் சுரிதகம் என்ப.' 48

**அம்போதரங்கம்**

'நீர்த்திரை போல நிரலே முறைமுறை
ஆக்கம் சுருங்கி அசையடி தாழிசை
விட்டிசை விரியத் தொடுத்துச் சுரிதகம்
தாக்கித் தழுவும் தரவினொடு ஏனவும்
யாப்புற்று அமைந்தன அம்போ தரங்கம்.' 49

**கொச்சகம்**

'எருத்தியல் இன்றி இடைநிலை பெற்றும்
இடைநிலை இன்றி எருத்துடைத் தாயும்
எருத்தம் இரட்டித்து இடைநிலை பெற்றும்
இடையது இரட்டித்து எருத்துடைத் தாயும்
இடையும் எருத்தும் இரட்டுற வந்தும்
எருத்தம் இரட்டித்து இடைநிலை ஆறாய்

அடக்கியல் காறும் அமைந்த உறுப்புக்
கிடக்கை முறைமையின் கிழமைய தாயும்
தரவொடு தாழிசை அம்போ தரங்கம்
முடுகியல் போக்கியல் என்றிவை எல்லாம்
முறைதடு மாற மொழிந்தவை இன்றி
இடைநிலை வெண்பாச் சிலபல சேர்ந்து
மற்றும் பிறபிற ஒப்புஉறுப்பு இல்லன
கொச்சகம் என்னும் குறியின ஆகும்.' 50

### கலித்தாழிசை

'அந்தடி மிக்குப் பலசில வாய்அடி
தந்தமில் ஒன்றிய தாழிசை ஆகும்.' 51

### கலித்துறை

'ஐஞ்சீர் முடிவின் அடித்தொகை நான்மையொடு
எஞ்ச முடிந்தன எல்லாம் கலித்துறை.' 52

### கலிவிருத்தம்

'நாலொரு சீரான் நடந்த அடித்தொகை
ஈரிரண்டு ஆகி இயன்றவை யாவும்
காரிகை சான்ற கலிவிருத் தம்மே.' 53

### வஞ்சிப்பா

'தன்தளை பாதம் தனிச்சொல் சுரிதகம்
என்றுஇவை நான்கும் அடுக்கிய தூங்கிசை
வஞ்சி எனப்பெயர் வைக்கப் படுமே.' 54

### வஞ்சித்தாழிசை

'குறள்அடி நான்குஇவை கூடின ஆயின்
முறைமையின் அவ்வகை மூன்றுஅணைந்து ஒன்றி
வருவன வஞ்சித் தாழிசை ஆகும்.' 55

### வஞ்சித்துறை

'ஒன்றினை நான்மை உடைத்தாய்க் குறளடி
வந்தன வஞ்சித் துறைஎனல் ஆகும்.' 56

### அலகிடும் முறையும் வேறுபாடும்

'உயிர்அளபு ஏழும் உரைத்த முறையான்
வரும்எனின் அவ்வியல் வைக்கப் படுமே.' 57

'இஉ இரண்டன் குறுக்கம் தனிதப
நிற்புழி ஒற்றும் நிலைமைய ஆகும்.' 58

'ஐஎன் நெடுஞ்சினை ஆதிஒழித்து அலகு
எய்தும் இணைஅசை என்றிசி னோரே.' 59

'ஆய்தமும் ஒற்றும் அளபுஎழூஉ நிற்புழி
வேறுஅலகு எய்தும் விதியின ஆகும்.' 60

### சீர் மயக்கம்

'இயற்சீர் உரிச்சீர் எனும்இரு சீரும்
மயக்கம் உண்மையின் நால்வகைப் பாவும்
இனத்தின் மூன்றும் இனிதின் ஆகும்.' 61

'உரிச்சீர் விரவ லாயும் இயற்சீர்
நடக்குந ஆசிரி யத்தொடு வெள்ளை;
அந்தம் கனியா இயற்சீர் கலியொடு
வஞ்சி மருங்கின் மயங்குதல் இலவே.' 62

'நாலசை யான்நடை பெற்றன வஞ்சியுள்
ஈரொன்று இணைதலும் ஏனுழி ஒன்றுசென்று
வஞ்சிக்கு உரைத்தன ஆதலும்
ஆகுந என்ப அறிந்திசி னோரே.' 63

### ஆசிரியப்பாவுக்கு ஆகாத சீர்கள்

'இணைநடு இயலா வஞ்சி உரிச்சீர்
இணைஉள ஆசிரி யத்தன ஆகா.' 64

## பாக்களின் சிறுமை பெருமை

'ஒருதொடை ஈரடி வெண்பாச் சிறுமை.' 65

'இருதொடை மூன்றும் அடியின் இழிந்து
வருவன ஆசிரியம் இல்என மொழிப.' 66

'வஞ்சியும் அப்பா வழக்கின ஆகும்.' 67

'நான்காம் அடியினும் மூன்றும் தொடையினும்
தாழ்ந்து கலிப்பாத் தழுவுதல் இலவே.' 68

'உரைப்போர் குறிப்பின அன்றிப் பெருமை
வரைத்துஇத் துணைஎன வைத்துஉரை இல்என்று
உரைத்தனர் மாதோ உணர்ந்திசி னோரே.' 69

## வெண்செந்துறை

'அந்தம் குறையாது அடிஇரண்டு ஆம்எனின்
செந்துறை என்னும் சிறப்பிற்று ஆகும்.' 70

## கூன்ஆமாறும் வருமிடமும்

'உறுப்பில் குறைந்தவும் பாக்கள் மயங்கியும்
மறுக்கப் படாத மரபின ஆகியும்
எழுவாய் இடமா அடிப்பொருள் எல்லாம்
தழுவ நடப்பது தான்தனிச் சொல்லே.' 71

'வஞ்சி மருங்கின் இறுதியும் ஆம்எனக்
கண்டனர் மாதோ கடன்அறிந் தோரே.' 72

## புறனடை

'உணர்த்திய பாவினுள் ஒத்த அடிகள்
வகுத்துஉரை பெற்றியும் அன்றிப் பிறவும்
நடக்குந ஆன்றோர் நடைவகை உள்ளே.' 73

## 3. சிறுகாக்கைபாடினியம்

### தற்சிறப்புப்பாயிரம்

'வடதிசை மருங்கின் வடுகுவரம் பாகத்
தென்திசை உள்ளிட்டு எஞ்சிய மூன்றும்
வரைமருள் புணரியொடு கரைபொருது கிடந்த
நாட்டுஇயல் வழக்கம் நான்மையின் நெறிக்கண்
யாப்பினது இலக்கணம் அறைகுவன் முறையே.' 1

### அசைக்கு உறுப்பாவன

'குறிய நெடிய உயிர்உறுப்பு உயிர்மெய்
வலிய மெலிய இடைமை அளபெடை
மூஉயிர்க் குறுக்கமும் ஆம்அசைக்கு எழுத்தே.' 2

### அசைகள்

'தனிநெடில் ஆகியும் தனிக்குறில் ஆகியும்
ஒற்றொடு வருவது நேர்அசை ஆகும்.' 3

'குறில்இணை ஆகியும் குறில்நெடில் ஆகியும்
ஒற்றொடு வந்தும் நிரைஅசை ஆகும்.' 4

'இடையும் கடையும் இணையும்ஐ எழுத்தே.' 5

### சீர்கள்

'ஈரசை ஆகிய மூவகைச் சீர்தாம்
நேர்இறின் வெள்ளை; நிரைஇறின் வஞ்சி.' 6

### வெண்தளை

'இயற்சீர் ஒன்று நிலையது வெண்தளை;
உரிச்சீர் அதனில் ஒன்றுவது இயல்பே.' 7

### ஆசிரியத்தளை

'ஈரசை இயற்சீர் ஒன்றிய நிலைமை
ஆசிரி யத்தளை ஆகும் என்ப.' 8

### கலித்தளை

வெண்சீர் இறுதி நிரைவரின் கலித்தளை.' 9

### வஞ்சித்தளை

'வஞ்சி வகைமை வரம்பின்று ஆகும்.' 10

### பாக்களின் அடிகளுக்குச் சீர் வரையறை

'வஞ்சி அல்லா மூவகைப் பாவும்
எஞ்சுதல் இலவே நாற்சீர் அடிவகை.' 11

### தொடை

'முதல்எழுத்து ஒன்றி முடிவது மோனை;
ஏனையது ஒன்றின் எதுகைத் தொடையே.' 12

'உறுப்பின் ஒன்றின் விகற்பமும் அப்பால்
நெறிப்பட வந்தன நேரப் படுமே.' 13

### தொடையால் பெயரிடுதல்

'பல்வகைத் தொடைஒரு பாவினுள் தொடுப்பின்
சொல்லிய முதல்தொடை சொல்லினர் கொளலே.' 14

### அளபெடைத்தொடை

'சொல்லிசை அளபுஎழ நிற்பது அளபெடை.' 15

### செந்தொடை

'ஒன்றிய தொடையொடும் விகற்பம் தன்னொடும்
ஒன்றாது கிடப்பது செந்தொடை ஆகும்.' 16

### பாவும் பாவினமும்

'பாவே தாழிசை துறையே விருத்தம்என
நால்வகைப் பாவும் நானான்கு ஆகும்.' 17

### இன்னிசை வெண்பா

'ஒன்றும் பலவும் விகற்பாய்த் தனிச்சொல்
இன்றி வருவன இன்னிசை வெண்பா.' 18

### பஃறொடை வெண்பா

'தொடைபல தொடுப்பன பஃறொடை வெண்பா.' 19

### வெள்ளொத்தாழிசை

'அடிமூன்று ஆகி வெண்பாப் போல
இறுவன மூன்றே வெள்ளொத் தாழிசை.' 20

### வெளி விருத்தம்

'நான்கும் மூன்றும் அடிதொறும் தனிச்சொல்
தோன்ற வருவன வெளிவிருத் தம்மே.' 21

### நேரிசை ஆசிரியம்

'இறுசீர் அடிமேல் ஒருசீர் குறைஅடி
பெறுவன நேரிசை ஆசிரி யம்மே.' 22

### இணைக்குறள் ஆசிரியம்

'இடைஇடை சீர்தபின் இணைக்குறள் ஆகும்.' 23

### அடிமறி மண்டில ஆசிரியம்

'கொண்ட அடிமுத லாய்ஒத்து இறுவது
மண்டில யாப்புஎன வகுத்தனர் புலவர்.' 24

### ஆசிரிய ஒத்தாழிசை

'அடிமூன்று ஒத்துஇறின் ஒத்தா ழிசையே.' 25

### ஆசிரிய விருத்தம்

'அறுசீர் எழுசீர் அடிமிக வருஉம்
முறையே நாலடி விருத்தம் ஆகும்.' 26

### நேரிசை ஒத்தாழிசைக்கலி

'தரவே தாழிசை தனிச்சொல் சுரிதகம்
வருவன எல்லாம் தாழிசைக் கலியே.' 27

### அம்போதரங்க ஒத்தாழிசைக்கலி

'சேர்த்திய தரவொடு தாழிசைப் பின்னர்
நீர்த்திரை போல நெறிமையின் சுருங்கி
மூவகை என்னும் முறைமையின் வழாஅ
அளவின எல்லாம் அம்போ தரங்கம்.' 28

### கலித்தாழிசை

'அந்த அடிமிக்கு அல்லா அடியே
தந்தமுள் ஒப்பன கலித்தா ழிசையே.' 29

### கலிவிருத்தம்

'நாற்சீர் நாலடி கலிவிருத் தம்மே.' 30

### வஞ்சித்தாழிசையும் துறையும்

'எஞ்சா இருசீர் நாலடி மூன்றுஎனின்
வஞ்சித் தாழிசை; தனிவரின் துறையே.' 31

### வஞ்சி விருத்தம்

'மூச்சீர் நாலடி ஒத்தன வரினே
வஞ்சி விருத்தம் என்றனர் கொளலே.' 32

### ஆசிரியப்பாவிற்கு ஏற்கும் வஞ்சிச்சீர்கள்

'நடுவுநேர் இயலா வஞ்சி உரிச்சீர்
உரிமை உடைய ஆசிரியத் துள்ளே.' 33

### கூன் ஆமாறு

'தனிச்சொல் என்பது அடிமுதல் பொருளொடு
தனித்தனி நடக்கும்; வஞ்சியுள் ஈறே.' 34

## 4. நத்தத்தம்

### யாப்பின் இலக்கணம்

'யாப்பு எனப்படுவது யாதுஎன வினவின்
தூக்கும் தொடையும் அடியும்இம் மூன்றும்
நோக்கிற்று என்ப நுணங்கி யோரே.' 1

### நேர் அசை

'தனிநெடில் தனிக்குறில் ஒற்றொடு வருதல்என்று
அந்நால் வகைத்தே நேரசை என்ப. 2

### நிரை அசை

'குறில்இணை குறில்நெடில் ஒற்றொடு வருதல்என்று
அந்நால் வகைத்தே நிரைஅசை என்ப.' 3

### அசை சீர்ஆமாறு

'சீர்ஆகு இடனும் உரியசை உடைய
நேர்ஈற்று இயற்சீர் அல்வழி யான.' 4

### நேர்அடி இலக்கணம்

'நாற்சீர் கொண்டது நேர்அடி ஆம்என்ப;
தூக்கொடும் தொடையொடும் சிவணும் என்ப.' 5

### நேரடிபெறும் பாக்கள்

'ஆசிரி யப்பா வெண்பாக் கலிஎன
மூவகைப் பாவும் நேரடிக்கு உரிய.' 6

### முரண்தொடை

'பொருளினும் மொழியினும் முரணுதல் முரணே.' 7

### இயைபுத்தொடை

'இறுசீர் ஒன்றின் இயைபுஎனப் படுமே.' 8

### அளபெடைத் தொடை

'அளபெடைத் தொடைக்கே அளபெடை ஒன்றும்.' 9

### செந்தொடை

'ஒன்று தாவது செந்தொடைக்கு இயல்பே.' 10

### இரட்டைத் தொடை

'சீர்முழுதும் ஒன்றின் இரட்டை ஆகும்.' 11

### தொடையாற் பெயரிடுதல்

'முதல்சீர்த் தோற்றம் அல்லது ஏனை
விகற்பம் கொள்ளார் அடிஇறந்து வரினே.' 12

### பாவுக்குச் சீர் உரிமை

'நேர்ஈற்று இயற்சீர் கலிவயின் இலவே;
வஞ்சி மருங்கினும் இறுதியின் இலவே.' 13

### பா மயக்கம்

'வஞ்சி விரவினும் ஆசிரியம் உரித்தே;
வெண்பா விரவினும் கடிவரை இன்றே.'

### பாக்களின் அடிவரையறை

'ஆசிரியப் பாவின் சிறுமைக்கு எல்லை
மூவடி ஆகும் பெருமை ஆயிரம்.' 15

'ஈரடி முதலா ஒன்றுதலை சிறந்து
ஏழடி காறும் வெண்பாட்டு உரிய.' 16

'வாயுறை வாழ்த்தே செவியறி வுறாஉவே
கைக்கிளை மயக்கம் கலிவெண் பாட்டே
தத்தம் குறிப்பின் அளவுஎன மொழிப.' 17

### மோனை

'முதல்எழுத்து ஒன்றின் மோனை ஆகும்.' 18

### எதுகை

'அஃதுஒழித்து ஒன்றின் எதுகை ஆகும்.' 19

### கிளை எழுத்துக்கள்

'ஆயிரு தொடைக்கும் கிளைஎழுத்து உரிய.' 20

### கூன் ஆமாறு

'தானே அடிமுதல் பொருள்பெற வருவது
கூன்என மொழிப குறிஉணர்ந் தோரே.' 21

'வஞ்சி இறுதியும் வரையார் என்ப.' 22

### வகையுளி

'குன்றியும் தோன்றியும் பிறிதுபிறிது ஆகியும்
ஒன்றிய மருங்கினும் ஒருபுடை மகாரம்
அசையும் சீரும் அடியும் எல்லாம்
வகையுளி சேர்த்தல் வல்லோர் மேற்றே.' 23

### அடிவரையறை இல்லன

'உரையும் நூலும் அடிஇன்றி நடப்பினும்
வரைவுஇலை என்ப வயங்கி யோரே;
வாய்மொழி பிசியே முதுசொல் என்றுங்கு
ஆம்முறை மூன்றும் அன்ன என்ப.' 24

## 5. பல்காயம்

### யாப்பு உறுப்புக்கள்

'இமிழ்கடல் வரைப்பின் எல்லையின் வழாஅத்
தமிழ்இயல் வரைப்பின் தாம்இனிது விளங்க
யாப்பியல் தானே யாப்புற விரிப்பின்
எழுத்துஅசை சீர்தளை அடிதொடை தூக்கோடு
இழுக்கா மரபின் இவற்றொடு பிறவும்
ஒழுக்கல் வேண்டும் உணர்ந்திசி னோரே.' 1

### அசைகள்

'குறில்நெடில் தனியாய் நின்றும்ஒற்று அடுத்தும்
குறில்இணை குறில்நெடில் தனித்தும்ஒற்று அடுத்தும்
நடைபெறும் அசைநேர் நிரைஅசை நால்இரண்டே.' 2

### சீர்

'அசையே இரண்டும் மூன்றும் தத்தமில்
இசைய வருவன சீர்எனப் படுமே.' 3

'நாலசை யானும் நடைபெறும்; ஓர்அசை
சீர்நிலை எய்தலும் சிலஇடத்து உளவே.' 4

'நாலசைச் சீரும் ஒரோவிடத்து இயலும்
பாவொடு பாவினம் பயிலல் இன்றி.' 5

### நேரடி

'ஆசிரி யத்தொடு வெள்ளையும் கலியும்
நேரடி தன்னான் நிலைபெற நிற்கும்.' 6

### எதுகை

'முதல்எழுத்து அளவுஒத்து அயல்எழுத்து ஒன்றுவது
எதுகை அதன்வழி இயையவும் பெறுமே. 7

### மோனை எதுகை விரி

'முதல்எழுத்து ஒன்றுவது மோனை; எதுகை
முதல்எழுத்து அளவொடு ஒத்தது முதலா
அஃதுஒழித்து ஒன்றில் ஆகும் என்ப.' 8

'இவ்விரு தொடைக்கும் கிளைஎழுத்து உரிய.' 9

### முரண் தொடை

'சொல்லினும் பொருளினும் மாறுகோள் முரணே.' 10

### இயைபுத்தொடை

'இயைபே இறுசீர் ஒன்றும் என்ப.' 11

### அளபெடைத்தொடை

'அளபெடைத் தொடைக்கே அளபெடை ஆகும்.' 12

### செந்தொடை

'அசையினும் சீரினும் இசையினும் எல்லாம்
இசையா தாவது செந்தொடை ஆகும்.' 13

### இரட்டைத்தொடை

'முழுவதின் ஒன்றின் இரட்டை ஆகும்.' 14

### தொடையால் பெயரிடுதல்

'விகற்பம் கொள்ளாது ஓசையின் அமைதியும்
முதற்கண் அடிவரின் முடிவது ஆகும்.' 15

### விட்டிசை

'தற்சுட்டு ஏவல் குறிப்புஇவை அல்வழி
முற்றுத் தனிக்குறில் முதல்அசை ஆகா.' 16

### சீர் மயக்கம்

'ஓசையின் ஒன்றி வரினும்வெண் சீரும்
ஆசிரிய அடியின் குறுகும் என்ப.' 17

'அதனுள் தன்சீர் வெண்சீர் ஒருங்கு
புகலின் கலியுள் பொருந்தும் என்ப.' 18

'வஞ்சியுள் ஆயின் எஞ்சுதல் இலவே.' 19

'இயற்சீர் இறுதி நேர்உற்ற காலை
வஞ்சி யுள்ளும் வந்த தாகா ;
ஆயினும் ஒரோவிடத்து ஆகும் என்ப.' 20

### அடிமயக்கம்

'வஞ்சி விரவல் ஆசிரியம் உடைத்தே ;
வெண்பா விரவினும் கடிவரை இன்றே.' 21

### அடிவரையறை

'ஆயிரம் இறுதி மூவடி இழிபா
ஆசிரியப் பாட்டின் அடித்தொகை அறிப.' 22

'ஈரடி முதலா ஏழடி காறும்
திரிபில வெள்ளைக்கு அடித்தொகை தானே.' 23

### கூன் ஆமாறு

'அடியினின் பொருளைத் தான்இனிது கொண்டு
முடிய நிற்பது கூன்என மொழிப.' 24

'வஞ்சி இறுதியும் ஆகும் அதுவே;
அசைகூன் ஆகும் என்மனர் புலவர்.' 25

### அடிவரையறை இல்லன

'உரையொடு நூல்இவை அடிஇல நடப்பினும்
வரைவில என்ப வாய்மொழிப் புலவர்;
மொழிபிசி முதுசொல் மூன்றும் அன்ன.' 26

## 6. மயேச்சுரம்

### நேர் அசை

'நெடிலும் குறிலும் ஒற்றொடு வருதலும்
கடிவரை இலவே நேரசைத் தோற்றம்.' 1

### நிரையசை

'குறிலும் நெடிலும் குறில்முன் நிற்பவும்
நெறியின்ஒற்று அடுத்தும் நிரைஅசை ஆகும்.' 2

### நேர்புஅசை நிரைபுஅசை

'நேர்நிரை நேர்பு நிரையென நான்கும்
மேவ ஓடிய விடுவா ரும்உளர்.' 3

'நேர்நிரை நேர்பு நிரைபென நான்கும்
ஆட்டுருப் போல ஒருவிரல் நேரே.' 4

'விரல்இடை யிட்டன அசைச்சீர் நாலசை
விரல்வரை யிடையினும் மானம் இல்லை.' 5

'விரல்இடை யிட்டன வாடரு வெடிவரின்
நிரல்பட எழுதி அலகு பெறுமே.' 6

### சீர்வகை

'இயற்சீர் உரிச்சீர் பொதுச்சீர் என்னும்
நிகழ்ச்சிய என்ப நின்ற மூன்றும்.' 7

'நேரும் நிரையும் சீராய் வருதலும்
சீரும் தளையும் சிதைவழிக் கொளலும்
யாவரும் உரைப்பர் யாவகைப் பாவினும்.' 8

### ஆசிரியத்தளை

ஈரசை இயற்சீர் ஒன்றியது எல்லாம்
ஆசிரி யத்தளை என்மனார் புலவர்.' 9

### வெண்டளை

'இயற்சீர் ஒன்று நிலையது வெண்தளை ;
உரிச்சீர் அதனுள் ஒன்றுதல் இயல்பே.' 10

### இயற்சீர்த்தளைகள்

'நேரும் நிரையுமாம் இயற்சீர் ஒன்றின்
யாவரும் அறிவர் ஆசிரி யத்தளை.' 11

'வேறுபட வரின்அது வெண்தளை ; வெண்சீர்
ஆறறி புலவர்க்கு ஒன்றினும் அதுவே.' 12

### கலித்தளை

'வெண்சீர்ப் பின்னர் நிரைவரு காலைக்
கண்டனர் புலவர் கலித்தளை யாக.' 13

### வஞ்சித்தளை

'வஞ்சி உரிச்சீர் வந்தன வழிமுறை
எஞ்சிய வரினும் வஞ்சித் தளையே.' 15

### தொடை

'அடுத்த அடியிரண்டு யாவகைப் பாவினும்
தொடுத்து வழங்கலின் தொடைஎனப் படுமே.' 14

### வஞ்சிப்பாவின் அடி

'இருசீர் அடியும் முச்சீர் அடியும்
வருதல் வேண்டும் வஞ்சி உள்ளே.' 16

### ஏனைய பாக்களின் அடி

'வஞ்சி,
அல்லாப் பாவினுள் அடிவகை தெரியின்
எல்லாம் நாற்சீர்; அல்லடி இயலா.' 17

'இறுதியும் அயலும் இடையும் முச்சீர்
பெறுதியும் வரையார் வெள்ளைமுதல் மூன்றும்.' 18

### முரண்தொடை

'பொருளினும் சொல்லினும் முரணத் தொடுப்பின்
முரண்என மொழிப முந்தை யோரே.' 19

### அளபெடைத்தொடை

அளபுஎழுந்து யாப்பின் அஃது அளபெடைத் தொடையே.' 20

### இரட்டைத்தொடை

'ஒருசீர் அடிமுழுதும் வருவது இரட்டை.' 21

### பாவினம்

'ஒத்தா ழிசைதுறை விருத்தம் எனப்பெயர்
வைத்தார் பாவினம் என்ன வகுத்தே.' 22

### வெள்ளொத்தாழிசை

'ஈரடி முக்கால் இசைகொள நடந்து
மூன்றுஉடன் அடுக்கித் தோன்றின்ஒத் தாழிசை.' 23

### வெண்டுறை

'பெற்றஅடி ஐந்தினும் பிறவினும் பாட்டாய்
இற்ற அடியும் ஈற்றுஅயல் அடியும்
ஒன்றும் இரண்டும் நின்ற அதன்சீர்
கண்டன குறையின் வெண்டுறை ஆகும்.' 24

### வெளிவிருத்தம்

'மூவடி ஆகியும் நாலடி ஆகியும்
பாவடி வீழ்ந்து பாடலுள் நயந்தும்
கடிவரைவு இல்லா அடிதொறும் தனிச்சொல்
திருத்தகு நிலைய விருத்தம் ஆகும். 25

### ஆசிரியப்பா

'இயற்சீர்த்து ஆகியும் அயற்சீர் விரவியும்
தன்தளை தழுவியும் பிறதளை தட்டும்
அகவல் ஓசையது ஆசிரி யம்மே.' 26

### ஆசிரியப்பாவின் இறுதி

'ஏ–என்று இறுவது ஆசிரியத்து இயல்பே
ஓ–ஆ இறுதியும் உரியஆ சிரியம்.' 27

'நின்றது ஆதி நிலைமண் டிலத்துள்
என்றும் என்என்று இறுதிவரைவு இன்றே.' 28

'அல்லா ஒற்றும் அடிவரின் இறுதி
நில்லா அல்ல நிற்பன வரையார்.' 29

### ஆசிரியப்பா வகை

'ஈற்றுஅயல் குறைந்த நேரிசை; இணையாம்
ஏற்ற அடியின இடைபல குறைந்தன.' 30

'ஒத்த அடியின நிலைமண் டிலமே.' 31

'எவ்வடி யானும் முதல்நடுவு இறுதி
அவ்வடி பொருள்கொளின் மண்டில யாப்பே.' 32

### நிலைமண்டிலத்தின் இறுதி

'என்என் அசைச்சொலும் பிறவும் ஒன்றித்
துன்னவும் பெறூஉம் நிலைமண் டிலமே.' 33

'என்என்று இறுதல் வரைநிலை இன்றே;
அல்லா ஒன்றினும் அதனினும் இறுதி
நில்லா அல்ல நிற்பன வரையார்.' 34

### ஆசிரிய ஒத்தாழிசை

'ஒத்த ஒருபொருள் மூவடி முடியின்அஃது
ஒத்தா ழிசையாம் உடன்மூன்று அடுக்கின்.' 35

### ஆசிரியத்துறை

'எண்சீர் அடிஈற்று அயலடி குறைநவும்
ஐஞ்சீர் அடியினும் பிறவினும் இடைஒன்ற
வந்த தொடையாய் அடிநான்கு ஆகி
உறழக் குறைநவும் துறைஎனப் படுமே. 36

### ஆசிரிய விருத்தம்

'ஆறு முதலா எண்சீர் காறும்
கூறும் நான்கடி ஆசிரிய விருத்தம்.' 37

### கலிப்பா

'சீரின் கிளந்த தன்தளை தழுவி
நேர்ஈற்று இயற்சீர் நேரா தாகித்
துள்ளல் ஓசையின் தள்ளா தாகி
ஓதப் பட்ட உறுப்புவேறு பலவாய்
ஏதம் இல்லன கலிஎனப் படுமே.' 38

### கலிப்பாவகை

'ஒத்தா ழிசைக்கலி வெண்கலி கொச்சகம்
முத்திறத்து அடங்கும் எல்லாக் கலியும்.' 39

### ஒத்தாழிசைக்கலி

‘தரவுஒன் றாகித் தாழிசை மூன்றாய்த்
தனிச்சொல் இடைகிடந்து சுரிதகம் தழுவ
வைத்த மரபினது ஒத்தா ழிசைக்கலி.’ 40

### சுரிதகம்

‘தரவின் அளவின் சுரிதகம் அயற்பா
விரவும் என்பர் ஆசிரியம் வெள்ளை.’ 41

### வண்ணகம்

‘வண்ணகத்து இயற்கை திண்ணிதின் கிளப்பின்
தரவொடு தாழிசை தலைஅளவு எய்திப்
பேரெண் இட்ட எண்ணுடைத் தாகிச்
சிற்றெண் வழியா அராகஅடி நான்கு
கீழ்அளவு ஆகப் பேர்அளவு எட்டாச்
சீர்வகை நான்கு முதல்பதின் மூன்றா
நேரப் பட்ட இடைநடு எனைத்தும்
சீர்வகை முறைமையின் அராகம் பெற்று
அம்போ தரங்கத்து அராகஅடி இன்றி
மடக்கடி மேலே முச்சீர் எய்திக்
குறில்இணை பயின்ற அசைமிசை முடுகி
அடுக்கிசை முடுகியல் அராகம் என்னும்
உடைப்பெயர் மூன்றிற்கும் உரிமை எய்தி
விண்ணோர் விழுப்பமும் வேந்தரது புகழும்
வண்ணித்து வருதலின் வண்ணகம் என்ப.’ 42

‘அந்தாதித் தொடையினும் அடிநடை உடைமையும்
முந்தையோர் கண்ட முறைமை என்ப.’ 43

### வெண்கலி

‘கலிஒலி கொண்டு தன்தளை விரவா
இறும்அடி வரினே வெண்கலி ஆகும்.’ 44

### ஒருசார் வெண்கலி

'தளைகலி தட்டன தன்சீர் வெள்ளை
களையுந இன்றிக் கண்டஅடி குறையுந
விரவர வில்லா வெண்கலி ஆகும்.' 45

### கொச்சகக்கலி

'தரவே தரவிணை தாழிசை சிலபல
வரன்முறை பிறழ அயற்பா மயங்கியும்
தனிச்சொல் பலவாய் இடைஇடை நடந்தவும்
ஒத்தா ழிசைக்கலி உறுப்பில் பிறழ்ந்தவும்
வைத்தவழி முறையால் வண்ணக இறுவாய்
மயங்கி வந்தவும் இயங்குநெறி முறையின்
கொச்சகக் கலிஎனக் கூறினர் புலவர்.' 46

### கலித்தாழிசை

'அடிபல ஆகியும் கடைஅடி சீர்மிகின்
கடிவரை இல்லை கலித்தா ழிசையே.' 47

### கலித்துறை – கலி விருத்தம்

'ஐஞ்சீர் நாற்சீர் அடிநான்கு ஆயின்
எஞ்சாக் கலியின் துறையும் விருத்தமும்.' 48

### வஞ்சிப்பா

'தூங்கல் ஓசை நீங்கா தாகி
நாற்சீர் நிரம்பா அடிஇரண்டு உடைத்தாய்
மேற்சீர் ஓதிய ஐஞ்சீர் பெற்றுச்
சுரிதக ஆசிரியம் உரியதனில் அடுத்து
வத்த தாயின் வஞ்சிப் பாவே.' 49

### வஞ்சித் தாழிசை – துறை

'இருசீர் நாலடி மூன்றிணைந்து ஒன்றி
வருவது வஞ்சித் தாழிசை; தனிநின்று
ஒருபொருள் முடிந்தது துறைஎன மொழிப.' 50

### பாவின் தலைஇடைகடை வகைகள்

'தன்சீர் நிலையின் தளைதபத் தழீஇய
இன்பா என்ப இயல்பு உணர்ந்தோரே.' 51

'ஏனவே விரவின் இடைஎனப் படுமே.' 52

'தான்இடை இல்லது கடைஎனப் படுமே.' 53

### சீர்தளை சிதைவுழி நிகழ்வன

'சீர்தளை சிதைவுழி ஈருயிர்க் குறுக்கமும்
நேர்தல் இலவே உயிர்அள பெடையும்.' 54

### விட்டிசை

'ஏவல் குறிப்பே தற்சுட்டு அல்வழி
யாவையும் தனிக்குறில் முதல்அசை ஆகா.' 55

'சுட்டினும் வினாவினும் உயிர்வரு காலை
ஒட்டி வரூஉம் ஒருசாரும் உளவே.' 56

### சீர்வரையறை

'நேர்ஈற்று இயற்சீர் கலிவயின் நேரா.' 57

'நிரையின் நின்ற நாலசை எல்லாம்
வரைதல் வேண்டும் வஞ்சிஇல் வழியே.' 58

'நிரைநடு இயலா வஞ்சி உரிச்சீர்
வரைதல் வேண்டும் ஆசிரியம் மருங்கின்.' 59

### அடிவரையறை

'ஐஇரு நூறுஅடி ஆசிரியம் வஞ்சிச்
செய்யுள் நடப்பினும் சிறப்புடைத்து என்ப.' 60

'பேணும் பொருள்முடிபே பெருமைக்கு எல்லை,
காணுங் காலைக் கலிஅலங் கடையே.' 61

'கலிஉறுப்பு எல்லாம் கட்டளை உடைமையின்
நெறியின் முறைவழி நிறுத்தல் வேண்டும்.' 62

'கொச்சகக் கலிவயின் குறித்தபொருள் முடிவாம்
தாழிசை பலவும் தழுவுதல் முடிபே.' 63

### பாவின் போலி

'பாவும் இனமும் மேவிய அன்றி
வேறுபட நடந்தும் கூறுபட வரினும்
ஆறுஅறி புலவர் அறிந்தனர் கொளலே.' 64

## கடிய நன்னியம்

### கைக்கிளை ஆசிரியப்பா

'கைக்கிளை ஆசிரியம் வருவது ஆயின்
முச்சீர் எருத்தின் ஞகி முடிவழி
எத்திறத் தானும் ஏகாரத்து இறுமே.' 1

### கைக்கிளை மருட்பா

'இருதலைக் காமம் அன்றிக் கைக்கிளை
ஒருதலைக் காமம் ஆகக் கூறிய
இலக்கண மரபின் இயல்புற நாடின்
அதர்ப்பட மொழிந்தனர் புலவர்; அதுவே
பெறுதி வெண்பா உரித்தாய் மற்றதன்
இறுதி எழுசீர் ஆசிரி யம்மே;
கைக்கிளை மருட்பா ஆகி அருகா
ஆசிரியம் வருவ தாயின் மேவா
முச்சீர் எருத்திற் ஞகி முடிஅடி
எச்சீ ரானும் ஏகாரத்து இறுமே.' 2

## நக்கீரர் அடிநூல்

'ஐஞ்சீர் அடுக்கலும் மண்டிலம் ஆக்கலும்
வெண்பா யாப்பிற்கு உரிய அல்ல.' 1

## சங்க யாப்பு

### நேர் அசை

'நேர்நால் வகையும் நெறிஉறக் கிளப்பின்
நெடிலும் குறிலும் தனியே நிற்றலும்
அவற்றின் முன்னர் ஒற்றொடு நிற்றலும்
இவைதாம் நேர்அசைக்கு எழுத்தின் இயல்பே.' 1

### நிரை அசை

'இணைக்குறில் குறில்நெடில் இணைந்தும் ஒற்றுஅடுத்தும்
நிலைக்குஉரி மரபின் நிரைஅசைக்கு எழுத்தே.' 2

### தொடை வகை

'முந்திய மோனை எதுகை அளபெடை
அந்தம்இல் முரணே செந்தொடை இயைபே
பொழிப்பே ஒரூஉவே இரட்டை என்னும்
இயல்படு தொடைகள் இவைமுத லாகப்
பதின்மூ வாயிரத்து அறுநூறு அன்றியும்
தொண்ணூற்று ஒன்பதுஎன்று எண்ணினர் புலவர்.'

'வல்லொற்றுத் தொடர்ச்சியும் மெல்லொற்றுத் தொடர்ச்சியும்
இடைஒற்றுத் தொடர்ச்சியும் முறைபிறழ்ந்து இயலும்.' 3

### வெண்பா ஓசை

'செப்பல் ஓசை வெண்பா ஆகும்.'

'ஏந்திசைச் செப்பலும் தூங்கிசைச் செப்பலும்
ஒழுகிசைச் செப்பலும் உண்ணும் வெண்பா.'

'வெண்சீர் வெண்டளை யான்வரும் யாப்பை
ஏந்திசைச் செப்பல் என்மனார் புலவர்.'

'இயற்சீர் வெண்டளை யான்வரும் யாப்பைத்
தூங்கிசைச் செப்பல் என்மனார் புலவர்.'

'வெண்சீர் ஒன்றலும் இயற்சீர் விகற்பமும்
ஒன்றிய பாட்டே ஒழுகிசைச் செப்பல்.' 4

### ஆசிரியப்பா

'அகவல் என்பது ஆசிரியப் பாவே. 5

### கலிப்பா வகை

'கொச்சகம் வெண்கலி ஒத்தா ழிசைஎன
முத்திறம் ஆகும் கலியின் பகுதி.' 6

### அடிவரையறை

'ஏழடி இறுதி ஈரடி முதலா
ஏறிய வெள்ளைக்கு இயைந்தன அடியே.'

'மிக்கடி வருவது செய்யுள்கட்கு உரித்தே.'

'மூவடிச் சிறுமை, ஆயிரம் ஆகும்
ஆசிரி யத்தின் பெருமை அளவே.' 7

## நல்லாதம்

### செய்தி வரையறை

'புறநிலை வாயுறை செவியறி வுறூஉவே
அறநிலை வஞ்சியும் கலியும் ஆகாஅ
வெண்பா ஆசிரிய இயலான் வருமே
வஞ்சி கலிஅவற்றுள் இயலா அவற்றுள்
இடைஇரு செய்யுளும் கைக்கிளைப் பாட்டும்
கடைஎழு சீர்இரண்டு அகவியும் வருமே.' 1

## நல்லாறம்

### அறு எழுத்துக்கள்

'அஆ ஐஔ என்றிவை எஞஅ
இஈ எஏ என்றிவை எஞஅ
உஊ ஒஓ என்றிவை எஞஅ
தசமவ ஞநஎனும் என்றிவை எஞஅ
மூந்நால் உயிரும் மூவிரு மெய்யும்
தம்முள் மயங்கினும் தவறுஇன்று என்ப.' 1

### செய்தி வரையறை

'புறநிலை வாயுறை செவிஅறிவு அவையடக்கு
எனஇவை வஞ்சிக் கலிஅவற்று இயலா.' 2

### சீர் அமைப்பு

'உரிஅசைச் சீர்ப்பின் உகரம் நேராய்
திரியும் தளைவகை சேர்த லானே.' 4

## நாலடி நாற்பது

### அசைக்கு உறுப்பாவன

'குறில்உயிர் வல்லெழுத்துக் குற்றுகர ஆதி
குறுகிய ஐஔமவ் வாய்தம் – நெறிமையால்
ஆய்ந்த அசைதொடைதாம் வண்ணங்கட் கெண்முறையா
ஏய்ந்தன அந்நான் கெழுத்து.' 1

'குறினெடில் ஆய்தம் அளபெடை ஐகாரக்
குறில்குற் றிகர வுகரம் – மறுவில்
உயிர்மெய் விராய்மெய்யோ டாறு றெழுத்தும்
செயிர்வன்மை மென்மை சமம்.' 2

### அடி மயக்கம்

'அகப்பா அகவலுள் வஞ்சிசொற் சீரடி யாயிரண்டும்
புகப்பா லனஅல்ல என்பதொல் லோர்கள் புகரில்வஞ்சி
அகப்பாப் பொருளணையா வென்பர் நாவலர் ஆங்கருகிப்
புகப்பான் மையுமொரு சார்புல வாணர் புகன்றனரே.' 3

'ஆசிரியப் பாவின் அயற்பா அடிமயங்கும்;
ஆசிரியம் வெண்பாக் கலிக்கணும்; – ஆசிரியம்
வெண்பாக் கலிவிரவும் வஞ்சிக்கண்; வெண்பாவில்
ஒண்பா அடிவிரவா உற்று.' 4

'சீர்வண்ணம் வெள்ளைக் கலிவிரவும்; வஞ்சியுள்
ஊரும் கலிப்பா சிறுச்சிறிதே; – பாவினுள்
வெண்பா ஒழித்துத் தளைவிரவும்; செய்யுளாம்
வெண்பாக் கலியுள் புகும்.' 5

## பரிமாணம்

### தொடை விகற்பம்

'செந்தொடை இயைபுஇவை அல்லா நான்கும்
முதற்சீர் அடியான் விகற்பம் கொள்ப.' 1

'அவைதாம்,
முதலொடு அயல்கொள் வதுஇணை; அயல்இன்றி
மூன்றும் சீரது பொழிப்பு; இரண்டு இடையிட்டு
இறுதியொடு கொள்வது ஒரூஉ; இறுதிச்
சீர்ஒழித்து ஏனைய ஒன்றின் கூழை;
முதல்ஈறு அமைந்தவற்று இன்மை இருவகைக்
கதுவாய்; முற்றும் நிகழ்வது முற்றே;
முதலோடு எட்டாகும் என்மனார் புலவர்.' 2

## இரட்டை தொடை

'அடிமுழுது ஒருசீர் வரின்அஃது இரட்டை.' 3

## வெண்பா

'செப்பல் ஓசையின் சீர்தளை சிதையாது
மெய்ப்படக் கிளந்த வெண்பா விரிப்பின்
குறள்நேர் நெடில்என மூன்றாய் அவற்றின்
இறுதி அடியே முச்சீர்த்து ஆகி
அதன்ஈற்று அசைச்சீர் எய்தி அடிவகை
ஓரிரண்டு முதலா முறைசிறந்து ஈராறு
ஏறும் என்ப இயல்பு உணர்ந்தோரே.' 4

## ஆசிரியப்பா

'ஆசிரியம் என்பது அகவலின் வழாஅது
கூறிய சீரொடும் தளையொடும் தழீஇ
முச்சீர் அடியான் ஈற்றுஅயல் நின்று
அச்சீர் அடிஇடை ஒரோவழித் தோன்றியும்
அவ்வியல்பு இன்றி மண்டிலம் ஆகியும்
மூவடி முதலா முறைசிறந்து ஏறித்
தொள்ளா யிரத்துத் தொண்ணூற்று எண்ணிரண்டு
எய்தும் என்ப இயல்பு உணர்ந்தோரே.' 5

### வஞ்சிப்பா

வஞ்சி தானே அடிவரம்பு இன்றி
எஞ்சா இசைநிலை தூங்கல் எய்தியும்
ஆசிரியம் ஆகியும் முடியும் என்ப.' 6

### அடிவரையறை

'வஞ்சி ஆசிரியம் என்றுஇரு பாட்டும்
எஞ்சா மூவடி இழிவு; உயர்வு ஆயிரம்.' 7

## பல்காப்பியம்

### சீர்வரையறை

'இயற்சீர் நேர்இறல் தன்தளை உடைய
கலிக்குஇயல் பிலவே காணுங் காலை.' 1

'வஞ்சி யுள்ளும் வந்த தாகா;
ஆயினும் ஒரோவிடத்து ஆகும் என்ப.' 2

## பனம்பாரம்

### அடிமயக்கம்

'அகத்திணை அல்வழி ஆங்குஅதன் மருங்கின்
வகுத்தன சொற்சீர் வஞ்சியொடு மயங்கும்.' 1

## பன்னிருபடலம்

### அகப்பொருளும் வஞ்சியும்

'அகத்திணை மருங்கின் அளவு மயங்கி
விதப்ப மற்றவை வேறு வேண்டி
வஞ்சி அடியின் யாத்திலர் வஞ்சி
அகத்திணை மருங்கின் அணையு மாறே.' 1

## பாட்டியல் மரபு

### ஆரிடம்

'உலகியல் செய்யுட்கு ஓதிய அளவையின்
குறையவும் விதப்பவும் குறையா ஆற்றல்
இருடிகள் மொழிதலின் ஆரிடம் என்ப.
ஆரிடச் செய்யுள் பாடுதற்கு உரியோர்
கற்றோர் அறியா அறிவுமிக்கு உடையோர்
மூவகைக் காலப் பண்பும் முறைஉணரும்
ஆற்றல் சான்ற அருந்தவத் தோரே.' 1

'மனத்தது பாடும் மாண்பி னோரும்
சினத்தில் கெடப்பாடும் செவ்வி யோரும்
முனிக்கணச் செய்யுள் மொழியவும் பெறுப.' 2

## பெரியபப்பம்

### அசைக்கு உறுப்பாவன

'உயிர்உறுப்பு உயிர்மெய் தனிநிலை எனாஅ
குறில்நெடில் அளபெடை மூவினம் எனாஅ
அஃகிய நல்லுயிர் மஃகான் குறுக்கமோடு
ஐந்துதலை யிட்ட ஐயீ ரைந்தும்
அசைதொடை நேரசை ஆகும் உறுப்புஎன
வசைஅறு புலவர் வகுத்துஉரைத் தனரே.' 1

## மாபுராணம்

### அகப்பொருளும் வஞ்சிப்பாவும்

அகத்திணை அகவயின் நிற்ப வஞ்சி
சிறப்பில எனினும் சிலவிடத்து உளவே.' 1

## வாய்ப்பியம்

### பாக்களின் வருணம்

'வெண்பா முதலா நால்வகைப் பாவும்
எஞ்சா நால்வகை வருணம் போல.' 1

'பாஇனத்து இயற்கையும் அதனோ ரற்றே.' 2

'மன்னவன் என்பது ஆசிரி யம்மே.' 3

'வெண்பா முதலா நால்வகைப் பாவும்
எஞ்சா நாற்பால் வருணர்க்கு உரிய.' 4

## சிதம்பரப் பாட்டியல்

### யாப்பின் உறுப்பு எழுத்து அசை என்பன

யாப்புவிதி எழுத்துஅசைசீர் பந்தம் அடிதொடைபா
இனம்; இவையில் குறில்நெடில்ஒற்று உயிர்மெய்உயிர் ஆய்தம்

கோப்புடைக் குற்றுகரம் குற்றிகரம் ஐஔகாரக்
குறுக்கமே வல்லினம் மெல்லினமொடு இடையினமே

நீப்பரிய உயிர்அளபு ஒற்றளபு அசையின் எழுத்தாம்;
நெடில்குறில்கள் தனித்தும் ஒற்றைஅடுத்தும் வரின்நேராம்;

சாய்ப்பரிய குறில்இணைகள் குறில்நெடில்கள் தனித்தும்
தமதுடன் ஒற்றடுத்தும் வரின் நிரைஅசையும் ஆமே. 1

### நால்வகைச் சீர்கள்

நிரல்இயற்சீர் நேர்நேர் தேமா நிரைநேர் புளிமா
நிரைநிரையே கருவிளமே நேர்நிரைகூ விளம்; பின்

வருநேர்காய் வெள்ளை, நிரை வரின்கனி வஞ்சிச்சீர்
மற்றுநேர் நிரைவரின்தண் ணிழல்நேர்நேர் தண்பூப்

*பரவுநிரை நேர்நறும்பூ நிரைநிரைவந் தக்கால்*
*பகருநறு நிழலாம்ஈ ரெட்டிவைநா லசைச்சீர்,*
*விரவும்வஞ்சி; நாள்மலர்ஓர் அசைச்சீர், ஈ ரசைச்சீர்*
*மேவியபோல் தளைதமக்கு விளங்கி மருவிடுமே.* 2

**எழுவகைத் தளைகள்**

*மருவுவிளம் முன்னர்நிரை நிரைஒன்றுஆ சிரியம்;*
*மாமுன்நேர் வரின்நேர்ஒன்று ஆசிரியத் தளையாம்;*
*விரவியகாய் முன்னர்நேர் வெண்சீர்வெண் டளையாம்;*
*மீட்டும்காய் முன்னர்நிரை கலித்தளையாம்; மின்னே!*
*கருதுகனி முன்னர்நேர் ஒன்றாத வஞ்சி;*
*கனிமுன்நிரை ஒன்றியவஞ் சித்தளையாம்; மாமுன்*
*நிரையும்விளம் முன்நேரும் இயற்சீர்வெண் டளையாம்;*
*நிழல்கனியாம் பூக்காயாம் நிகழ்பொதுச்சீர்த் தளைக்கே.* 3

**ஐவகைஅடிகள் – பாஅடிகளின் இழிபு உயர்வு –**
**அந்தாதி – இரட்டை – செந்தொடை**

*நிகழ்இருசீர் குறளடி; முச் சீர்சிந்து; நாற்சீர்*
*நேரொடுஅள வடி; ஐஞ்சீர் நெடிலடி; ஆறு ஆதி*
*திகழ்தருசீர் கழிநெடில்; வெள்ளடி இரண்டு; மூன்று*
*ஆசிரியம்; வஞ்சி மூன்று; கலி நான்குஇழிபு; பெருமை*
*அகல்பொருள்மட்டு; எழுத்துஅசைச்சீர் அடிஅந்தம் ஆதி*
*யாம்அந்தா தித்தொடையே; அடிமுழுதும் ஒருசொல்*
*புகல்வதுஇரட் டைத்தொடையாம்; மோனைமுத லாகப்*
*புகன்றதொடை புகலாது புகல்வதுசெந் தொடையே.* 4

**தொடையும் தொடை விகற்பமும்**

*தொடைஎழுவாய் எழுத்துஒன்றின் மோனை; இயைபு இறுதி;*
*சொல்லிரண்டாம் எழுத்துஒன்றின் எதுகை; பொருள் மொழிகள்*

உடன்முரணின் முரண் ; அளபு வருதல்அடி அளவே ;
உயர்இருசீர் இணைதல்இணை ; முதலொடுமூன் றுஞ்சீர்
அடைபொழிப்பு ; நடுஇருசீர் அகறல்ஒரூஉ ; அடியின்
அடர்தருமுச் சீர்கூழை ; முதல்அயற்சீர் நீங்கல்
கெடலருமேற் கதுவாயே ; ஈற்றயற்சீர் நீங்கல்
கீழ்க்கதுவாய் ; சீர்முழுதும் கிடைத்திடின்முற் றுமே. 5

## பாக்களும், வெண்பா இலக்கணமும் வகைகளும்

ஆர்வெண்பா அகவல்கலி வஞ்சிப்பா நான்கின்
அளவடிவெண் பாச்செப்பல் இசை ; முச்சீர் அந்தம்,
கூர்காசு பிறப்புநாள் மலர்முடிவு ; ஈரடிவெண்
குறள் ; குறள்வெண் பா இரண்டாய் ஓர்ஆசுஈர்ஆசு
நேருகினும் தனிச்சொல்பெற்று ஒன்றிரண்டு விகற்பம்
நேரிசைவெண் பா ; தனிச்சொல் இன்றிஅடி நான்காய்ப்
பார்விகற்பம் ஒன்றுபல இன்னிசைவெண் பா ; அப்
படிஅடிஈ ராறுவரும் பஃறொடைவெண் பாவே. 6

## கலிவெண்பா – சிந்தியல்வெண்பா – வெண்பா இனம்

பலஅடியாய் அளவுஇலவாய் ஒரூஉஎதுகை இரண்டாம்
பாதங்கள் தொறும்பெறினும் வெள்ளடிகுன் றுவாம்
கலிவெண்பா ; நேரிசை இன் னிசைபோல்மூன்று அடிமேல்
கருதப்பேர் சிந்தியல் ; ஒப்பு ஈரடிசெந் துறை ; ஈற்று
இலகுஅடிகுன் றுதல்குறட்டா ழிசை ; அடிமூன் றுய்ச்சிந்து
ஈற்றடியாய் இறல்வெண்டா ழிசை ; அடிமூன்று ஈரேழ்
குலவடிஅந் தம்குறையும் வெண்டுறை ; நான்கு அடியும்
கொண்டுஅடிகள் தொறும்தனிச்சொல் பரவல்வெளி விருத்தம். 7

### ஆசிரியப்பாவின் வகையும் இனமும்

பா அகவல் அகவல்இசை, அளவடி, ஈற் றயலில்
பாதம்முச்சீர் நேரிசை, எவ் வடியும்அளவு ஒத்தல்

அருநிலேமண் டிலம்; இடைச்சீர் குன்றல்இணைக் குறளாம்;
ஆதிநடு அந்தம்உறின் அடிமறிமண் டிலஆ

சிரியம்; மூன்று அடிஒத்தல் தாழிசை; நான்கு அடியாய்ச்
சீர்இடையில் குறைதல்இடை மடக்குஈற்று அயலின்

மருவுஅடிநைவது துறை; நான்கு அடிஒத்துஆறு ஆதி
வளர்சீர்கள் பலவருதல் ஆசிரிய விருத்தம். 8

### கலிப்பாவகை

ஆசுஇல்இசை துள்ளல், அளவடி, கலிப்பாத் தரவுஒன்று
அடைவில்தா ழிசைமூன்றும் தனிச்சொல்சுரி தகமாம்

மாசுஇலநே ரிசைஒத்தா ழிசைக்கலிப்பா; அளவே
மன்சிந்து குறள்அடித்தா ழிசைப்பின்பு வருமேல்

ஏசில்அம்போ தரங்கஒத்தா ழிசைக்கலிப்பா; இவற்றோடு
இடைஅரா கம்வரில் வண்ணகஒத்தா ழிசையே;

பேசியவெண் பாஇயைந்து சிந்தடிஈற்று அடியாய்ப்
பிறதளே தன் தளேஓசை பெறுவதுவெண் கலிப்பா. 9

### கொச்சகக்கலி, கலிப்பா இனம், வஞ்சிப்பா, வஞ்சிப்பா இனம்

பெறுதரவு, தரவிணையே, சில, பலதா ழிசையால்
பிறழ்விலவும் மயங்கினவும் அப்பெயர்க்கொச் சகமாம்;

இறுதிநீண்டு அளவுஒத்தல் பலவடிதா ழிசையே;
எழில்ஐஞ்சீர் அடிநான்கு கலித்துறை; நேரடிநான்கு

உறுதல்கலி விருத்தம்; இசை தூங்கல், அடி குறள்சிந்
தொடுதனிச்சொல் பெற்றுஅகவல் இறும்வஞ்சி; இருசீர்
அறைஅடிநான்கு ஒருமூன்று தாழிசையாம்; அவற்றுஒன்
றும்துறை; முச் சீரடிநான் காம்வஞ்சி விருத்தம். 10

### சில ஒழிபுகள்

ஆம்தளைசீர் கெடில்இகர உகரத்தேய்வு ஒற்றும்;
ஆம்; அலகு பெறுஅளவு; ஐ ஔக்குறுமை குறிலாம்;
ஏய்ந்தஉயிர் ஓரளபும் ஈரளபும் ஆகி
ஈரசையாம்; மூவசையாம்; ஒற்றளபு குறில்நேர்
சேர்ந்துஅசையாம்; ஒற்றுஇலேயேல் ஒற்றும்; ஒற்றளவாம்;
செறிவுஇல்ஈர் ஒற்றும்மூ வொற்றும் ஓர்ஒற்றும்; முன்
சார்ந்தகுறில் விட்டிசைக்கின் நேராம்; வெண் பாவெண்
டளைஅலது மயங்காது; மயங்கிடும்எப் பாவும். 11

### சிலதொடை விகற்பம் முதலியன

மயங்கும்அடி எப்பாவும், வெண்பாவுக்கு அன்றி;
மன்இனமும் தளையும்மயங்கிவரும்; அஆ ஐஔ
நயம்கொள்ளும் இஈஎ ஏஉஊ ஒஓ
ஞணனநம வசதஅநு மோனை; மெய்யும் மோனை;
இயங்கும்இனம், நெடில், வருக்கம், வரில்எதுகை மோனை;
யரலழஒற்று, ஆசிடையிட்டு; உயிரும், இரண்டு அடியும்,
தயங்கியமுன் றும்எழுத்தும், எதுகை; கடை, இணை, பின்,
சார்கூழை, இடைப்புணரும் முரண்தொடைக்கும் சாற்றே. 12

## சில சிறப்புச் செய்திகள்

*சாற்றுஎல்லை இல்லைநெடில் அடிஆதி மோனை;*
*சார்எழுவாய் எழுத்தும்அலாது அநுமோனை விதியால்;*

*தேற்றுஎதுகை மோனையுடன் வரின்சிறப்பு எத்தொடையும்;*
*சீர்இடை ஈறுஅநுவும்வரும்; தொடைகள்பலதளைகள்*

*தோற்றின்முதல் வந்தொடை யால்தளையால் பெயராம்;*
*சுருங்கும் தாழிசைதரவின்; தரவடிமூன்று இழிபே;*

*ஏற்றபா இரண்டே, வெண் பாஅகவல்; வெண்பா*
*இடத்தில்வரும் கலி; அகவல் இடத்தில்வரும் வஞ்சி.* 13

## குறட்டாழிசை, வேற்றொலி வெண்டுறை, கட்டளைக்கலித்துறை, நூற்பாஅகவல், மருட்பா என்பன

*இறுகுறளின் சிதைவும்செந் துறைஇழிபும் குறள்தா*
*ழிசையாம்; வேற்று ஒலிவரினும் வெண்டுறை; ஒற்றுஎண்ணி*

*அறைஅடிநேர் பதினாறு நிரைபதினேழ் எழுத்தாய்,*
*அடிநான்கு தொறும்வரில்கட் டளைக்கலித் துறையே;*

*உறுபொருள்சூத் திரங்குறித்த யாப்பிற்றாய் நாற்சீர்*
*ஓரடியும் பலவடியும் வரும்நூற்பா அகவல்;*

*புறநிலைவா யுறைவாழ்த்துச் செவியறிவுக் கிளைகள்*
*பொருளாய்முன் வெண்பாப்பின் அகவல்வரும் மருட்பா.* 14

## கூன், சரிதகம், செய்யுட்பெயர், எட்டுவகைவிரிவு, குவிவு, வகையுளி, விகாரம், வண்ணம் முதலியன.

*வருதனிச்சொல் கூன் பொருளோடு அடிமுன்வரும்; அதுவே,*
*வஞ்சிஈற் றினும்ஆம்; வெண் பாஅகவல் ஈற்றால்*

சரிதகமாம்; வேறும்அடியால், இசையால், கலையால்,
சூழ்எழுத்துஎண் ணல்,வகுத்த வகுப்பால், கா ரணத்தால்.

பெருகியிடும் காலவழக் கால், பலவாம் செய்யுட்
பெயர்; எழுத்து முதல்எட்டு வகைவிரிவும், குவிவும்,

பரவுவகை யுளி, விகா ரம், வண்ணம் மற்றும்
பலவும்அடங் காதுஅடக்கிப் பகருவர் சான்றவரே,

இப்பதினைந்து அகவல் விருத்தங்களும் இச்சிதம்பரப் பாட்டியலின் முதல் மூன்று இயல்களாகிய உறுப்பியல் செய்யுளியல் ஒழிபியல் என்பனவற்றைச் சார்ந்தவை. இந்நூலில் ஏனைய இயல்களாகிய பொருத்தவியல், மரபியல் என்ற இரண்டு இயல்கள் பாட்டியல் செய்திகளைப் பகருவனவாம். அவ்வியல் களின் விருத்தங்கள் இலக்கண விளக்கப் பாட்டியல் குறிப்பில் இடம் பெறும்.

இலக்கண விளக்கம் – பொருளதிகாரம்

செய்யுளியல் – பிற்சேர்க்கை – முற்றும்.

